☆ ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பு (நகல் பதிப்பு) தொகுதி VIII

☆ மக்கள் பதிப்பு

☆ 1988, ஏப்ரல்

☆ விலை :

☆ வெளியீடு : கலை பண்பாட்டுத் துறை
புதுவை அரசு.

☆ பதிப்பாக்க மேற்பார்வை : புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்
புதுவை 605 001.

☆ அச்சு : மோகனா பதிப்பகம்
புதுச்சேரி.

☆ வெளியீட்டுக் குழு : திரு. கி. இராசாராம்
திரு. ஆனந்தரங்க ரவிச்சந்தர்
திரு. பிரபஞ்சன்
திரு. செபஸ்தியான்
முனைவர் எல். இராமமூர்த்தி

பிரத்தியேகமான

# ஆனந்த ரங்கப்பிள்ளையவர்களின்

# தினப்படி சேதி குறிப்பு

சொஸ்த லிகிதம்

## எட்டாம் புத்தகம்
## பாகம் -2

வெளியீடு

ரோமன் ரோலண்டு நூலகம்

புதுவை

விலை ரூ. 2-15

# ஆனந்த ரங்கப்பிள்ளை

## வாழ்க்கைக் குறிப்பு

### 1752ஆம் செப்த்தம்பறுமீ 12௳ ஆங்கிரசு௵ ஆவணி௴ 31 செவ்வாய்கிழமை

இத்தனுள் காலத்தாலே நேத்துராத்திரிதானே துரையவர்கள் யென்னுடனே சொன்னபடிக்கு வண்ணாந்துறையில் வந்திருக்கிற பாதுஷா பர்வானாவும் வெகுமதியும் பிடிச்சுக் கொண்டுவருகிற நிமித்தியமாயி ஆனைகள் குதிரைகள் நவபத்து சங்கீதமேளம் நட்டு முட்டுக்காறர் முதலான சாஞ்சாமியை முஸ்தித்து பண்ணி வைக்கச்சொல்லு வோமென்று நாஙெனன்கச்சேரியே போனேன். இதிலே மழை வந்த படியினாலே மோசூப்பு ஆச்சுது அப்பால் நான் துரையவர்கள் அண்டைக்குப்போய் குஸ்துமாதுபடிக்கு கபுறுகள் சொன்ன பிற்பாடு துறையவர்கள் மேலெழுதப்பட்ட சாஞ்சாமி செய்விக்கிறதுக்கு யிப்போ மழைவந்துதே ஆனபடியினாலே பகலுக்கு மேலாக நாலு மணிக்கு முஸ்தீது பண்ணச் சொல்லென்று சொன்னார். நல்லதென்று சொல்லிப்போட்டு யென் கச்சேரியே வந்து அவரவர்களை யழைப்பிச்சு ஆனைகள் குதிரைகள் நவபொத்துமாயி மருததப்பு பயிறக்குகள் சங்கீத மேளம் முதலான சாம்சாமியெல்லாம் நாலு மணிக்கு தயார் பண்ண சொல்லி தாக்கீதாய்ச் சொல்லி மேலெழுதப்பட்ட சான்சாமியை சீக்கிறமத்துக்கு முஸ்தீது பண்ணவிக்கச் சொல்லி யனுப்பிப்போட்டு அப்பால் நான் அரை நாழிகை நேரம் நித்திரை போயப்பால் யெழுந்திருந்து என் கச்சேரியே போனேன். யிவடத்தில் சகல சான்சாமியும் முஸ்தீதுவாயிருந்தது அதைப் பார்த்துப் போட்டு அப்பால் நான் சென்னப் பட்டணத்து வாசற்படியண்டையிலே போட்டிருந்த டேராவிலே போயிருந்தேன் வண்ணாந்துரையிலே வந்திருக்கிற பாதுசாவினுடைய பர்வானாவும் வெகுமானமும் கொண்டுவந்த மொகுலன் யூசு பாஷக்கானுக்கு (Yusuf-Bashi-Khan)ச் சொல்லியனுப்பிச்சு முஸ்தீதாயிருக்கச்சொல்லி சொல்லியனுப்பிவைச்சேன். அப்பால் நாலுமணிக்கு துரையவர்கள் டேருவுக்குவரத்தக்கதாக வீடுவிட்டுப் பிறப்பட்டு புதுசாய் வந்த பாதிரியார் பிசப்பு அங்கோர்ணி யென்கிற வரும் சின்னதுரை முதலான கோன்சேலியோர்கள் பின்னையும் படுத்தி குலார்—வெள்ளைக்காறர்களும் சந்தா சாயபு குமாரன் ரசா சாயபு அல்லி நக்கிம் சாயபு பங்காளத்து சுபேதாரன் பத்தல்லிக்கான் மூசபர் கான் மகன் அசனதின்கான் மருமகன் செலிமுல்லாவும் சேக்கு யிபுரும் மகனும் அல்லிகானும் மீறுசா அபுல் நபிபேக்கு வகைறா சமேதாறர்களும் குவாடுது வெள்ளைக்காறர்களும் குதிரை சுவார்களும் பாறுக்காறர்களும் துலுக்க சிப்பாயிகளும் ஆனைகள் குதிரைகள் நவபத்துமாயி மருத்தப்பு ஆனையின் பேரிலே தக்கிபடி நிசான் பயிரக்குகள் அம்பாரிவைத்து—ஆனைகள் இது முதலான சங்கீத மேளம் பிறுகளுடனேயும் துரையவர்கள் போன முஸ்தீது செய்த கூண்டின் பேரிலேறிக்கொண்டு யிருபுறமும் வெண்சாமரங்கள் போடத்தக்கதாகவும் சகல சம்பிறமத்துடனேயும் பிறப்பட்டு கனகருடைய லியார் வீட்டுக்கு செவ்வையாய்

A. D. IX'I

வந்து கடைத் தெருவண்டை சென்னப்பட்டணத்து வாசற்படி ரூச வீதியிலே—வடக்கே பிறப்பட்டு வந்து டேராவிலே உளுக்கார்ந்துக்கொண்டு அப்பால் தாமும் ரூசா சாயபும் கோட்டை வாசற்படிக்கு மேலே கட்டியிருக்கிற உப்பரிகையின்பேரிலே போயிருந்துகொண்டு மத்தப்பேர் பாதிரியார் சின்னதுரை முதலான கோன்சேலியோர்களையும் படுத்திலோர் வெள்ளைக்காறர்களையுஞ் சகலமான பேர்களையும் பிறுதுகளையும் வண்ணூந்துரைக்கு அனுப்பிவிச்சு பெகுமானம் யெடுப்பிச்சுக்கொண்டு வரத்தக்கதாகப் போகச் சொல்லி உத்தாரங்கொடுத்தபடிக்கு பிறப்பட்டு சகலமானபேரும் வண்ணூந்துரைக்குப் போய் பர்வானாவுடன் பெகுமானமும் துரையவர்கள் பல்லக்கின்பேரிலே வைத்துக்கொண்டு வந்தார்கள். சமீபத்திலே வரச்சே நான் போய் துரையவர்களுடனே யெச்சரித்தவுடனே அவரும் ரசா சாயபும் டேராவுக்கு வந்தார்கள் யிதிலே பெகுமானத்தையுங் கொண்டு கொணடு மொகுலனும் டேறாவிலே வந்தான். வந்தவுடனே கோட்டையின்பேரிலேயுங் கப்பல்கள் பேரிலேயும் இருபத்தோரு பீரங்கி விழுக்காடு போட்டார்கள். துரையவர்களுக்கு பாதுசாவினுடைய பர்வானாவும் வெகுமானம் கலக்கித் துறாயிம் றத்தனமிழைத்த கத்தியுஞ் சிறு பேஷும் வகைவிரா நகைகளும் சிறுப்பாவும் மொகுலன் கொடுத்தான் அதைத் துரையவர்கள் வாங்கிக்கொண்டு சிரசாவகித்தார்கள் அப்பவுங் கோட்டையின் பேரிலேயுமிருபத்தோரு பீறங்கி விழுக்காடு போட்டார்கள். வெகுமானம் வந்ததினிசுகளுக்கு வயணம்:

| | |
|---|---|
| வயிரமிழைத்த கலிக்கீத்துறாயி — — — — — — — — | 1 |
| கெம்பு பச்சையுமிழைத்த பிடி போட்ட கத்தி — — — — | 1 |
| டால் — — — — — — — — — — — — — | 1 |
| தற்கஷ்த்து — — — — — — — — — — — | 1 |
| கமான் — — — — — — — — — — — — | 1 |
| மகத்தாபி நகை — — — — — — — — — — — | 7 |

இந்தப்படிக்கு வந்த பாதுசாவுடைய வெகுமானத்தை துரையவர்கள் அங்கிகரிச்சார்கள்.

அப்பால் டேறாவிலே துரையவர்களுக்கு நதிர்வைத்தார்கள் அவர்கள் பேர் வயனம்:—

| | | |
|---|---|---|
| நான் துரையவர்களுக்கு நதிர்வைத்தது மொகரு — — — | | 21 |
| அன்னுசாமி மொகரு — — — — — — — — — — | | 10 |
| அப்பாவு மொகரு — — — — — — — — — — — | | 5 |
| ரசா சாயபு நதிர் — — — — — — — — — — | வி | 7 |
| அல்லி நமக்கீம் சாயபு — — — — — — — — — | வி | 5 |

இதல்லாமல் துரையவர்கள் கோன்சேலியோர்களையும் படுத்திகுலார் வெள்ளைக்காறர்களையும் கப்பல் கப்பித்தான் மார்களையும் தமக்கு நதிர்வைக்கச் சொல்லி விஜயகப்பிள்ளையை அழைத்து நூத்தண்டது மொகருவும் அறுநூறுரூபாயும் கொடுக்கச் சொல்லியும் அவர்களை

நதீர்வைக்கச்சொல்லியும் திட்டப்படுத்தினபடிக்கு டேராவிலே சின்னதுரைமுதலான சிறிது வெள்ளைக்காரர் அவ்வஞ்சு மோகருவும் அவ்வாறு ரூபாயும் நதீர்வைத்தார்கள் ஆக டேராவிலே நதீர் வந்தது மொகரு;—184—விராகன்: 12,ரூபா 204. இந்தப்படிக்கு நதீர்வைத்தான பிற்பாடு துரையவர்கள் பிறப்பட்டு கூண்டும் பேரிலேயேறிக் கொண்டார். பிசப்பு பாதிரியார் சின்னத்துரை முதலான கோன்சேலியேர்கள்படுத்திகுலார் வெள்ளைக்காறர் பின்னையும் மேலெழுதப்பட்ட சமஸ்தானபேர்களும் பிறப்பட்டார்கள் சகலமானது பிறுதுகளுடனேயும் துரையவர்கள் பல்லக்கின் பேரிலே பாதுசா பர்வா... வும் பெருமானமும் வைத்துக் கோண்டு பிறப்பட்டு ராசபதியால் வருகிறபோது துரையவர்கள் அறுநூறு வெள்ளிப்பொன்னும் இறநூறுரூபாயும் திருகுமொகுலன் கையில் கொடுத்து பிஷைக்காறர்களுக்கு கைகொண்ட மட்டுக்கும் எடுத்துப்போட்டுக்கொண்டு வரச்சொல்லி உத்தாரங்கொடுத்த படிக்கு போட்டுக்கொண்டு வந்தார்கள். இறநூறு ரூபாயும் அறுநூறு பொன்னும் ஆயிரம்ரூபாயாச்சுது. அப்பால் துரையவர்கள் வீட்டுக்கு வந்தவுடனே கோட்டையிலேயும் கப்பல்களிலேயும் இருபத்தோரு பீரங்கி வி...காடு போட்டார்கள் அப்பால் வீட்டிலே நதீர்வைத்தப்பேர்வயசு —

ஒழுகரை அழிசப்பாக்கம் வகையிரா குண்டுகிருமத்தார்—வி—50

கும்பினீர் வற்த்தகர்கள்——————வி—150

பாப்பய்யப்பிள்ளை ——————50

ஷெய்யான் மதாருக்கு ————50

ஷெய்யான் மகன் துரையவர்களுக்கு ——————11

மதாருக்கு——————11

சாவுக்காரவல்லசுக்தரு குமாஸ்தாஞ கன்னநாயக்கன் வி—11

கோவற்த்தனதாசு குமாஸ்பா திம்மன்னநாயக்கன்வி—5

டங்காசாலையார்——————1 0வி

வெள்ளைக்காறர் டேராவிலே நதீர்வைத்தபோர்போகமத்தபேர் வீட்டிலே வைத்தவர்கள் பின்னையும் அவரவர்கள் ரூபாயும் விராகனும் நதீர்வைத்தார்கள் ஆகநதீர் வீட்டிலே—வி 394—ரூபாய் 144. அப்பால் வந்த மொகுலனுக்கும் அவனுடனே கூடவந்த பேருக்கும் பன்னீர் பாக்கு வெத்திலை கொடுத்து முத்தையபிள்ளை விடு விடுது முஸ்தீதுபண்ணியிருக்கிறபடியினாலே அந்த விடுதியே போக.. சொல்லி துரையவர்கள் சொன்னதுக்கு இன்னைக்கு வன்ரு.. துரையிலேதானே போயிருந்து நாளைய தினம் காலமே விடுதிய வருகிறேனென்று சொன்னான் அப்பால் முசியே திலார்சுவை துரையவர்கள கூடக்கூட்டிப்போகச்சொல்லி அனுப்பிவிச்சார் அந்தப் படிக்கு அனுப்பிவிச்சுக்கொண்டு மொகுலன் போனான். அப்பால் நான் துரையவர்களுடனே அவரவர்கள் சாவடி கிட்டங்கிலேயும் நயினர் வீட்டிலேயும் அடைபட்டு காவலிலேயிருக்கிறபேர்களை விட்டுவிடச்சொல்ல வேணுமென்று சொன்னேன் நல்லது நாளைக்கு விட்டுவிடச் சொல்லுகிறேனென்று சொன்னார்.

1752ஆம் செப்தம்புறுமீ 13௳ ஆங்கீரசவருஷம் பிறட்டாசிமீ 1௳ புதவாரம்.

இத்தனாள் காலத்தாலே பத்துமணிக்கு துரையவர்கள் வெளுர் இருந்து ஆனவுடனே நான் போய் கபுறு சொல்லி வந்தேன். அப்பால் பாதுசா பர்வானு வந்த காகிதத்தைப் படிச்சுப் பார்த்த உடனே அதிலெழுதியிருந்தபடிக்கும் பாரிசிலே ஒரு நக்கலும் அதைத் தமிழ்ப்படுத்தினதும் யிதின்கீழேயெழுதியிருக்குது. பாத்துக்கொண்டுவந்தால் பயாவாறு தெரியவருமென்று அதனுடைய அற்த்தம் விஸ்தரிச்சுயெழுதவில்லை. காகிதத்தைப் பார்த்த உடனே துரையவர்களுக்கு அதிக சந்தோஷமாய் முன் யிதாவத்து மொகதின்கான் சலாபத்து சங்கு உங்களுக்கு யென்னென்ன நடப்பிச்சுயிருக்கிறார்களோ அதுவும் யினிமேல் சலாபத்து சங்கு யென்ன நடத்துகிறானோ அதுவும் நமக்கும் சம்மதி. அந்தப்படிக்கு நீங்கள் கெட்டியாய் நடப்பிற்சுக் கொள்ளாமல் சலாபத்து சங்குடனேகூடயிருந்து தக்கன ராச்சியெமெல்லாம் (Deccan) பந்து பஸ்து பண்ணவுமென்றும் அவருடனேகூட நீரும் யிவ்விடத்துக்கு வந்தாலும் உம்மைப் பார்க்கலாமென்றும் பார்க்கவேணும்மென்று மிகுந்த பஷமிருக்கு தென்றும் உம்முட பாதிரிக்கும் உம்முட தைரியத்துக்கும் வெகு சந்தோஷப்பட்டோம் யென்றும் பின்னையும் இப்படியாக யெழுதியிருக்குதென்று துரையவர்கவென்னையழைத்துச் சொல்லிப்பாத்தியா இந்தியாவிலே ஆறுக்காகிலும் யித்தனை மரியாதையாய் இத்தனை அதிகாரமாய் பாதுசா வென்கிறவன் யெழுதுகுறதுண்டா வென்று கேட்டார். உம்மை யாராகிலும் ஒருத்தருக்கொருத்தர்—கெத்துக் குண்டா யிருந்தாலும் யினிமேல் ஒருத்தன் உண்டானாலும் எழுதப் படுமொவறுஞ்சொல்லி பின்னையுஞ் சொல்லித் தக்க மரியாதையாயி யெப்படியோ அப்படி சொல்லி ஆசாரம் பண்ணினேன் ரெண்டு பாரம் சர்க்கரை வாங்கி ஊரிலே சமஸ்தமான பேர்களுக்கும் பங்கிடச்சொல்லுவென்று சொன்னார். நல்லதய்யா வென்று சொல்லி சாவடிக் கணக்குப்பிள்ளைகளை யழைப்பிச்சு சர்க்கரை பங்கிடச் சொல்லி உத்தாரம் கொடுத்து அனுப்பிவிச்சேன்.

இது சந்துக்கட்டென்று அய்யாயிவைதவிட உன்னதம் யில்லையே யிந்த சந்தோஷ வேளையிலே காவல்கூடத்திலிருக்கிறபோர்களை விட்டுவிடச்சொல்லக் கட்டளையிடவேணுமென்று சொன்னேன். பகலுக்கு மேலாக விட்டுவிடச் சொல்லுகிறேனென்று சொன்னார். நல்லதய்யாவென்று பிறப்பட்டுயென்கச்சேரியே வந்தேன். நான் வந்த அரை நாழிகைக்கு கேழ்விப்பட்ட சேதியென்ன வென்றால் பாதுசாபர்வானு படிச்சபேர்களுக்கு பெருமானம் பதினாயிரம் யிருபதினாயிரம் கொடுக்கிற வாடிக்கை-சீறேப்பாவுங் கொவிசுங் கொடுக்க வேணுமென்று அதுக்குத்தக்க பேரைக் கொண்டு சொல்லி விச்சதின் பேரிலே—சீறேப்பா ஒன்று யிருபது விறுகவிடை கொலுசுங்குடுத்து கழுத்திலே போட்டதாய் கபுறு வந்து சொன்னார்கள்.

இதல்லாமல் யிப்போ வந்த பாதுசா பர்வானுப்படிக்கு—சவாது களெழுதி சமேதாறர் கில்லேதாறர் வகையிரார்கள் யெத்தனே பேர்களுண்டோ அவர்களுக்கெல்லாம் கொடுத்து அனுப்பவேணு மென்றும் துரையவர்களுக்குச் சொன்னதுக்கு அந்தப்படிக்கு எழுதியனுப்பச் சொல்லியும் மதனுந்தபண்டிதனுடனே சொல்லி அப்பால் முசியே தேலார்ஷையும் அழைக்கச் சொல்லச் சொன்னுர் இந்தச் சாடை பார்த்தால் பாதுசாபர்வானுவை-மமுதல்லிக்கான் தேவனும்பட்டனத்து துரையுடனே அவனன் டைக்கு குடுத்தனுப்புகுற சாடைக்காகவென்று தோத்துது பாரிசு பாஷையிலே யிருந்ததை மொழி பெயர்த்து எழுதினது.

## 1752ஞு செப்த்தம்புறுமீ 13உ ஆங்கிரசுஞு பிறட்டாசிமீ 1உ

பாதுசா பர்வானு துறையவர்களுக்கு வந்ததுக்கு நக்கல் கடவுள் கடாஷ்ஷியம் பெற்று ராசாவானவர் பெரியதனம் பெற்ற கோவற்னதோற் பாதுர்சாபர்சங்கென்பவருக்கு-றசப்பிமீ 11உ. அஞ்சாம்குலுசில் யெழுதின கனம் பொருந்திய—காகிதமென்ன வென்றல் நம்மிடத்தில் கிருபையும் சனுவும் அடையவேணு மென்று காத்துக்கொண்டிருக்கப்பட்ட வருமாய் கப்பித்தான் கோவற்ண தொருமான மௌனுல் பாகதூர்—சர்பர்சங்கு என்கிறவர் அறிய வேண்டியது. எங்கள் ராசரீகத்தின் பேரிலே உண்மையான—உம்முடை நன்மையான பிறயத்தினங்களென் சங்கதிகளே குறித்து நமக்கு—றகசிய சினேகிதனுமாய் சரிக்கத்தைச் சேர்ந்த ஆலோசனைக் காறர்களில் ஒருவனுமான அசர—புத்தி—வுலாபாதர் சலாபத்துசங் கென்பவருக்கு ரெண்டாம் விசை நமக்கு யெழுதின மகிமை பொருந்திய அறசி நமது சமூகத்தில் வந்து சேர்ந்து புகழ்ச்சிக் குரியதாயாச்சுது. ஆகையால் ருசாவின் கிருபையானது உமது மட்டில் நாளுக்கு நாள் அதிகமாய் நடக்குமென்று எண்ணி ஷெ—ஆசரத்தவுலாயை நீர் பிருன்சின் நேசமென்றெண்ணி அவருக்கு செய்யவேண்டிய உதவி ஒத்தாசை மட்டில் உயிரை யிழக்கிறதினுலே அவருடைய தயவுவையும் சனுவையும் நீரெவ்வெளவு சம்பாதித்துக் கொள்ளுவீரோ அவ்வளவும் நமது தயவும் சனுவுந்தானென் றெண்ண வேண்டியது இதுவுமல்லாமல் நமது நேசத்துக்குத் தகுந்தவனுகிய அசாபுத்தவுலா (Asafun-daulah) நமது கனம் பொருந்திய, சமூகத்துக்கு வரும் தருணத்திலே நீரும் அவரோடே கூடவருகிறதில் உமக்கு வேண்டிய காரியத்துக்கு உம்முடயநலம் அதிகப்படுமென்று எண்ணவேண்டியது மேலும் ஷெ—அசரத்தவுலா உங்கள் மட்டில் நடக்கவேண்டிய ஆலோசனையைக் குறித்து எழுதப் பட்ட விண்ணப்பமும் ஏந்துகொள்ளப்பட்டுது.

## 1752ஞு செப்த்தம்பர்மீ 15உ ஆங்கிரசுஞு பிறட்டாசிமீ 3உ சுக்கிறவாரம்

இத்தானுள் காலத்தாலே துரையவர்கள் அண்டைக்குப் போன வுடன் கபுறுகள் சொல்லியான பிறகு யென்னசேதி யென்று கேட்டார். மமுதல்லிக்கான் லஸ்கர் பாகூர் விட்டு—பெண்ணையாறு

கரைக்கு யிப்பறம் போய் கொண்டூர் தோப்பு முதல் திருவந்தீ புரத்துக் கெடிலம் ஆற்றுக்கு அக்கரையிலும் யிப்படியா மழதல்லிக்கான் பவுன்சு போயிறங்கினார்களென்று கபுறு சொன்னார்கள் மழுதல்லிக்கான் டேரா தேவனாம்பட்டணம் குண்டு சாலையைப் பிடிச்சுக்கொண்டு திருமகேந்திரபுரத்துக்கு நடுமைய்யமாக டேவு போட்டார்கள்.

அப்பால் நமக்கு வந்த பாதுசாபர்வானா இதுவரைக்கும் ஒருத்தருக்கும் யிப்படிப்பட்ட பர்வானா வந்ததில்லை அதிலும் அருசு தாலுக்காகிதத்திலே யெழுதியிருக்குது யிப்படி ஒருத்தருக்கும் யெழுதத்தக்கதில்லை பாதுசாவுக்கு சமான சுக்கந்தமாயிருக்கிற போகனுக்கு யெழுதுகிற காகிதத்திலே யெழுதினது துலுக்கர்கள் கூட ஆச்சரியப்படுகிறார்கள் என்று சொன்னார் யெனக்கொக்க ஆச்சரியமாயிருக்கிறதுக்குக் காரணமில்லை வரையிலே அபரங்கா பாதுசா பட்டத்துக்கு உளுக்கார்ந்து யிந்த ராச்சியமெல்லாம் தன் குடையின்கீழே செலுத்திவிச்சுக்கொண்ட பிற்பாடு டில்லி தக்குத்துக்கு பாசுப்பகான் பாதுசா னாதர்சாவைத் தொட்டு (Nadir-shah-ot-deshan) ஒரு தர பயமுண்டாச்சுது. அவன் தானே வெகு பவுன்சு கூட கொண்டு வந்துதுமல்லாமல நிசாமன்முலுக்கு சாதுக்கான் முதலான பேர்களுங்களுக்குள்ளே துரோகம் பண்ணினதின் பேரிலே நாசறுசாவுக்குப் பயபபடடுது. அப்படிப்பட்ட தக்குத்து நீர் யிங்கேதானேயிருக்க உம்முட பவுன்சு டில்லிக்குப் போகாமலும் உம்முட பேர் சொன்னமாத்திரத்திலே டில்லி தக்குத்துகூட அதன் பேரிலே யிருக்கிற அகம்மது சா பாதுசா (Ahama -shah Padhah) கூட அந்தப்பட்டணம்கூட அதுக்குச் செல்லப்பட்ட ராச்சியம் யெவ்வளவு உண்டோ அவ்வளவும் நடுநடுங்கி உம்முட சரணாகதி யென்று அபயமடைந்திருக்கச்சே அகமது சா பாதுசா உங்களுக்கு உபசாரம் யெழுதுகுறதும் அருசுதாஸ்து காகிதங்கள் பேரில் எழுதுகிறது என்ன ஆச்சரியமென்று தோத்துதென்று சொன்னதுக்கு நகைச்சுக்கொண்டு நான் சொன்னதுக்கு சந்தோஷப்பட்டுக் கொண்டு மதாம் காம்பிறாவிலே போனார். நானும் என் கச்சேரியே வந்தேன்.

## 1752ஹு செப்தம்பறுமீ 18வ ஆங்கிரசஹு பிறட்டாசிமீ 6வ சோமவாரம்

இத்தனாள் இதல்லாமல் சென்னப்பட்டிணத்திலிருந்து இங்கிலீசுக்காறர் பவுன்சு பிறப்பட்டுக் கடற்கரையோரமாய் கோவணத்தண்டை வந்து சண்டைக்கு வந்தாப்போலேயும் கிட்ட வந்தவுடனே கோட்டையிலே யிருக்கிற நம்முட மனுஷர் முசியே பிளாம் (Mr. Le Blanc) முதான பேர் சாக்கிறுதையாயிருந்து பீறங்கி துப்பாக்கிகள் சுட்டவுடனே யிங்கிலீசுக்காறர் முறிஞ்சு உப்புக் கழிக்கு அப்பாலேயிருக்கிற அங்கப்பிள்ளை மண்டபத்திலே போயிறங்கினார்களென்றும் செங்கல்பட்டு கோட்டையிலேயிருக்கிற நம்முட தாலுக்கு பவுன்சு வந்து விழப்போறார்களென்று அதுவொரு பயம் பிடிச்சிருக்கிறார்கள்யென்று யென் மனுஷர் பார்த்து வந்து வாயி விசேஷமாய்ச் சொன்னார்களென்று சொன்னதுக்கு மெய்தான்

செங்கல்பட்டிலே யிருக்கிற முசே மிலோனைப் பவுன்சுடனே போய் விழுந்து சண்டை பண்ணுகிறதுக்கு போறேனென்று, யெனக்கு யெழுதி யனுப்பிவிச்சான்--அந்தப்படியே சண்டை பண்ணாமல் தம்பிப் பேச்சாயிருக்கச் சொல்லியுமிவ்விடத்திலிருந்து பவுன்சு அனுப்பி விக்குறேமென்று யெழுதியனுப்பிவிக்குறேனென்று சொன்னார். இத்தனாள் அல்லிக்கானுக்கு துரையவர்கள் யிப்போ யிருக்கிற சிப்பாயிகளுக்கெல்லாம் சிப்பாயி கப்பித்தானை யிருக்கச்சொல்லி யும் வண்ணானும் அம்பட்டனுமாயிருக்கிற பேர்களையெல்லாம் வாங்கிப்போட்டு நல்ல கெட்டிக்காறர்களாய் வாக்காப்பாயிருக்கிற பேர்களை வைத்துக்கொள்ளச் சொல்லியும் யிப்போ முன்னூறு குதிரை சுவார்களிருக்கிறப்போலே யாச்சுதே யின்னம் இறநூறு குதிரை சுவார்கள் வைக்கிறதுக்கு உத்தாரங் கொடுக்கிறோமென்று சொல்லி திட்டம் பண்றதாய்ச் சொன்னார்கள்.

## 1752ஆம் செப்டம்புறம் 20உ ஆங்கிரசு ஆம் பிறட்டாசிமீ 8உ புதவாரம்

இத்தனாள் மறுட்டியக் குதிரைக்காறர் மேற்கே வந்த சேமங்கலம் (Samangalam) பறங்கிணி (Parangani) முதலான யிடங்கள் கொள்ளை யிட்ட கபுறு துரையவர்களுக்கு வந்தபடியினாலே இத்தனாள் சாயங் காலம் ஆரு மணிக்குத்தானே வழுதாவூர் வாசற்படியும் வில்லிய நெல்லூர் வாசற்படியுஞ் சாத்திப்போட்டு சென்னப்பட்டணத்து வாசற்படியும் பெரிய கதவுஞ் சாத்தி திட்டிக்கதவு மாத்திரம் திறந்து வைக்கச்சொல்லி உத்தாரமானபடிக்கு வழுதாவூர் வாசற் படியும் வில்லியநெல்லூர் வாசற்படியுஞ் சாத்திப்போட்டு சென்னப் பட்டணத்து வாசற்படி--திட்டி மாத்திரம் திறந்து வைத்தார்கள்.

இத்தனாள் துரையவர்களுக்கு சரீரம் சுவஸ்தமில்லாமலிருந்த படியினாலே தெருவாசற்படிக்கதவை சாத்திப்போட்டு போக்கு வரத்துச்கு--குசினிவழியா யிருந்தபடியினாலே நானுமப்படி தானே துரையவர்களண்டைக்குப்போய் கான்பிச்சுக் கொண்டு பேசிக் கொண்டிருக்கச்சே ஒரு சேவுகன் செங்கல்பட்டிலிருந்து முசியே மிலோமெனக் கெழுதின காகிதங் கொண்டுவந்து துரையவர்கள் வீட்டிலே--நான் யிருக்கச்சே தானே கொண்டு வந்து கொடுத்தான்- அந்தக்காகிதத்தை துரையவர்கள் வாங்கிப்பார்த்து முசியே றெங்கப்பிள்ளை உனக்கு வந்த காகித மென்று யென்கையில் கொடுக்க வந்தார். நீங்கள்தானே பார்க்கலாமென்று சொன்னேன் அப்பால் துரையவர்கள் அந்தக் காகிதத்தை அவிழ்த்துப்பார்த்த விடத்தில் அதிலிருந்த மத்தலப்பு-கோவளத்திலே முசியே பிளாமை யாமாரி சாக்கிறதையாக யில்லாமல் தப்பியிருந்தபடியினாலே யிங்கிலீசுக்காறர்கள் கோட்டைக்குச் சமீபமாய் வந்து மோறசாக்கள் போட்டுக்கொண்டு சண்டைபண்ணத்தக்கதாக வந்து-நானவிடத்திலே யிருந்தேனென்றால் யிங்கிலீசுக்காறர் கழிக்கு அப்பால் வரச்சே தானே போயி சண்டை பண்ணி துரத்திவிட வேண்டுமென்றும் பின்னையும் கிருஷ்ணப்பிள்ளை பேரிலே முசியே பிளாம் பண்ணுகுற குரூரகாரியமும் பின்னையும் யிதுக்கு அடுத்ததுகளாக சவிஸ்தாரமாக

யெழுதியனுப்பின மத்தலப்பு பார்த்துக்கொண்டு யென்னுடனே அதாம்படியே சொன்னார். அப்படியாவென்று சொன்னேன். அப்பாயிவர் மதாம் காம்பிராவிலே போனார்-நானும் வெளியே வந்தேன்.

மேலே யெழுதப்பட்ட முசியே மிலோம் காகிதமெனக்கு கொண்டுவந்த முத்துயென்கிற சேவுகன் வந்து நான் கிருஷ்ணப் பிள்ளை அண்டையிலிருக்கிற சேவுகல்வர-உங்களுக்கு ஒரு காகிதம் கொடுத்தான் அதை வாங்கிக் கொண்டு செங்கல்பட்டுக்கு வந்து அனந்தப்பசேர்வைக்காறன் பேரன் பிரகாசனென்கிறவன்-ஒரு காகிதமும் முத்தப்பிள்ளைக்கு ஒரு காகிமும் கொடுத்தார்கள்-அதை வாங்கிக்கொண்டு வந்தேனென்று அந்தக்காகிதங்களும் என்கையில் கொடுத்து அவையாவது விசேஷமாய் சொன்னது யென்னவென்றால் நாளது பிறட்டாசிமீ 3௳ சுக்கிறவாரம் சாயங்காலம் யிங்கிறேசுக் காறர் பவுன்சு-அங்கப்பிள்ளை சாவடி வந்து சேர்ந்து நாலாந் தேதி படேசாயபு தோட்டம் போயி சேர்ந்து அவ்விடத்திலிருந்து கோட்டையின் பேரிலே-நாலுமுகம் மோற்சாக்கள் போட்டுக் கொண்டு 4-5-6-7 தேதிகள் மத்தியான வரைக்கும் நல்ல சண்டை பண்ணி அப்பால் நிறுவாகம் பண்ணுகுறதுக்கு வராமல் முசியே பிளாம் யிங்கிறேசுக்காறருடனே கவில்பேசின-7௳ மங்களவாரம் சாயங்காலம் கோவளங்கோட்டையை முசியே பிளாமிங்கிறேசுக் காறர் வசத்திலே-ஒப்பிச்சுப்போட்டு வந்துவிட்டான். 8௳ புதவாரம் செங்கல்பட்டிலே யிருந்து முசியே பிலோம் அனுப்ப முசியே சென்சிசோர் என்கிறவன் அன்னூறு அறுநூறு பேரை சிப்பாயிகளைக் கூட்டிக்கொண்டு கோவளங்கோட்டை யிங்கிறேசுக்காறர் வசமான கபுறு அரியாமல் வந்தான். அந்தசாடை கோவளங்கோட்டை யிலிருந்த மேஸ்தர் கிலேசு-(Mr. Lesue) இங்கிலீசுக்காறர் கொம்மாந்தாமறிந்து கோட்டையின் பேரிலே வெள்ளைக்கொடி போட்டு ஒரு பீரங்கிபோட்டான். அதின் பேரிலே நம்முடைய பவுன்சுக்கு தலைவனாகவந்த முசே சென்சிசோரென்கிறவன் (St. Germain) தன் பவுன்சுடனே கோட்டையண்டையிலே போனான். அந்த மட்டுக்கும் அவர்கள் சும்மாயிருந்து கிட்டவந்தவுடனே நாலு பக்கமுஞ்சுத்திக்கொண்டு பீரங்கிகளினாலேயுஞ்சுட்டதின் பேரிலே யிவர்களும் மோசம் போனோம் என்று அறிஞ்சு அப்பால் சண்டையும் பண்ணினார்கள் வெகுபேர் செத்தமாத்திரத்திலே-நிறுவாகத்துக்கு வராமல் தப்பினவர்களுடனே முசியே சேஞ்சோர்-(St. Germain)ஓடிப்போய் விட்டானென்று யிப்படிப்பட்ட சேதி சொன்னான். அவன் கொண்டு வந்தக் காகிதங்களிலேயும் மேலே எழுதப்பட்ட மத்தலப்பே அல்லாமல் வித்தியாசமில்லை. அதின் பேரிலே நான் துரையவர்களண்டைக்குப்போய் துரையவர்களுடனே பிறகாசனென்கிறவன் யெனக்கு யெழுதின காகிதமனுப்பினான் அந்த காகிதத்திலே 7௳ சாயங்காலம் கோவணத்துக்கோட்டை யிங்கிலீசுக் காறர் வசமாச்சுதாமென்று மேலே எழுதப்பட்ட வயணப்படிக்குச்சொன்னது மல்லால் வந்த சேவுகனையும் துரையவர்கள் முன்பாக விட்டதுக்கு அவனும் பிறஞ்சுவார்த்தையிலே சொன்னான் அப்பால் துரையவர்கள் சொன்னது 7௳க்கு செத்தோம்புறுமீ 20௳ முசியே சேன் சோறேன்கிறவன் எனக்கெழுதின காகிதத்திலே தான் பவுன்சுடனே வந்து திருப்போரூர் அந்த வட்டங்களிலே

பிறங்கி யிற நூறு பேர்களுடனே யிங்கிலீசுக்காறர்—பவுன்சும் போரிலே போனேன் அவர்களெதுத்து சண்டை பண்ணுகிறதுக்கு பெலமில்லாமல் போய்விட்டார்கள் ஆனபடியினாலே யின்றுராத்திரி நான் போயி பவுன்சுடனே விழுந்து சண்டைபண்ணி துரத்தி விடுகிறேனென்றும் யெழுதினதுமல்லாமல் முசியே பிளாம் எனக் கெழுதின காகிதத்திலேயுந்தான் சாகிறமட்டுமாயிருந்து சண்டை பண்ணுகிறேன் நீங்கள் சீர்மை கப்பல் அனுப்பிவிக்கிறோமென்று யெழுதினீர்களே அந்தக் காகிதம் பார்த்துக்கொண்டவுடனே வெகு உச்சாகமாயிருக்கிறோம் தாங்களப்படியே கப்பலை யனுப்பி விச்சால் சத்துருக்களை அடிச்சு துரத்தி செயம் பண்ணுகிறோ மென்று யெழுதியனுப்பினான் யிதல்லாமல் மயிலாப்பூரிலிருந்து வந்த சோபுகாரனும் தான் வரச்சே 8௨ கோவளத்துக்கோட்டை யிலே வெள்ளைக்கொடி போட்டிருக்குது மறாட்டவர்கள் நல்ல சண்டை பண்ணுகிறார்களென்று சொல்லுகிறபடி யாறு வந்திருக்கச்சே 7௨ சாயங்காலந்தானே கோட்டை யிங்கிலீசுக் காறர் வசமாயிப் போச்சுதென்று யெழுதிவந்ததென்று சொல்லுகிறாய் அப்படியானால் யெனக்கு வாரதாவென்று துரை யென்னுடனே சொன்னார். அதுக்கு நான். ஏமூாங்கேதிக்கு யெழுதி வந்ததிலேயும் அப்படிதானே யெழுயிருக்குது யிவன்சொல்லுகிறது மப்படிதான் சொல்லுகிறானென்று சொன்னேன். ஆனால் கிட்ட யிருந்து பார்த்து வந்து யெழுதின சமாச்சாரமல்லவே சதுரங்கப் பட்டணத்திலிருந்து அல்லவோ எழுதி வந்தது இன்னம் மனுஷர்களை யனுப்பிவிச்சு நிசமாய் கபுறு அழைப்பியென்று சொன்னார் அதுக்கு சேவுகன் சொன்னது நிசமான சமாச்சாரந் தான் கோட்டையிலிருந்து வெளிப்பட்டுவந்த சாடை சட்டைக் காறர் சிறிது பேர்கள் அவ்விடத்துக்கு வந்தார்கள் அவர்களும் நிசமேயென்று சொன்னார்களென்று சொன்னான். அப்பால் துரையவர்கள் யென்னைப்பார்த்து நீ யின்று ராத்திரிக்கு உன் கிட்டங்கியிலேதானே சாபபிட்டு யிரு சமாச்சாரம் ஏதாகிலும் வந்தாளை வந்து சொல்லென்று சொன்னார் நல்லதென்று சொல்லிப்போட்டு யென் கச்சேரியே வந்து ராத்திரி சாப்பாடுகூட அழைப்பிச்சு சாப்பிட்டு யிருந்தேன். அந்த மட்டுக்கும் சமாசாரம் வேறே யொன்றும் வரவில்லை யிதில் யிரண்டொருவிசை அழைப்பித்து யிதுவே பேச்சாய் பேசியிருந்து அப்பால் பதினொரு மணிக்கு அழைப்பிச்சு சமாச்சாரம் ஏதாகிலும் வந்துதாவென்று கேட்டார். வரயில்லையென்று சொன்னேன். மேலே யெழுதப்பட்ட சேதியைத் தானே யிருந்தது. ஆனவுடனேநல்லது நீ வீட்டுக்குப்போவென்று சொன்னார் அப்பால் நான் ராத்திரி பனிரெண்டு மணிக்கு வீட்டுக்குப் போனேன்.

இதல்லாமல் கிஷ்ணப்பிள்ளை யெனக்கெழுதின காகிதத்திலே யெழுதியிருந்தவயண மென்னவென்றால்:— நாளது மீ 2௨ பிறட்டாசிமீ செப்தம்பர் மீ 14௨ முசியே பிளாம் தன்னை யழைப்பிச்சு யிங்கிலீசுக்காறர் ஆனால் திருவாமியூர் வந்து சேர்ந்தார் களென்று கோட்டைக்கு ரஸ்த்துவேணும் அழைப்பியென்று சொன்னான் நல்லது அழைப்பிச்சுதாறேனென்று சொன்னேன் யிப்போதானே வேணுமென்று சொன்னான். இப்போதானே வேணு மென்றால் அப்படியே யெழுதியனுப்பிவிச்சு அல்லோ அழைப்பிக்க

வேணுமென்று சொன்னேன் அதுகூடாது யிப்போதானே சீக்கிறமத்துக்கு யில்லாவிட்டால் நீயெனக்குச் செலுத்தியிருக்கிற விராகனிலே ஆயிரம் தள்ளிப்போட்டுக்கொண்டதாய் யெழுதிக்கொடென்று சொன்னான். அதுக்கு நான் சொன்னது யெங்கள் காபந்துக்கு யெழுதியனுப்பி வைத்து உத்திரவு தெரிந்துகொண்டு நான் சொல்லவேண்டியதே யல்லாமல் யென்னாலே ஆகத்தக்கதில்லை யென்று சொன்னேன் அப்படி சொன்னவுடனே யென்னை முசியே பிளாம் தாடையிலே போட்டான் அதுக்கு நீ யென்னசெய்தாலும் யென்னாலே ஆகவேண்டியதென்ன வென்று சொன்னேனை அப்பால் அவன் பிஸ்தலை யெடுத்துக்கொண்டுவந்து ஆயிரம் விராகன் தள்ளி நான் குடுக்கத்தக்கதில்லை யென்று யெழுதிக்கொடுக்கிறயா யல்லாவிட்டால் சுட்டும் போட்டுபோடுவேன் யென்று பிஸ்தோலை யெனக்கு நேராகப் பிடித்தான் யிந்த டெசடுத்தம் போடுகிறவன் சுட்டுப்போட்டாலும் போடுவான் யென்று பயந்து அவன்சொன்ன படிக்கு ஆயிரம் விராகனும் குடுக்கவில்லை யென்று யெழுதி கையெழித்துப்போட்டுக் குடுத்தேன் யென்று யெழுதினதெல்லாம் அப்பால் யிங்கிரேசுக்காறர் பவுன்சுக்கு புளி--யென்கிற கிறுமத்துக்கு வந்து சேர்ந்தது யென்று சொன்னேன் அதுக்கு முசியே பிளாம் யெனனுடனே அவர்களை யிவ்விடத்துக்கு வருகிறதில்லை சொமங்கலம் பேட்டுக்கும் பேரிலே போறார்கள் யென்கிற கபுறு யிருக்குது விறுதாவிலே நாமென்மேலே போட்டுக்கொள்ளவேணும் யென்று சொல்லவந்தான் அதுக்கு நான்யென்ன சொன்னாலும் கேழ்க்காமலே யென்னை மிரட்டி தானும் சாகிறதை தப்பியிருந்தான் அப்பால் நாளது மீ 3உ யிங்கிலீசுக்காறர் அங்கப்பிள்ளை சாவடி வந்து சேர்ந்து—4உ படேசாயபு கோட்டத்திலே வந்து சேர்ந்தார்கள்.

அப்பால் கோவையிலே யிருந்து நம்முடவர்கள் வந்து விழுந்து யிங்கிலீசுக்காறர் பேரிலே சண்டை கொடுத்தார்கள் அப்போ இங்கிலீசுக்காறருக்குள்ளே ரெண்டு ஒபிசியால் மார்களுக்கு சாவுகாயமும் சிறிது சொலுதாதுகளுக்கும் சிப்பாய்களுக்கும் சாவுகாயமும் ஆச்சுது—நம்முடையவர்களுக்குள்ளேயும் நாளத்து ரெண்டு பேர்களுக்கு சாவுகாயமுமாச்சுது அப்போ முசியே பிளாம் பொன்னண்டையிலே யிருந்த சேவுகர்களைக்கூட கோட்டைக்குள்ளே அழைத்துக் கொண்டு போனான் அப்பால்-7உ சாயங்காலம் யிங்கிலீசுக்காறனுடனே மூசே பிளாம் கவில்பேசி கோட்டையை அவர்கள் வசத்திலே ஒப்பிச்சுப்போட்டு தானும் சண்டைக் காவலாய் கையெழுத்துப் போட்டு தானும் விட்டுவிட்டு தீத்துப் போட்டான். யிதற்குமுன்னமே யிந்த சண்டையிலே நாமோன் யிவ்விடத்திலே யிருக்கவேணுனு சொல்லி ஒரு யிடத்திலே போயிருந்து யிப்போ பொத்திரெட்டி சிங்கமனாயக்கன் பாளையத் தண்டையிலே ஒரு கிறுமம் யிருக்குது அந்த கிறுமத்திலே யிருக்கிறேன் யின்னம் சிப்பாதிக்காறர்களுக்கு சிறிது சம்மதி பண்ண வேண்டியிருக்கிறது யெல்லாத்துக்கும் நானும் புதுச்சேரிக்கு வாரேனென்று யெழுதியனுப்பினான். யிப்படி முசே பிளாம் நடப்பிச்சக் காரியத்துக்கு துரையவர்களுக்கு அறிக்கைபண்ண வேணுமென்று சொல்லி பிறுன்சிலே ஒரு பிரதி எழுதி வைத்துயிருக்கிறேன்.

இத்தனுள் மராட்டியர் குதிரைக்காறர் நாலு அஞ்சு பத்து எட்டாய்ப்பிறப்பட்டு யெங்கே பார்த்தாலும் கும்பினீர் சாகீர் கிறுமங்களிலே கொள்ளையிடுகிறதும் மாடுகளையும் ஓட்டிக் கொண்டு போறதும் யிப்படியாக கொள்ளைக்கு ஆரம்பிச்சுவிட்ட படியினாலே குடிகளெல்லாம் அவஸ்தைப்பட்டுக்கொண்டு வலசை வந்து துமிதமில்லாமல் அதுக்கு நம்முடைய அக்கிரகாரமாகிய திருவேங்கடபுரத்துக்கு சிறிது மராட்டியர் குதிரைக்காறர் வந்து காயிறுபண்ணி வழியிலே போக்குவரத்துக் காறர்களையும அடிச்சு பரிச்சபடியினாலே அக்கிறுரம் யெல்லாரும் பிறப்பட்டு வலசை வந்தார்கள் இத்தனுள் மத்தியானம் மராட்டியர் கொள்ளையிட்ட மாடுகளிலே சிறிது மாடுகளை கோணப்பறங்கியாகிய மூசே ஒலாந்தே சிறிது துப்பாக்கிக்காறருடனே போய் மறித்து மாடுகளை மடக்கிக்கொண்டுவந்து ரூபாயிக்கு ஒரு மாடும் அரை ரூபாயிக்கு ஒரு மாடுமாக யென்மாடு உன்மாடு என்று பொய் அடையாளங்களைச் சொல்லி கேட்டார்கள். கையிலே ரூபாய் வாங்கிக்கொண்டு ஓட்டிவிட்டான் என்கிறசேதி கேழ்க்கப்பட்டது.

## *1752-ஹு செப்த்தம்பர்மீ 22உ ஆங்கிரசு ஹு பிறட்டாசிமீ 10உ சுக்கிறவாரம்*

கோட்டையை ஒப்பிவைத்தது மெய்தானோவென்று கேட்டார் மெய்தான் அதற்குச் சந்தேகமில்லை. அவனும திருவடந்தையிலே வந்திருக்கிறானென்று சொன்னேன். அதற்கு அவன் பொல்லாத நாய் இங்கிரேசுக்காறர் நல்லவாபத்திலே மோசம் பண்ணினானென்று சொன்னார். அவன் மெத்தப் பொல்லாதவன் அவனை கோவளத்திலே பண்ணின அநியாயம் காகிதத்திலே யெழுதுகிறதுக்கு நானூறாயிரம் ஆயிரம் காகிதம் வேணும் சொல்ல வேணுமானால் ஒரு சாமம் செல்லும் அவன் நடத்தை மெத்தப் பொல்லாத— நடத்தையானபடியினாலே யிப்படிப்பட்ட துரோகத்துக்கு பின் வாங்கத்தக்கனவனல்ல செய்து யிருப்பான் என்று சொல்லி அதற்கு அவன் செய்யப்பட்ட துரோகத்தையும் துற்நடத்தையையும் கோட்டையண்டையிலே சத்துரு வந்தானென்று சொன்னதுக்குக்கூட பொய்யென்று சொன்னது முதலான சம்மதிகளெல்லாம் சொன்னதறகு அவன் உன் கையாய் விட்டுவிட்டது பிசகில்லையென்று பேசியிருக்கச்சே செங்கல்பட்டிலேயிருந்து மூசே மிலோம் கோவளம் கோட்டையை மூசே பிளாம் இங்கிலீசுக்காறருக்கு செவ்வாயிக்கிழமை சாயங்காலம் ஒப்பிச்சுப்போட்டதும் புதன் கிழமை தினம் காலத்தாலே அவன் வெள்ளைக்கொடியைப் போட்டாப்போலே செங்கல்ப்பேட்டியிலிருந்து போன பவுன்சும் மூசே சென். சேர்மேனும் (St. Germain) நம்முடவர்களென்கிற கோபியானசின் பேரிலே போனதும் சமீபத்திலே கோட்டை கிட்ட வந்த பிற்பாடு நாலுபக்கமும் சுத்திக்கொணடு வெள்ளைக்கொடியை வாங்கிப்போட்டு யிங்கிரேசுக்கொடியை போட்டுக்கொண்டு சண்டை பண்ணினான். நம்முடவர்களென்று யிவர்கள் யேமாறிப் போன படியினாலே பெருபேர்களுக்கு சேதம் வந்து மூசே சேஞ் சோர்மேனும் அவர்கள் கையிலகப்பட்டுக்கொண்டானென்று அதுமுதலான சேதிகளெல்லாம் யெழுதியனுப்பினான். அந்தக் காகிதம் பார்த்துக்கொண்டவுடனே மதாம் துப்பிளேயிக்குவந்து

கண்டுபேசிப்போன உடனே துரையவர்கள் யென்னை அழைத்து மூசே மிலோமெழுதின சேதியாம்படியே மேலே யெழுதினபடிக்கு சொன்னார் அதின் பேரிலே பதில்க் காகிதம் யெழுதி அந்தக்ஷணம் மூசே மிலோமுக்கு செங்கல்பட்டுக்கு அனிப்புவீர்களாவென்று கேட்டார்.

றவைசெல்லா பத்துக்கட்டுப் போட்டார்களென்று பத்துக் கட்டுக்கூட ஆயிரத்து நூத்தி பதினாலு கட்டுயென்று கையிருப்பு என்று சொன்னேன். நல்லது நாளைக்குப் பார்வையுண்டாவென்று கேட்டார் நாளைக்கி கும்பினீர் வர்த்தக்கருதும் காரைக்கால் வர்த்தகருதும் ஆக முப்பது கட்டுக்கு மேலேயிருக்குமென்று சொல்லிப்போட்டு யென் கச்சேரியே வந்தேன்.

இத்தனுள் மராட்டியார் குதிரைகள் வந்து குண்டு சாலை மட்டுக்கும் வந்து மாடுகளை ஓட்டினதுமல்லாமல் கொள்ளை யிட்டதும் காயம் பண்ணினதும் யெதின்பேரிலே வெகு காபிறுப் பட்டு சுத்துப்பட்டு கிறுமங்கள் அதிலுள்ள செனங்கள யெல்லாம் பட்டணம் உள்ளே வந்தார்கள். பெருசனங்களுக்கு ஆவதியும் சேதமும் யெழுத முடியாது சுவாமி யிந்தக்கலந்தை யென்னமா யொடுக்கி செனங்கள் படுகிற கஸ்தி யெழுதி முடியாது. அப்போ துரையவர்களுக்கு கபுறுயி மூசே தொத்தேலுக்கு உத்தாரம் குடுத்து காடுதி குதிரைக்காறர்கள் அறுபது எழுபது வெள்ளைக்காறர்கள் சிப்பாயிகள் யிறநூர் பேர் மட்டுக்கும், வெளியே போய் துரத்தி னார்கள். அந்தமட்டுக்கும் ஓடிப்போய் விட்டார்கள். யிவர்களை மறுபடி ஆறரை மணிக்குள்ளே வந்தார்கள்.

இத்தனுள் ராத்திரி ஏழரை மணிக்கு துரையவர்கள் அழைச்சனுப்பிவைத்துமூசே பிளாம் செப்தம்புறு மாதம் 16-ந்தேதி சாயங்காலம் சோவளம கோட்டையை ஒப்பித்துப் போட்டே னென்றும் அவர்கள் இரண்டாயிரம் பேர் மட்டுக்கும் வந்தபடி யினாலேயும் யெங்கே லக்கையேறுகிறார்களோவென்று ஒப்பித்துப் போட்டேன்யென்றும் யெழுதினான்யென்று சொல்லி கச்சோறு உள்க்கையாயிருந்து விட்டான. யில்லாமப்போனால் ஒரு சிலர் விழுந்து நிறுவாகமில்லாமல் போச்சுதுயென்று விட்டுவிட்டானா அல்லயென்று ராசா யில்லையென்று விட்டு விட்டானா கோட்டையை உள்கையாயிருந்து ஒப்பித்துப்போட்டான்யென்றும அதற்கு பெகு சனங்கள் வந்தபடியினாலே கோட்டைக்கு வாரார்கள் கோட்டை யைக் காற்க வாரார்களே காற்க்ககூடாதாயென்று ஒப்பித்துப் போட்டேன் என்று எழுதினேனேயென்றும் கோபித்துக்கொண்டு உத்தாரம் சொன்னார் நானும் அதுக்குத்தக்க உத்தாரம் சொன்னேன். அப்பால் மூசே சேஞ்சோர்மன் (St. Germain) வந்தால் கோட்டையை ஒப்பித்துவைத்துப் போவென்று சொல்லி அனுப்பி விட்டு விடத் தேவையில்லையா சும்மாயிருந்தான். ஆனபடியினாலே மூசே சேன்சோற்மேன் என் கையிலே பவுன்சு சமேதர்யகப்பட்டுப் போனான் யிப்போ மூசே சேன்சேர்மேன் இங்கிலீசுக்காரறர்கள் கையில் அனுப்பிவைத்துக்கொண்டு நாலு மணிக்கு வந்தான் அவன் வழியிலே மராட்டியர் காயப்படுத்தினார்கள் இப்போ

இஸ்ப்பீத்தாலிலே போனுன் அவன் சொல்லியனுப்பின சாடை பார்த்தால் முசே பிளாம் பேரிலே சகல குத்தமுமிருக்குதென்று சொன்னுர் நானும் அதுக்கு தக்க உத்திரஞ்சொல்லி போட்டு வென் கச்சேரியே வந்தேன்.

இத்தனுள் ராத்திரி பத்து மணிக்கு கேற்சிப்பட்ட கபுறு மேஸ்தர் க்ளீஸ் (Mr. Clice) யென்கிறவன் கோவளத்துக்கு அமில் பண்ணுகிறதுக்கு ஒரு பிருமணனையும் சிறிது பேருகளையும் கோட்டைக்கு வைத்துப்போட்டு செங்கல்பட்டு கோட்டை வாங்கத் தக்கதாக நேத்தய தினம் காயத்தண்டையிலே போய் பவுன்சுடனே யிறங்கினுனென்று சேதி வந்தது.

இதல்லாமல் முசியே பிளாமென்கிறவன் கோவளக் கோட்டையை ஒப்பிச்சுப்போட்டு சதிரங்கப்பட்டணம் வந்து சேர்ந் தானென்று சொன்னுர்கள் இத்தனுள் அயிதரபாத்திலிருந்து சலாபத்துசங்கு காகிதமும் முசே புசியினுடை காகிதமும் வந்தது. அந்தக் காகிதச் சேதி காசுதின்கான் நற்மதை யென்கிற நதிக்கு யப்புறம் முப்பத்கஞ்சு கோன்சுன் பேரிலே யிருக்கிறுனென்றுஞ் சயிது லசுக்கர்காளை பாசிறுயனை சமாதானம் பண்ணும்பொருட்டு பொன்னைக்கு (Poona) யனுப்பினதாகவும் சாநவாசுக்கானுக்கு அயிதராபாத்து சுபா கொடுத்தோமென்றும் முசே புசியை அயிதராபாத்துக் கில்லேதாஹுக்கு கொடுத்ததாகவும் சேக்கு யிபுறுமுக்கு குதிரைகள் வைக்கிறதுக்கு யிறுசால் உத்தியோகமுங் குடுத்துசால்தரா பல்லக்கும் கொடுத்ததாகவும் யிங்கேயும் நாற்பதி ஞயிரம் குதிரை சுவார் மட்டுக்கும் வைத்ததாகவும் புதுச்சேரியி லிருக்கிற சொலுதாதுகளும் சிப்பாய்களையும் ரனங்கள் குமக்கும் மருந்து குண்டு வகையரா சண்டை சானசாமிகளும் அனுப்பிவிக்கச் சொல்லி யெழுதினதாகவும் யிதல்லாமல் கற்ஞட்டகம் பந்துபஸ்து பண்ணுகிறது யென்ன நேரம் செல்லுதா யிவடத்துக் காரியம் நினைச்சால அது நீங்கள் சொன்னபடிக்கி நடந்து போற காரியங் களுக்கு யோசனை பண்ண வேண்டியதென்னயிருக்கிற பெலமெல்லாம் யிவடத்துக்கு அனுப்பிவிக்க வேணுமென்று யெழுதினதாகவும் அதின் பேரிலே மசுக்கரையிலேயிருந்து தேவனும்பட்டணம் யென்கிற கப்பலின் பேரிலே வந்த சொலுதாதுகளும் ஒலோந்தாமார்களும் பின்னையும் கொஞ்சகஞ்சம் சேர்த்துநாத்தி சிலவானம் வெள்ளைக் காறர்களையும் சிறது சிப்பாயிகளையும் குந்தாணி பிரங்கிகள் வகையிரு பிரங்கிகள் துப்பாக்கிகளும் மருந்துகள் குண்டுகள் வகையிரா சாமான் களும் லான்சோம் (Mr. Anson) யென்கிற கப்பலின் பேரிலே யேத்தி யனுப்பிவைக்கிறதாய் யோசனை பண்ணி தயாறு பண்ணச்சொல்லி உத்தாரங்குடுத்தார்களென்று சேதிசொன்னுர்.

## 1752ஞ செப்த்தம்பர்மீ 24உ ஆங்கிரசுஞ புறட்டாசிமீ 12உ ஆதிவாரம்

இத்தனுள் துரையவர்கள் கோயிலுக்குப் போயிவந்த பிற்பாடு பத்துமணி வேளைக்கிப்போய் கபுறு சொல்லியானவுடனே செங்கல்ப் பட்டு சேதியேதாகிலும் வந்துதாவென்று கேட்டார். மேஸ்தர் கிலேசு (Mr. Gluse) வெள்ளிக் கிழமைநாள் செங்கல்பட்டுப் போய்ச்

சேர்ந்ததென்றும் கோட்டைக்கு யெதிரே பவுஞ்சு கண்டவுடனே கோட்டையிலே யிருக்கிற முசே விலாம் (Mr. Villion) குமாந்தாமும் முசியே மிலோமும் கோட்டையைப் பந்துபஸ்து பண்ணிக்கொண்டு சேவுகர்கள் சிப்பாயிகள் வகைகயிராக்களேயும் வைத்துக் கொண்டு ரஸ்தும் ஒரு வருஷத்துக்குண்டாம் சேர்த்துவைத்துக் கொண்டிருக்கிறதும் மருந்துகுண்டும் அப்படி தாக்ஷியில்லாமல் வைத்துக் கொண்டிருக்கிறது பந்துபஸ்திலே குறைச்சலில்லே. தெய்வயெத்தினம் தெரியாததல்லவே யல்லாமல் மனுஷர்கள் யிருக்கிற பந்துபஸ்துகளிலே கோட்டையிலிருக்கிற அறணிப்புயிலே வாங்கமாட்டார்கள் அப்படி பெலத்து யிருந்து கொண்டு சத்துருக்களேச்சேர வொட்டாமல் அடிக்குறார்கள் யென்று சொன்னேன் முசியே பிளாமிங்கிலீசுக் காறனபடியினலே-சுவாமி துரோகம் பண்ணிவிட்டானே அல்லாமல் யில்லாவிட்டால் கோவளங்கோட்டை ஒருக்காலும் போகத்தக்கதாகயில்லே யென்று துரையவர்கள் சொன்னர்கள். அதுமெய்தானென்று சொன்னேன். அப்பாலென்னே மறுபடி யழைத்து செங்கல்பட்டுக்கு நேத்தைக்கு சதிரங்கப்பட்டணத்திலே பணம் வாங்கிக்கொண்டு போய்ச்செலுத்தச் சொல்லி அனுப்பின வுண்டிக்கைப் பணம் போய் செல்லமாட்டாதென்று சொன்னர் மெய்தானென்று சொன்னேன். அப்பாலென்கச்சேரியே வந்தேன்.

முன்பாதுசா பர்வானு கொண்டு வந்த யூசுப்பாஷிகான்-யென்கிறவனே முசியே தெலாஷே அனுப்பி லான்சோம் (Lonsom) என்கிற கப்பல் மச்சிலிபந்தருக்குப் போகுது. அதின்பேரிலே போனல் மூணு நாள் மச்சிலிபந்தருக்குப் போய்ச்சேரலா மென்று சொல்லி அவனுங்கூட துரையவர்களண்டைக்கு வந்து கப்பல் மேலே போகக்கூடாது கரைவழியே போறே மென்று சொல்லிக் கொண்டதாய்ச் சேதிசொன்னர்கள்.

இத்தனுள் பகலைக்கு மேலாக மூணுமணிக்கு துரையவர்கள் அழைச்சனுப்பிவிச்சு செங்கல்பட்டு கொம்மாந்தாமுக்கு ஒரு காகிதங் கொடுத்து யெப்படியாகிலும் கோட்டையிலே கொண்டு போய்க் கொடுத்தால்-அன்பது ரூபாய் கொடுக்குறேமென்று சொல்லியனுப்பென்று சொன்னர். அந்தப்படிக்கி ரெண்டுப்பேர்களுக்கு யிருபது ரூபாய் கொடுத்து துரையவர்கள் சொன்ன சேதியுஞ்சொல்லி யனுப்பி விச்சேன். மறுபடியுந்துரையவர்கள் அழைச்சனுப்பிவிச்சு ஒரு காகிதங் குடுத்தனுப்பச் சொன்னர் அந்தப்படிக்கு ரெண்டுபேர்களுக்கும் இருபது ரூபாய் கொடுத்து அனுப்பிவிச்சேன்.

இத்தனுள் சாயங்காலம் வந்தசேதி திருவீதியிலிருந்த மமுதல்லிக்கான் ஆற்காட்டுக்குப் பயணம் பிறப்பட்டு திருத்தனூர் யென்றிருக்கிறது அங்கே போயிறங்கினனென்றும் பெண்ணையாத்துக்கு அக்கரையிலே போயிறங்குறத்துக்கு பெண்ணையாறு பிரவாகம் விஸ்தாரமாய் வந்தபடியினலே யிக்கரையிலே திருத்தனூரிலேதானே யிருக்கிறனென்றும் சேதிவந்து சொன்னர்கள்.

பிறப்படச்சே மழையிலே பிறப்பட்டபடியினலேயும் ஆறு பிரவாகம் பிறப்பட்டபடியினலேயும் போறகாரியஞ்செயமாகிறது அபசெயமாகும் யென்று சொல்லிக்கொண்டதாய்ச் சொன்னர்கள்.

இந்தச் சேதியை துரையவர்களுக்கு எச்சரிக்குதுக்கு மறுபடி யிவர்களை போர்க வொட்டினுர்களா வென்று கேட்டார் அவர்களும் மகம்மதல்லிக்கானுடனே கூடப் போறதாய்ச் சொன்னுர்கள் யென்று சொன்னேன்.

## 1752௵ செப்த்தம்பர்மீ 26வ. ஆங்கிரசு௵ புறட்டாசிமீ 14வ. அங்காரகவாரம்

இத்தனுள் காலத்தாலே கோட்டையிலே சலவைப்பாருவை யானபடியினுலே கோட்டையிலே போயிருந்து கடகுப்போட்டார்கள் போட்டானவுடனே பிறப்படச்சே துரையவர்கள் சேவுகன் வந்து அழைத்தான் போய் ஆசாரம் பண்ணி நின்றவுடனே செங்கல்ப்பட்டு சமாச்சாரம் வந்துதாவென்று கேட்டார். வந்துதென்று சொன்னேன். மேஸ்தர்கிலேசு (Mr. Clause) முதலானபேர்கள் நத்தமென்று வூரிருக்குது அந்த ஆசாரவிலே கூடாரம் போட்டுக் கொண்டுயிருக்கிறுர்கள் அவர்கள் பவுன்சு கோட்டைக்கு மேலண்டை கிழண்டை வடவண்டை மூணு பாரிசமும் சேரப் போகாது தென்னண்ட பாரிசமாத்திரம் கோட்டைக்கு வாசற்படி பாரிசமாத்திரம் போகலாம் அதுக்கெதிரே வரவொட்டா மல் கோட்டையிலேயிருந்து பிரங்கியாலே அடிக்குறுர்கள் அவன் மொறசாப் போடப்போனுல் போடவொட்டாமல் பிரங்கியாலே மேத்துருர்கள். அதைத் தொட்டு யிதிலே காரியமில்லே கோவளத் துக்குப்போய் மூனு நாலு குந்தாணி பிரங்கி கொண்டுவந்து பொம்பு கோட்டைக்குள்ளே விழப்போட்டாலேயல்லாமல் காரியமில்லே யென்று கோவளத்துக்கு குந்தாணி பிரங்கிக்கும் போம்புவுக்கும் போனுர்களாம் அதுவந்தபிற்பாடு யேதே ஒரு யெத்தினமேயல்லாமல் அதுக்கு முன் காண்பிக்கயில்லே யென்றுயொழதி வந்துது, இதிலே யிவிடத்திலே யிருந்து கொஞ்சம்பவுன்சு போச்சுதே ஆனலவர்கள் கோட்டையிலே யிருந்து சாத்தவும் யிவர்களிந்த சாடை சாத்தினுல் சத்துருக்கள் பாரிசமாய் ஓடிப்போவார்கள் யிதல்லாமல் கோட்டை வாசற்படிக் கதவை வாங்கிப் போட்டு செவிர் வைத்துப் போட்டார் களாம் என்று யிதுமுதலான சேதி சொல்லி இத்தனுள் கோட்டை யிலே நாற்பத்து நாலு கட்டுப் போட்டார்கள் இந்த மட்டுக்கும் ஆயிரத்தி நூத்தி அன்பத்தெட்டு (1158) கட்டு கிட்டங்கி கையிருப்பு யிருக்குது—இதல்லாமல் இத்தனுள் காலத்தாலே ஒரு போத்திலே மச்சிலிபந்தரிலிருந்து அறுபது கட்டு லேஞ்சு வந்துதே அதுகூட ஆயிறத்தியிறநூத்தி பதினெட்டு கட்டு கையிருப்பு யிருக்குதென்று சொன்னேன் துரையவர்கள் யிருந்து கொண்டு நல்லது மமுதல்லிச் கான் லசுக்கர் சமாச்சாரமென்னவென்று கேட்டார். மகமதல்லி கான் ஆத்துக்கரையிலேயிருந்தவன் இன்றைய தினம் விழுப்புறம் அந்தவட்டம் பார்த்து கூச்சாய் லசுக்கர் நடந்துதென்று சொன்னுர் கள். சிறிது போசொல்லுகிறது ஆற்காட்டுக்குப் போறுரென்று சொல்லுகிறதே பெரிய பெரிய மனுஷர்கள் லசுக்கரிலே பேசிக் கொள்ளுகிறுர்கள் யென்றுஞ் செஞ்சிக்குப் போய் அவ்விடத்திலும் ஒரு காரியம் பாத்துப்போட்டு யப்புறம் போறதாய்ச் சொல்லிக் கொள்ளுகிறுர்கள் யென்றும் சொன்னுர்கள் யெல்லாம் பேச்சு ரெண்டும் நாளையிலே தெரியுதென்று சொன்னேன். அதின் பேரிலே மூசியே பிளாம் சதிரங்கபட்டிணத்திலே யிருக்கிறவன் மூசியே

தொற்மியுசென்கிறவன் (Mr. Dormaix) ஒலாந்த சின்னக்கப்பித்தானைக் கொண்டு ஒரு காகிதம் சிபாரிசு யெழுதிவிச்சு யனுப்பிவிச்சான் பெரியக்கச்சேரியென்று சொன்னதுயல்லாமல் அவன் துரோகம் பண்ணியிருக்காவிட்டால் யிந்த வச்சம் அவனுக்குவரக் காரியமென்ன கோட்டையை ஒப்பிச்சுப் போட்டு பிறபட்ட மட்டுக்கும் சரேலென்று வரவேண்டியதாச்சுதே அதில்லாமல் அங்கேயிருந்து சிபாரிசு பண்ணிவிக்குற சாடையாய்ப் பார்த்தால் மனதிலே யிருக்கிற களங்கம் அவனை வரவொட்டாமல் நிறுத்துதென்று சொன்னார் அது மெய்தானென் அவனங்கே பண்ணுகிற பொல்லாப்பு காகிதத்திலே யெழுதமுடியாது சொலலியும் முடியாது. அவனிவிடத்துக்கு வந்தால் அவன் ரூப ரூபிலே சிறிது வார்த்தை சொன்னாலப்போ உங்களுக்கு அவன் செய்த பொல்லாப்பு வெளியாகும் அவனில்லாத வேளையிலே சொல்லியென்ன கிறிகை அவன் வருகிறானே அப்போ சொல்லுகிறானென்று சொன்னதுக்கு யெனக்கு அவன் துரோகியென்கிறதும் பொல்லாதவன்யென்கிறதும் நன்றாய்த்தெரிஞ்சதென்று சொல்லிப் பேசிக்கொண்டிருக்கச்சே பாப்பய்யப்பிள்ளை வந்தான் அவனை யழைத்து மதாம் காம்பிறாவிலே போனார் நான் கச்சேரியே வந்தேன்.

1752௵ செப்தம்பர்மீ 27உ ஆங்கிரசு௵ புறட்டாசிமீ 15உ புதவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் அழைச்சனுப்பிவிச்சு செங்கல்ப்பட்டு செய்தியேதாகிலும் வந்ததாவென்று கேட்டார். நம்முடவர்கள் கோட்டை வாசற்படி கதவுகூட வாங்கி செவிர் வைத்து தீத்துப்போட்டு உள்ளே பத்திரமாயிருந்துக் கொண்டு மோறசா போடுகிற யிங்கிறேசுக்காறர் பவுன்சு சேரவொட்டாமல் பீரங்கியிலே போட்டுக்கொண்டிருக்கிறார்கள்யென்றும் கோவளத்திலேயிருந்து இருபத்திநாலுராத்தல் குண்டோடுகிற பீறங்கி ஒன்றும் குந்தாணி பீரங்கிகளிரெண்டும் வந்துதென்றும் அதை வைத்துக்கொண்டு கோட்டைக்குத்தென்னண்டையிலே மோறசா போட்டு அதின்பேரிலே வைத்துச்சுட்டு கோட்டையையிடிப்பிச்சு உள்ளே போகவேணுமென்றும் யெத்தனம் பண்ணுகிறார்களென்றும் மழுதல்லிக்கானை யவ்விடத்துக்கு வரச்சொல்லி மேஸ்தர் கிலேசு (Mr. Clance) யெழுதினாப்போலேயும் அதின் பேரிலே மழுதல்லிக்கான் பிறப்பட்டு விழுப்புறத்துவழியாய் போறதாகவும் யிப்படியாக சேதிசொல்லிக்கொள்கிறார்களென்று சொன்னேன் அப்பால் பிறப்பட்டென்கச்சேரியே வந்தேன்.

1752௵ ஒயித்தோபர்மீ 1உ ஆங்கிரசு௵ புரட்டாசிமீ 19உ ஆதிவாரம்

இத்தனாள் பகலைக்கு மேலாக அஞ்சு மணிக்கு அழைப்பிச்சு மழுதல்லிக்கான் லசுக்கர் சேதி வந்ததாவென்று கேட்டார். வந்தவாசி யண்டையிலே ஆறுயிருக்குதாம் அந்தவாத்தண்டையிலிறங்கிக்கொண்டு தக்கா சாயிபை அனுப்பி நாசற்சங்குக்கு

ஒப்புக்கொண்ட பணத்துக்கு கொஞ்சம் குடுத்தும் மத்தப் பணத்தைக் குடுக்கச்சொல்லி கேக்கிறதாகவும் அது நிமித்தியம் வக்கீலுகள் போறதும் வாறதும் பேசுகிறதாயும் யிருக்குறதாம் மராட்டியர் கோட்டைக்கு தென்பாரிசம் இறங்கியிருக்கிறதாகவும் சொன்னார்கள் யிதல்லாமல் இன்றைய தினம் பறங்கிப்பேட்டையிலிருந்து இரெண்டு சலங்கிலே கும்பினீர் வர்த்தகருக்கு காரிக்கமும் ஒலாந்த செடுமுழமும் சூரத்து இனிசுவளையிரா வன்னந்தரமும் காரிக்கமும் ஆயிரம் நகையும் வன்னந்தரமும் ஆயிரத்தன்னூறு நகையும் வந்தது அந்த சலங்கின்பேரிலே பறங்கிப்பேட்டை பெத்திரி கொம்மந்தாம் முசியே போவெயென்கிறவன் (Mr. Auvert) யெனக்கு காகிதம் யெழுதியனுப்பினான் அதிலே முராரிராயன் தம்பி புசங்கராயன் நரசிங்கராயன் யென்கிறவன் இரண்டாயிரம் மூவாயிரம் குதிரையுடனே பரங்கிப்பேட்டைக்கு மேற்கே நாலு மணி தூரத்திலே யெல்லாம் வந்திறங்கி யெங்கே பார்த்தாலும் மராட்டியர் குதிரையள் கொள்ளையிடுகுறார்கள் என்று ஒலாந்தக்காறர்களுக்கு யெழுதி வந்து அவர்கள் முஸ்தீது பண்ணிக்கொண்டு தயாராய் சண்டைசான் சாமியுடனே யிருக்கிறார்கள் யென்றும் ஊரிலே யிருக்கப்பட்டவர்கள் வறத்தகர்கள் வகையிரா கப்பல்காறர்களும் பீரங்கிகள் வகையிரா துப்பாக்கிகள் கூட முஸ்தீது பண்ணிக்கொண்டு யிருக்கிற சேதியாக யெழுதியனுப்பினானென்று சொன்னேன் முன்ரெண்டாயிரம் குதிரைக்காறர்கள் வரச்சேயுங் கொள்ளையிட்டுக்கொண்டு வரச்சேயும் மமுதல்லிக்கான் பிறகே போகச்சேயும் போறேபோக்கிலே கொள்ளையிட்டுக்கொண்டு போனார்களே யிவர்களுக்கு யென்ன அகப்படப்போகுது யென்று துரையவர்கள் சொல்லி நாளை சாயங்காலம் துக்குதே புறுகோஞ்சே (Duc-de-Bourgogne) யென்கிற பிறஞ்சு ராசாவுக்குப் பிறந்த பேரப்பிள்ளைகளுக்கு பண்டிகை கொண்டாடிக் கொண்டியிருக்கிற தாகச்சே அனை குதிரைகள் கலபோத்து முதலானதுகளெல்லாம் நாளை பகலுக்கு மேலாக வரச்சொல்லி திட்டம் பண்ணிவியென்றும் துலுக்கர்கள் வர்த்தகர்கள் முதலான பேர்களுக்கெல்லாம் சொல்லி வரச் சொல்லியும் யிந்தப்படி பின்னையும் ஆராருக்குச்சொல்ல வேணுமோ அவர்களுக்கெல்லாம் சொல்லி திட்டம் பண்ணச் சொல்லி அனுப்பிக்க வேணுமென்றும் அவர்களுக்கெல்லாம் சொல்லி அனுப்பி திட்டம் பண்ணிப்போட்டு நானும் வீட்டுக்குப்போனேன்.

## 1752-ஹ் ஒயித்தோபர்மீ 3உ ஆங்கிரசுஹ புரட்டாசிமீ 21உ அங்காரகவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் பத்துமணிக்கு யெழுந்திருந்தார்கள் அப்பால் நான் போய் கபுறு சொன்னவுடனே அவர் கபினேத்திலே யெழுதப்போனார் நானென் கச்சேரியேவந்தேன் இத்தனாள் சதிரங்கப்பட்டணத்திலிருந்து சேஷாத்திரி பிள்ளையவர்கள் சதிரங்கப்பட்டணம் முத்தப்பிள்ளை வகையராக்கள் எழுதின காகிதத்திலே முன் 16உ சனிவாரத்துக்கு செப்தெம்புறுமீ 30உ முசியே வில்லியாமென்கிறவன் (Mr. Villion) செங்கல்பட்டுக் கோட்டையைக் கவிலின் பேரிலே வொப்பிச்சுப்போட்டு முசே

வில்லியாமும் அவனைச் சேர்ந்த சிப்பாயிகள் கற்றுட்டகத்தார் அவரவர் ஆயுதங்களுடனே மக்களுகளுடனே செங்கல்பட்டுக் கோட்டையை ஒப்பிச்சு பிறப்பட்டு சதிரங்கபட்டணம் வாரார் களென்று யெழுதினார்கள் யிந்தச்சேதியை நாமா முன்னே சொல்லுவானேன்று அவர்கள் காகிதமும் ஏதாகிலும் வந்தாலப் போ சொல்லுவோம் அல்லவென்றால் பின்னை யாருக்காகிலும் கபுறு வந்தால் அவர்கள் சொன்னால் சொல்லிப்போகட்டும். நாமேலிந்தசாவு கபுறை சொல்லவேணும் யென்று சும்மாயிருந்தேன் யிதல்லாமல் யிங்கேயிருந்து துரையவர்களெழுதின காகிதச்சேதி யெல்லாம் கோட்டையை யிங்கிலீசுக்காறர்கள வசத்திலே ஒப்பிச்சுப் போட்டு வந்து விடச்சொல்லி யெழுதினபடியினாலேயுங் கோட்டை யிலே வெள்ளைக்காறர்களில்லாமல் சிப்பாயிகள் கற்றுட்டகத்தார் யிருந்தபடியினாலேயும் கோட்டையை வைத்துக்கொண்டுயிருந்தால் நிறுவாகத்துக்கு வாராது என்று ஒப்பிச்சுப்போட்டு வந்தார் களென்று தோத்துது ஒருத்தர் பேரிலேயும் குத்தம் சொல்லக் கவையில்லை வருகிற காலத்திலே நினைக்குறத்துக்கு முன்னமே வந்தது போறதில்லை போறகாலமான படியினாலே ஒவ்வொன்றாய் விட்டுபோகுதென்றும் சகலசனங்களும் சொல்லிக்கொண்டார்கள் துரையவர்கள் காகிதம் கோட்டை காறனுக்குப் போய்ச்சேர்ந்த வுடனே செங்கல்பட்டுக் கோட்டையை ஒப்பிச்சுப் போடுகிறதுக்கு துருவாாய் யெழுதி யிருந்தபடியினாலே மூசியே மிலோம் முன் சென்னப்பட்டணத்திலிருந்து வந்தவனாபடியினாலே மேஸ்தர் இலேசு (Mr. Cluce) கையில் கோட்டையை ஒப்பிச்சால் எல்லாரும் வெளியே ஆயுதங்கள் தட்டுமுட்டுடனே பிறப்படச்சே மிலோமை மேஸ்தர் இலேசு (Mr. Cluce) விடாமல் பிடுச்சுக்கொள்ளப் போறானென்று மூசே மிலோம் மாத்திரம் ராத்திரியிலே கோட்டை செவிரு ஏறி குதிச்சு வடவண்டையிலே ஏரியிலே விழுந்து பிறப்பட்டு பதினெட்டாம் தேதி பத்து ஒன்பதுநாழிகை வேளைக்கு சதிரங்கபட்டணம் வந்து சேர்ந்தானென்றும் யெழுதிவந்தது.

## 1752-ஙு ஓயித்தொபர்மீ 7உ. ஆங்கிரசுஙு பிறட்டாசிமீ 25உ சனிவாரம்

இத்தனாள் கேழ்விப்பட்டசேதி மீறுசா—அப்துல் நபிபேக்கை முராரிராயன் அண்டைக்குச் சந்தி யனுப்புகிறதுக்கு ஆயிரம் ரூபாயும் சிலவுக்குக் குடுத்து காகிதமும் யெழுதிக்கொடுத்து மயிசூர் சறுவாதிகாரிகள் ச்சூர் நந்திராசா வந்திருக்கிறானே அவனும் முராரிராயனுடனே தானப்பால் கூடாரம் போட்டுக் கொண்டு யிறங்கியிருக்கிறானே அவனுடனேயும் பேசச்சொல்லி சொல்லவேண்டிய உடன்படிக்கைகளையும் சொல்லி அவருக்கு காகிதமெழுதிக் கொடுத்து மேலே யெழுதப்பட்ட உபயத்திரவங்களையும் அவர்களையும் பவுன்சு சமேதரராய்வந்து மமுதலிக்கானைப் பிடிச்சுப் வெட்டிபோட யுத்தம் பண்ணச்சொல்லி அதுக்கு உத்தாரங்களும்கூட பவுன்சும் கூட்டிக்கொண்டு சண்டை போட்டு மமுதல்லிக்கானை சரிப்பிடிச்சுப் பிற்பாடு முராரிராயனுக்கு சத்தியாய் ரெண்டு லக்ஷம் ரூபாய் கொடுக்கவும் அப்பால் மமுதல்லீக்கான் பேச்சு ஆன பிற்பாடு இரண்டு லக்ஷம் ரூபாய்

குடுக்கவும் படிரேசு குடுத்துவரவும் மயிசூராருக்குத் திருச்சிராப் பள்ளிகுடுக்கவும் அவர்கள் முப்பது லக்ஷம் ரூபாய்க் குடுக்கவும் இப்படி சிறிது உடன்படிக்கைகளைச் சொல்லி உபயத்திரவர்களையும் அவர்கள் பவுன்சுவையும் கூட அழைத்து வரச்சொலலி மீறுசா அப்துல் நபிபேக்குக்குச்சொல்லி பின்னையும் அவர்களை தானிலும் உடன்படிக்கை கேட்டால் அதுக்குக்கூட சம்மதிச்சு அழைத்து வரச்சொல்லி சொல்லி மீறுசா அப்துல் நபிபேக்குவையும் நேத்து ராத்திரி படகின் பேரிலேத்தி காரைக்காலிலே யிறக்கி அங்கேயிருந்து கரை வழியாய் திரிச்சிராப்பள்ளிக்கு முருரிராயன் வகையராக்களண்டைக்குப் போகப் பயணம் பண்ணி பனிரெண்டு மணிக்கு ஆரும் அறியாமல் பேத்தியனுப்பினார்கள். காலடிப்போய் அலைநடந்தாப்போலே மழை பெஞ்சு நனைஞ்சு படகின் பேரிலே தண்ணி ரொம்பி மறுபடி கரையிலே வந்திறங்கியிருந்து இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கு படகும் பேரிலே பேரிப்போனதென்று வந்து கபுறு சொன்னார்கள்.

நான் காலத்தாலே மசுக்கரை கட்டுகள் போடவேணுமென்று கோட்டைக்குப் போனவிடத்திலே கப்பலிலேயிடமில்லை. கப்பல் வசாம் தீர்ந்து கப்பல் பாயெடுதது பிற்பாடு மெள்ளக் கட்டுப் போட்டுக் கொள்ளுவோமென்று சின்ன துரை மூசே மீராவை பிராச்சொன்னபடியினாலே நான் துரையவர்கள் வீட்டுக்கு வந்து கபுறு சொல்லிப் போட்டு யென் கச்சேரியே வந்தேன்.

இத்தனாள் மருட்டியர் குதிரைகள் வந்து கருக்கட்டிகுப்பம் பொம்மய்யப்பாளையம் காலாப்பேட்டை கூனிமேடு வகையரா யிடங் களிலே கொள்ளையிட்டுக்கொண்டு மாடுகளையும் ஒட்டிக்கொண்டுப் போனார்கள். அந்தச் சேதி துரையவர்கள் கேட்டு சிறகோமுகளை அனுப்பிவிச்சார்கள் பொம்மையாப்பாளையம் மட்டுக்கும் போய் வந்தார்கள் மராட்டியர் குதிரைகள் கிளியனூர் அந்த விடங்களிலே போய் விட்டு ஒன்று சொன்னார்கள்.

## *1752*வரு ஒயித்தோபர்மீ 7உ ஆங்கிரசுவரு புறட்டாசிமீ 25உ சனிவாரம்

கோணப் பறங்கியும் டெ பவுன்சும் வில்லியநெல்லூரண்டை யிறங்கியிருந்ததுக்கு கருக்கட்டிகுப்பம் மேட்டிலே வந்திறங்கி இத்தனாள் சாயங்காலம் ஆறு மணிக்கு 21 பிறங்கிப் போட்டார் களென்று வந்து சொன்னார்கள் இத்தனாள் காலமே முதற்கொண்டு இரண்டு மணி மட்டுக்குந் துரையவர்களுக்கு சரீரம் சுவஸ்த மில்லாமலிருக்கிறதென்று தெருக்கதவு மூடியிருந்தபடியினாலே நான் போகவுமில்லை மத்த வெள்ளைக்காறர்களும் போகயில்லையென்று சொன்னார்கள் அப்பால் பனிரெண்டடிச்சு பிற்பாடு கதவு திறந்து அவர்கள் போக்குவரத்து உண்டாயிருந்துதென்று சொன்னார்கள். இத்தனாள் மமுதல்லிக்கான் பவுன்சு சமத்தாய் வந்தவாசி மோகத்துமா மூனு லக்ஷம் ரூபாய் தீத்துக்கொண்டு அவிடம் விட்டு வெள்ளிமேட்டுப்பேட்டை வந்து தாக்கலானானென்றும் அப்பால்

செஞ்சியின்பேரிலே போவானே அல்லது விழுப்புறம் வழியாய் திருவீதி சேருவானே யென்னமோ தெரியாதென்று நாலத்து ரெண்டு பேர்கள் அல்லிநக்கிம் சாயபு முதலான துலுக்கர்களுக்கு யெழுதி வந்ததாய் சேதி சொன்னார்கள்.

இத்தனாள் காலத்தாலே ஆறு மணிக்கெல்லாம் மராட்டியர் குதிரைகள் நாற்பது அன்பது மாத்திரம் வந்து பெருமாள் நாயக்கன் சாவடி கருக்கட்டிகுப்பம் சென்னப்பட்டணம் வழி குண்டு சாலையிலே வந்து மாடுகளை ஓட்டிக்கொண்டு போனதுமல்லாமல் ஆலங்குப்பம் குயிலாபாளையம் வானூர் பிளிச்சப்பள்ளம்கூட கொளுத்தி விட்டதினாலேயுங் குடிகள் காபிருபட்டு ஓடிவந்தது. சொல்லிமுடியாது யெழுதமுடியாதென்று வந்து சொன்னார். மூத்திரைப்பாளயத்துக்கு மேடுக்குமாலே வந்திறங்கியிருக்கிற கோணப்பறங்கி பவுன்சிலே சிறிது குதிரைகாறர் பிறப்பட்டு தொரத்தினமாத்திரத்திலே ஓட்டின மாடுகளை விட்டு போட்டு மாருட்டியார் ஓடிப்போன்தாய்ச் சேதி சொன்னார்கள்.

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி முராறிராயன் அண்டைக்கு யெழுதியிருந்து அதுக்குப் பதிலுத்தரம் மமுதல்லிக்கான் அண்டையி லிருக்கிற மராட்டியர் பவுஞ்சுக்கு எசமான பேருக்கு ஒரு தாக்கீதுக் காகிதம் அழைப்பிச்சார்களாம் அந்தக் காகிதத்திலே சில்லரை சுவார்கள் போய் புதுச்சேரி தாலுக்கு கிறுமங்களிலே கொள்ளை யிடுகிறார்களாம் அபபடி கொள்ளையிடத் தேவையில்லை நம்முட தாலுக்கா மராட்டிய பவுன்சு தமரும் புதுச்சேரியாருக்கும் மத்தத்துப்பண்ணுகிறதேயல்லாமல் அவர்களுக்கெதிரியாயிருக்க கவையில்லையென்று யெழுதி வந்ததாய் தாக்கீது காகிதம் அதை மமுதல்லிக்கான் கண்டிவிருக்கிற மராட்டியர் பவுன்சு சமேதார றுக்கு கொடுத்து அனுப்பினதாய்ச் சேதி சொன்னார்கள்.

இத்தனாள் ராத்திரி யேழு மணிக்கு துரையவர்களழைச்சனுப்பி விச்சு வந்தபடியினாலே வந்தவாசிக்கு அண்டையிலே காடடேரி யென்றிருக்குதாம் அந்தப் பவுன்சு செவ்வையாய்-வந்தவாசியிலே யிருந்து ஆற்காட்டுக்குப் போகவேணுமானபடியினாலே மலை சேரு பயிர் வழியானபடியினாலே பவின்சு போகமாட்டாதாம் அதினாலே கிழக்கே வந்து அதன்பேரிலே ஆற்காட்டுக்குப் போகவேணுமாம்.

ஆனபடியினாலே காட்டேரியே வந்து தாம் காட்டேரியிலிருந்து ஆற்காட்டுக்கு வசுக்கர் கடச்சுப் பண்ணிப் போகுதென்று வேகுகாறன் வந்து யிப்போதான் சொன்னான். காட்டேரியென்று யெந்தயிடத்தில் யெங்கே அது நீ அறிவாயாவென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது நானறியேன். அவ்விடத்து கிறுமங்கள் சாடையறிந்தவர்கள் உண்டு அவர்களைக்கொண்டு தெரிஞ்சுக் கொண்டு சொல்லுகிறேன் என்று சொன்னதுக்கு மதனாந்த பண்டிதனுக்குத் தெரியும் அவனை அழைப்பியென்று சொன்னார் அவன் வந்தவுடனே அவனை கேட்டதுக்கு காட்டேரி யென்கிற கிராமம் பேர் கேட்டதுண்டு அது இன்ன இடம் என்றும் இன்ன ஸ்தலத்துக்கு சமீபமென்றும் தெரியாது.

தெரிந்தவர்களைக்கொண்டு வாரேன் என்று சொல்லிப்போய் அரி பண்டிதரென்கிற பிருமணனை அழைத்து வந்து யிவனுக்கு வெகு வாடிக்கை வந்தவாசியிலே குடியிருந்தவன் யென்று சொன்னதின் பேரிலே காட்டேரி அல்லது காட்டேரிகுப்பம் யென்கிறது வந்தவாசிக்கு வாயுமூலையாயிருக்குதென்றும் இரண்டு நாழிகை வழியுண்டு அது ஆற்காட்டுக்குப் போறவழியென்று சொன்னவுடனே அப்பால் மதாம் அண்டைக்கு அழைத்து வந்து உள்ளே போனார்கள் நான் என கச்சேரியே வந்தேன்.

இத்தனாள் காலத்தாலே பதினொரு மணி மட்டுக்கும் துரையவர்கள் வீட்டுக் கதவு சாத்தியிருந்தபடியினாலே பனிரெண்டு மணி மட்டுக்கும் நானென் கச்சேரியிலிருந்து அப்பால் வீட்டுக்குப் போனேன்.

*1752ஆ ஒயித்தோபர்மீ 9உ ஆங்கிரசஆ புறட்டாசிமீ 27உ சோமவாரம்*

பகலைக்கு மேலாக நான் சாப்பிட்டு ஆனவுடனே மூணு மணி வேளைக்கு துரையவர்களழைச்சனுப்பிவிச்சார். போனவுடனே மறுட்டியர் குதிரைகள் சுவார் யென்ன யித்தனை சமீபமாய் வந்து திரியுறார்கள் யென்னவென்று கேட்டார். மமுதல்லிக்கான் வந்தவாசியின்பேரிலே போனவன் மறுமடி திருவீதிக்கு வருகிறவனாக விழப்புறமிந்த பிருந்தியங்களுக்கு வந்தானானபடியினாலே யிந்த மறுட்டிய சுவார்களும் அவனுடனே கூடவந்தவர்களானபடியினாலே முன்னுதாகப்பிறப்பட்டு வந்து யெங்கேயாகிலுங் கொள்ளையாகப் படாதாவென்று திருட வந்தவர்களென்று சொன்னேன் அதுக்குத் துரை மமுதல்லிக்கான் எங்கேயிருக்கிறானென்று கேட்டார். விழுப்புறத்தண்டையிலே வந்தானென்று சொன்னேன். சறுசங்கு பேட்டையிலே யிருக்கிறானென்று சொன்னார்களே அதிலே விழுப்புறத்துக்கு வந்தானு அதென்ன அத்தனை சுறுக்காய் வந்ததென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது திரிச்சினாப்பள்ளி கோட்டையின் பேரிலே மயிசூராரும் முராரிராயனும் மற்ற வகையிராக்கள் சுத்திக்கொண்டு ராச காரியம் பண்ணுகிறார்களாம் அந்தச் சேதி மமுதல்லிக்கானுக்கு வந்தது. தறுசாய் கூச்சுதறுக் கூச்சாய் போறானென்று சொன்னேன் அதுக்கு துரையவரகள் சொன்னது வந்தவாசி சம்மதி மூணு லக்ஷ ரூபாயும் இங்கிலீசுக்காறர்தானே வாங்கிக்கொண்டு மமுதல்லிகானுக்கு ஒன்றுங் குடுக்கவில்லையாம். அதினாலே மமுதல்லிக்கானுக்கும் இங்கிலீசுக்காறருக்கும் பேச்சு வார்த்தை நடந்து சமாதானமாய் இல்லாமல் யிருக்கிறார்களாம் அதென்னவென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது இங்கிலீசுக்காறர்கள் சிப்பந்திக்காறர்களுக்கு மருந்து குண்டு வகையிரா சிலவுக்கு அந்தப்படிக்கு அவர்கள் சொந்தத்திலே போட்டார்களே அதுக்கு யீடா யெடுத்துக்கொள்ளவேணும் தக்காசாயபும் மூணு லக்ஷம் ரூபாயும் சரியாய்க் குடுக்கயில்லையாம். அறுபதினாயிரம் யெழுபதினாயிரம் யெம்மாத்திரம் ஒருக்கமோ கொடுத்திருக்கிறானும் மத்ததுக்கு வாயிதா பண்ணிக் கொண்டானும் ஆனாலிப்போ கொடுத்த பணமே மமுதல்லிக்கானுக்கும் யினிமேல்

கொடுக்கவேண்டியது தக்கசாயபுதுதான். அதுவேயல்லாமல் யினிமேல் அவன் கொடுத்துப்பேட்டதும் இவன் வாங்கிக்கொள்ளு கிறதும் தெரிந்தேயிருக்குது. ஆனால் முறைச்கும் ஒரு சாவுக்காரைக் கொண்டு டிப்புமத்தத்து குடுப்பிச்சு ஒரு யரி மேமனு பாணியிருந் தால் சொல்லவேண்டியதுயென்று சொன்னேன் அதுக்கு மமுதலவிக் கானுக்கு கஷ்டகாலமென்று சொன்னார். அதுக்கு யேவியம்தான் யிப்போ திரிச்சிராப்பள்ளியின் பேரிலே மயிசூரார் வகையராக்கள் ராச்சிய காரியம் பண்ணுகிறதும் மமுதல்லிக்கான் பிறப்பட்டு எக்காயெக்கிமாய்ப் போறதும் அதினாலே ஒன்றுக்கொன்று யிட்டோட்டு பிறந்து மமுதல்லிக்கான் பேச்சு சரிப்பிடிச்சு போடுவார்கள் ஏனென்றாலிப்போ வந்தவாசியின் பேரிலே மமுதல்லிக் கானும் இங்கிலீசுக்காறர்களும் நடத்தின அதிக்கிறம கிறுத்தியம் விறுதாவிலே போயி ஆனபடியினாலே மமுகல்லிக்கான் பேச்சு சரிப்பிடிச்சு போகுவார்களென்று சொன்னேன் மெயிதானென்று ஒத்துக்கொண்டார். அப்பால் விஜயகம்பிள்ளை வந்தான் அவனைப் பார்த்து வழுதாவூர் தண்டுக்கு அரிசி அனுப்ப வேணும் சீக்கிறமத் துக்கு யெருது மாடுகள் முஸ்தீது பண்ணி அரிசி றவாணெ பண்ணி அனுப்பென்று சொல்லி என்னையும் பார்த்து அரிசி யனுப்ப வேண்டியதுகது யெப்படி மத்தத்துப் பண்ண வேணுமோ அந்தப் படிக்கு மத்தத்து பண்ணுயென்று சொன்னார். நல்லதென்று சொல்லி நானென் கச்சேரியே வந்து அரிசி ஒரு கெரிசை றவாணெ பண்ணி அந்த சினம் அனுப்புவிச்சு பின்னையும் ராத்திரிக்கு றவாணெ பண்ணி அனுப்பத்தகக்தாக ஒரு கெரிசை அரிசி முஸ்தீத்து பண்ணி வைக்கச்சொன்னேன். யிதிலே துரையவர்கள் மூணு நாலு திரமமைப்பிச்சு அரிசி அனுப்பவில்லையாவென்கிறவே பேச்சாய் கேட்டார்.

நீங்களிப்போ சொன்னபடிக்கு ஒரு கரிசை அரிசியும் அனுப்பி விச்சோம் யின்னம் ராத்திரிக்கு அனுப்பலாமென்று ஒரு கரிசை அரிசி மூஸ்தீப்பு பண்ணிக்கச் சொன்னேன். நீங்கள் உத்தாரங் கொடுத்து கெவினிவாசலுக்கு ஒற்றியும் குடுத்தீர்களானால் இராத்திரிக்குத்தானே அனுப்பிவிக்கிறேன். என்று சொன்னேன் அதுக்குத் துரையவர்கள் சந்தோஷப்பட்டு அரிசியப்போனால் அந்தக்ஷணம் வழிவிடச்சொல்லி வாசற்படிக்கும் ஒருதி பண்ணிக் கொடுத்தார் அந்தபடிக்கு அந்த அரிசியும் றவாணெவாய்ப்போச்சுது.

### 1752 ஆம் ஒயித்தோபர் மீ 10௳. ஆங்கிரசு ஆம் புறட்டாசிமீ 28௳ செவ்வாய்க்கிழமை

இத்துரைக்கள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப்போய் கபுறு சொல்லியானவுடனே மேஸ்தர் கிலேசு (Mr. Cluce) செங்கல்பட்டு விட்டு கோவளத்துக்குப் போகாமல் சென்னப்பட்டணம் போறானென்று சொன்னார்கள். மெயிதானுவென்று கேட்டார். செங்கல்பட்டு கோட்டைக்கு ஒரு துலுக்கன் கில்லேதாரன் பேர் விளங்கனும் இறநூறுபேர் துலுக்கர் தமிழர் க்ல்துப்பாக்கி பிடிச்சவர்களும் யிருபதுபேர் வெள்ளைக்காறரும் ஒரு அன்சேனும்

வைத்துப்போட்டு மேஸ்தர் கிலேசு சென்னப்பட்டணம் போனானென்று சொன்னார்கள் கோவளத்துக்காரனும் யிருபதுபேர்கள் சட்டைக்காரர்கள் வெள்ளைக்காரர்களும் நாற்பது அன்பது சிப்பாயிகள் கல்துப்பாக்கிப் பிடிச்சுவர்களும் ஒரு அன்சேனையும் வைத்தார்கள் இங்கிறேசுக்காறர் மனுஷர்கள் சிறிதுபேர்கள் சோறுகான் முத்தப்பிள்ளை தாலுக்கு காது அறுபட்டகொண்டை கட்டி சீனிவாசன் வகையிராக்கள் செங்கல்பட்டு சீர்மை கோவளம் தாலுக்கு தோறணம் வைச்சார்களாம். அதை மமுதல்லிக்கான் தறபிலே சிறிது தாலுக்கர்கள் போய் அந்த தோறணத்தை தாங்கள் கட்டினார்களாம். அதன் பேரிலே ஒருத்தருக்கொருத்தர் ரச்சாப்பட்டு சென்னப்பட்டணத்துக்கு மேஸ்தர் சந்தரசாவுக்கு (Mr. Sunders) யெழுதினதாகவும் அதுக்குச் சென்னப்பட்டனம் துறை நாம் பிறயாசப்பட்டு கட்டவும்அவர்கள் அமுல் பண்ணவுமா நீங்கள் வந்து விடுங்கோளென்று அவரவர் தாலூக்கு மனுஷர்களை அழைப்பிச்சுப் போடச்சொல்லி சென்னப்பட்டணத்திலே யிருக்கிற அப்பாசி நயினார் வகையிராக்களுக்கு சென்னப்பட்டணம் துரை தாக்கீது பண்ணி மமுதல்லிக்கானுக்கும் நாங்கள் பிறயாசப்பட்டு சீமைகட்டவும் கோட்டை கட்டவும் நீங்கள் அமுல் பண்ணவுமா எங்கள் மனுஷர்களை வாங்கிவரச் சொன்னோம். உங்களுக்கு சம்மதியான படிக்கு நடம்பிச்சுக்கொள்ளுங்கோள்யென்றும் பினையும் தங்களுக்கு வரவேண்டியபணத்தை குடுக்கச்சொல்லியும் கண்டிப்பாக யெழுதினதாக சேதி சொன்னார்கள் யென்று சொல்லிப்போட்டு யென் கச்சேரியே வந்தேன்.

இத்தனாள் சாயங்காலம் துரையவர்கள் அழைச்சனுப்பினவிடத்திலே போனவுடனே. துரையவர்கள் சொன்னது முசே வெறியேன் (Mr. Verrier) யென்கிறவன் வழுதாவூரிலேயிருந்து யெழுதின காகிதத்தில் மமுதல்லிக்கான் பவுன்சு சமத்தாய் நேத்து விழுப்புறத்திலிருந்து இன்று திருவீதிக் கோட்டைபோய் சேருகிறானென்றும் யெழுதினான். மெயிதானாவென்று கேட்டார் நாசறு சங்குவைக் கொன்ற பேட்டையிலே வந்திறங்கினானென்று சொன்னார்கள் யிதிலே விழுப்புறம் வந்து திருவீதியும் போய் சேர்ந்தானா யென்று கேட்டார் மெயிதான் திருவீதிக் கோட்டை போய்ச்சேர்ந்தது. மெயிதான் திரிச்சிராப்பள்ளிகோட்டையை மயிசூராரும் மறவர் முராரிராயனும் அவர் வகையிராவும்கோட்டை வாங்கிக்கொள்ளுகிறதாய் சேதி வந்தது அதன்பேரிலே சுறுக்காய் வந்தானென்றும் திரிச்சிராப்பள்ளிக்குப்போக யிருக்கிறானென்றும் சேதி சொல்லுகிறார்கள் இனிமேல் விசிதமாகுமென்று சொல்லி மூன் ஆயிரம் ரூபா (ரூ. 1,000) செங்கல்பட்டு சிலவுக்கு அனுப்பச் சொல்லி கொடுத்ததுக்கு கோட்டையை இங்கிலீசுக்காறர் சுத்திக்கொண்ட படியினாலே அந்த ரூபா யெந்த உபாயம் பண்ணியுங் கோட்டைக்குள்ளே அனுப்பக் கூடாமல் சதிரங்கப் பட்டணத்திலிருந்து முசியே மிலோம் முசியே விலியான் (Mr. Melon and Mr. Villion) இரண்டு பேர்களும் கெங்கல்ப்பட்டு கோட்டையை ஒப்பிச்சுப்போட்டு சதிரங்கப்பட்டணம் வந்ததாய் பிற்பாடு கோட்டையிலிருந்த சிப்பந்தி சிலவுக்குயென்று சிறிது ரூபாய் வாங்கிக்கொண்டார்களாம் மத்த ரூபாய் நலாயிரம் வந்துது. அதை அப்பு வசம் செலுத்திப் போட்டேன். யின்னம் பாக்கிக் கொஞ்சம்

அங்கேயிருந்து வரவேணும் வந்தவுடனே செலுத்திப்போடுகிறேன் யென்று சொன்னேன் மொயிதீன் அப்பு வந்து கபுறு சொன்னா னென்று சொல்லி இங்கிலீசுக்காறர்களுக்கும் மமுதலிகானுக்கும் சமாதானமாயிருக்குதாவென்று கேட்டார். வந்தவாசிப்பணம் இங்கிலீசுக்காறர் தங்களுக்கு குடுக்கயில்லையென்று அவர்கள் கோபிச்சுக்கொண்டு பிறப்பட்டு மூன் யிவன் யிறங்கியிருந்தயிடத் தில் சுத்தி சவுக்கி யிங்கிறேசுக்காறர்களிருக்கிறது யிப்போ யிங்கிலீசுக்காறர் வேறே யிறங்குகிறார்களாம். மராட்டியர்களுக்கும் மமுதல்லிக்கானுக்கும் பேசாடிச்சு அவர்கள் போனோமென்று சொன்னவிடத்திலே அவர்களை சமாதானம் ஒரு யிடத்தில பண்ணுகிறானும் ஆனபடியினாலே மமுதல்லிக்கான் பவுன்சு வட்டைக்குலைஞ்சு ஒன்றோடொன்று சேராமல போனபடியினாலே தான் யிவன் ஓடிவந்தது என்று சொல்லுகிறார்கள் நாளைய்த் தினம் திருவீதியில் டிக்காணுவாயிருக்கிறபோது சவிஸ்தாரமாய் சேதி தெரியுமென்று சொல்லிப்போட்டு பின்னையும் சத்தே பேசியிருந்து அனுப்பிவிச்சுக்கொண்டு யென் காசாக்கச்சேரியே வந்தேன் இத்தனை மறுபடி போக்குவரத்துக் காகிதங்கள் மதாம் உத்தாரங் குடுத்துயிருந்து பத்துபதினைஞ்சு நாள் சுறுக்காயிருந்து அப்பால அடங்கியிருந்தது. மறுபடி யின்றையதினம் மதாம் போக்குவரத்துக் காகிதஞ்சோதிக்கச் சொன்னானென்று சொன்னார்கள்.

## 1752-ஷு ஒயித்தோபர்மீ 11உ ஆங்கிரசஹு பிறட்டாசிமீ 29உ புதவாரம்

இத்தனை காலத்தாலே துரையவர்கள் அண்டைக்குப் போய் கபுறு சொல்லிப்போட்டு யிஷ்டலாபமாயப் பேசியிருந்த பிற்பாடு மமுதல்லிக்கான் மேநத்துராத்திரி திருவீதி சேர்ந்தபிற்பாடு யென்ன நடக்குதோ தெரியாது யென்று சொன்னார் இங்கிலீசுக்காறர்கள் சீர்மைகள் தங்கள் அமீல்கள் அமுல்பண்ணவில்லையென்றும் விடுகிற பணம் தங்களை அடையவில்லையென்றும் வெகுதுக்காயப் பிடிச்சார் கள், அவன் பவுன்சானால் சம்பளங்குடுக்கச் சொல்லி தங்கா பண்ணுகிறார்கள் இந்தவிதமாய் சிலேஷ்மத்திலே விழுந்தாப்போலே சாவும்வராமல் யெழுந்து ஓடவும் மாட்டாமல் யெப்படி சங்கடப் பட்டு கிடக்குமோ அந்தடுக்கிலே கிடக்கிறான் யினி மமுதல்லிக் கானுடைய நாடகமாடி தீருகிறவேளையாச்சுது அவன் பண்ணின விசுவாசச்சாதகத்துக்கு அவனுக்கும் அந்தக்கட்டம் சந்தாசாயபுக்கு அவன் நடப்பிச்சாப்போலே அவனுக்கும் நடந்திருக்கிறதுக்கு அணைஞ்சுபோற தன்மை போலெ ஆவணிமாசத்தையிலேயும் பிறட்டாசி மாசத்தையிலேயும் யிவடத்தில் ஒரு சண்டையில் சத்தே தெலிச்சாப்போலே வந்தவாசிக்கோட்டை சகறுப்பனை கொள்ளையும் மூணுலக்ஷம் ரூபாய் ஆதாயமும் செங்கல்ப்பேட்டுக்கோட்டை கோவளத்துக்கோட்டை வாங்கினாப்போலே ஒரு சந்தோச முண்டாச்சுதே இனி சாவுதான் என்று சொன்னேன் அது ஆன பிற்பாடு பின்னையும் அத்தசேஷம் ஸ்ரீமுகஹு ஆனிமீ வரையிலே யிருந்து அப்பால் ஒரு கெதியேற்பட்டு நடக்குமென்று தமிழரிலே சோசியர்கள் யென்று உண்டு அவர்கள் சொல்லுகிறார்கள் யென்று

தமிழர்கள் வெகுபேர்கள் ராச்சியமெல்லாம் பேசிக்கொள்கிறார்கள் யென்று நான் கேழ்விப்பட்டசேதியை சொல்லாமலிருக்கப்போமா என்று சொன்னேன்யென்று சொன்னதுக்கு நகைத்துக் கொண்டிருந்தார் அப்பால் நான் என் கச்சேரியே வந்தேன்.

## 1752௵ ஒயித்தோபர்மீ 11௳ ஆங்கிரசு௵ பிறட்டாசிமீ 29௳ புதவாரம்

மார்ச்சு மாசத்தயிலே சீமைவிட்டு பிறப்பட்டது இந்தக் கப்பல் மசுக்கரைக்கு சிறிது பணங்காசுவகையிரா யேத்தி வந்தது அவ்விடத்துக்கு வந்ததினிசும் மசுக்கரையிலே யிறக்கிப்போட்டு ஆனவுடனே மசுக்கரையிலிருந்தும் சொலுதாதுகளை அனுப்பச் சொல்லிமுன் யிவ்விடத்திலிருந்து யெழுதிப் போனபடியினாலே சொலுதாதுகள் ஒபிசியாலுமார்கள் வகையிரா நூத்கியெழுபது பேர்களையேத்தி புதுச்சேரியிலே யிறக்கிப்போட்டு அவ்விடத்தில் சரக்குகள் உண்டாயிருந்தால் யேத்திவரச்சொல்லி அனுப்பினதாக வும் அது யித்தனாள் பகலுக்குமேலாக மூணுமணிக்குவந்து வைத்துப்பிடித்து சொலுதாதுகளையும் ஒபிசியால் மார்களையும் யிறக்கிப்போட்டு மறுபடி சீமைக்குப்போக வேண்டிய சரக்கு கட்டு ஆயிரங்கட்டு மாத்திர மிருக்கிறதுக்கு கப்பலில்லாமலிருந்த படியினாலே யிதின் பேரிலே நாளை நாளை நன்றைக்குத் தானே துவக்கி கட்டு ஏத்தி பத்துப்பதினஞ்சு நாளையிலே சீமைக்கிப் பயணம் அனுப்பத்தீந்தது. யிந்தக்கப்பலிலே வெள்ளிவரயில்லே.

இந்தக்கப்பலிலே வந்த கப்பித்தான்பேர் முசியே சூர்வில் (Mr.Surville) கப்பலின் பேர் பிரிஸ்த்தோல் (Bristol) யென்கிறவன் கப்பல் வுறு சிறிது யிந்தக்கப்பல் சீமையிலிருந்து மார்ச்சுமீ த் தையிலே பிறப்படச்சே இதுக்கு முன்னெட்டு நாளைக்கு முன் பிறென்சு யெனகிறகப்பல் சீமை விட்டு புதுச்சேரிக்குப் போய்ச் சேர ஒறதி குடுத்து அனுப்பினதாகவும் கப்பல் கப்பித்தான் சொன்னான்.

இந்தக்கப்பல் மோரீசு சேர்ந்து அவ்விடம் விட்டு செத்தேம்புறுமீ 2௳. யிவிடத்துக்குப் பிறயாணமாய்ப் பிறப்பட்டு வந்தேனென்று முசியே மீரா சொன்னான்.

## 1752௵ ஒயித்தோபர்மீ 12௳ ஆங்கிரசு௵ பிறட்டாசிமீ 30௳. குருவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப்போக வேணும் யென்று போன விடத்தில் துரையவர்கள் பத்து மணி மட்டுக்கும் நித்திறை போன படியினாலே யென் கச்சேரியே வந்தேன்.

கோவளம் கில்லே தாறனாயிருந்த முசே பிளாமென்கிற சுவாமியை முப்பது வெள்ளிக்காசுக்கு வித்த யூதனைப்போலே சுவாமி துரோகியும் செங்கல்பட்டு கில்லே தாரனிடத்திலே அந்த கில்லாவிலே முசியெ சென் சோறுமென் (St.Germain) வில்லியா மென்கிற வனுடன் கூடயிருந்த முசியே

மிலோம் இரண்டு பேர்களும் இரண்டு கோட்டைகளும் இங்கிரேசுக் காறர்களுக்கு ஒப்பிச்சுப் போட்டு சதிரங்கப்பட்டணத்திலே வந்திருந்து பிறப்பட்டு படகும் பேரிலே யேறி யித்தனுள் காலத்தாலே புதுச்சேரி துறையிறங்கி துரையவர்களைக் காண வந்தவர்கள் துரையவர்கள் நித்திரை போயிக்கொண்டிருந்து கதவு திறவாமலிருந்த படியினுலேயும் முசியே பிளாம் பண்ணின துரோகத்துக்கு நான் அறிஞ்சதை சாட்சி சொல்லாமலிருக்க வேணுமென்று அச்சத்தினுலே முன்னே யென்னை வந்து கண்டுபேச வேணுமென்று அவன் என்னண்டைக்கு வந்தான் அவனுடனே கூட முசியே மிலோமும் என்னைக் காண வேணுமென்கிற பிரீதியினுலேயும் தன் காரியம் முன்னுக்கு அனுகூலத்துக்கு நான் சாதகமாயிருக்க வேணுமென்கிறதை குறித்தும் என்னண்டைக்கு இரண்டுபேர்களும் வந்தார்கள். வந்தென்னைக் கண்டவுடனே நானும் வெகுமரியாதைப் பண்ணி வெகு உபசாரத்துடனே குசலப்பிறசினைகளான பிற்பாடு அவரவர் இல்லாவிலே தாங்களிருந்ததும் கோட்டைகள் ஒப்பிச்ச சேதிகள் முதலானதுகளெல்லாம் சொன்னுர்கள். நானும் உபசாரமா யெந்தப்படி சொல்லவேணுமோ அப்படி சொல்லி சுவாமி சங்கற்பம் அப்படி யிருந்தால் செய்யலாவ தென்ன வென்று சொல்லி ரெண்டு நாழிகை நேரம் பேசியிருந்தான் ஆன பிற்பாடு துரையவர்கள் யெழுந்திருந்தார்கள் தெருக்கதவு திறந்தார்கள் யென்று சொன்னவுடனே நாங்கள் மூணுபேரும் துரையவர்கள் வீட்டுக்குப்போனோம். அவர்கள் போய் துரையவர்களைக் கண்டு ஆசாரம் பண்ணினுர்கள் நானும் ஆசாரம் பண்ணினேன்.

அவர்கள் மேஸ்தர் கிலேசு (Mr Glisie) வந்ததும் சண்டை பண்றதும் கோட்டையை ஒப்பிச்சுப் போட்டதும் சொன்னுர்கள். முசியே பிளாம் பேரிலே வெகு கோபம் பண்ணி அப்பாலே போகச் சொன்னுர். அவணிப்பறம் வந்து முசியே பெடுத்தராம் (Mr Bertrand). எழுதுகிற காம்பிருவிலே போய் அவனுடனே பேசியிருந்து அப்பால் விடுதியே போனுன் அவன் போனவுடனே பேசியிருந்து முசியே மிலோமுடனே ரெண்டு நாழிகைநேரம் பேசியிருந்த விடத்திலே தான் சகலமும் ! போக்கடிச்சுக்கொண்டேன் என்றும் சொன்னதின் பேரிலே ஆதரவான வார்த்தையாய்ச் சொல்லி விடுதியே போகச் சொன்னுர். நானும் கபுறு சொல்லிப்போட்டு என் கச்சேரியே முசியே மிலோமும் நானும் வந்து ஒரு வீடும் அமத்திக் கொடுத்து அவனுக்கு சாப்பாட்டுக்கும் உடு பிடவை சமஸ்தமும் கொடுத்து அவனைப் போய் விடுதியே யிறங்கச் சொல்லிச் சொன்னேன். நானும் பனிரெண்டு அடிச்சுப்போன படியினுலே நான் வீட்டே வந்தேன்.

## 1752ஸு ஒயித்தோபர்மீ 20உ ஆங்கிரசுஸு அற்பிசிமீ 8உ. சுக்கிறவாரம்

இத்தனுள் கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றுல் முருரிருயன் வக்கீலாய் வந்திருந்த கிருஷ்ணுச்சாரி யென்கிற தத்துவாதி (Tadwadi—Bramam)பிருமணனுடனே துரையவர்களும் மதாமும் கருறு மதாறு (Defenitly) சொன்ன விபரமும் முருரிருயன் வராமல்

அவருடைய பவுன்சு மாத்திரம் வருகிற படியினாலே ரேசு— மீ 1க்கு ஒன்றேகால் லக்ஷம் ரூபாயும் பவுன்சு வந்து யிவ்விடம் சேந்தாய் போலே ஒரு லக்ஷம் ரூபாய்க் கொடுக்கவும் அப்பால் முறாரிராயன் வந்தாப்போல லக்ஷம் ரூபாய்க் கொடுக்கவும் வெகுமதியுங் கொடுக்கவும் ஆக்கிருக்கு முறாரிராயன் அனுப்பி விச்சுக் கொண்டு போறபோது இரண்டுலெக்ஷம் ரூபாய்க் கொடுக்கவும் என்ற சத்தியப் பிறமாணிக்கமாய் காகிதமெழுதி துரையும் மதாமும் ரெண்டுபேரும் குங்குமத்திலே கை துவைச்சு காகிதத்திலே ஒட்டி நம்பிக்கையென்றுந் தீத்துச் சொல்லி அந்த வக்கீல் பிறுமணனையும் றவாணு பண்ணி அனுப்பிவிச்சார்கள்.

முன் முறாரிறாயன் வக்கீலாய் வந்த சாமாராயன் யென்கிறவன் முறாரிறாயன் காரியம் தன் முகாந்திரமாய் இல்லாமல் கிருஷ்ணாச்சாரி மாரிபத்திலே நடக்குறதென்றும் பாப்பாய்யப்பிள்ளை மாரிபத்திலே யில்லாமல பிசுப்பு பாதிரியார் (Bishop Padre) மாரிபத்திலே நடப்பிக்க வேணுமென்றும் அப்பாச்சிராயன் முகாந்திரமாய் சாமாராயன் போய் பிசுப்பு பாதிரியாரைக் கண்டு அவருடனே சாமாராயன் சொன்னதும் யெங்கள் யிசமான் முறாரிராயன் காரியம் உம்முட மாரிபத்திலே பண்ணிக்கொண்டு யிப்போ தீந்திாக்கிறதாக கேட்டதுக்கு அன்பதினாயிரம் ஆக ஒசததிச் சொல்லி நீர் வாங்கிக் கொடுத்து நடப்பிச்சீர் யெனறால் அதிலே மிகுதியும் உமக்கு பிறதிஷ்டையுண்டு யென்று சொன்னதுக்குப் பாதிரியாரும் நல்லதென்று சம்மதிச்சு அப்படியே நடப்பிச்சுத் தாறேன் முறாரிராயன் காகிதம் ஒன்று யெனக்கு ஒன்று அழைப்பிச் சீரென்று சொன்னால் தடையில்லாமல் நடப்பிக்குறேனென்று சொன்னதாகவும் அப்பால் சாமாராயன் யிந்தப் பூருவோத்திரத் துக்கு காகிதமுகாந்திரமாகாதென்றும் தன்னன்டையில் யிருக்கிற பிறுமணனுடனே சொல்லி முறாரிராயனுடனே போய்ச்சொல்லியும் பாதிரியார் பேருக்கு முறாரிறாயன் வாங்கிவரச்சொல்லியும் அனுப்பி விச்சதாக சேதி கேழ்க்கப்பட்டுது.

இதல்லாமல் தெற்கே மரவர் முதலானவர்கள் திண்டிக்கல் மட்டுக் கும் வந்து அலாக்குப் பண்ணின படியினாலே மயிசூர் நந்திராசாவும் அவருடைய பவுன்சும முறாரியனும் கூட பவுன்சுடனே போய்க் கருவூரிலே போயிறங்கி அங்கேயிருந்து மமுதலிக்கான் லசுக்கரிலே முறாரிராயன் பக்ஷியாய் வந்திருக்கிற யின்னிசுக்கான் (Innishkan) யென்கிறவனை வரச்சொல்லி காகிதம் வந்ததாகவும் யினிசுக்கானும் பவுன்சுடனே புறப்பட்டுப் போரத்தக்கதாக மமுதல்லிக்கானுடனே சிலவு வாங்கிகொண்டு யின்று நாளைக்குள்ளே பேறவனாயிருக் கிறானென்று சேதி சொன்னார்கள்.

## 1752—ஞு ஒயித்தோம்பர்மீ 28வ ஆங்கிறசு ஞு அற்ப்பிசி மீ 16வ

இத்தனாள் சனிவாரம் நாள் நடந்த அதிசெயமென்னவென்றால் துரையவர்கள் கணக்கு றங்கப்பிள்ளை தம்பி [illegible] முதுகிலே றணங்கண்டு ஒண்ணரைமாசமாக வீட்டிலே தானிருக் கிறான். யிப்படி யிருக்க மூந்தாம் நாள் குருவாரம் மதாம் அவன்

வீட்டுக்குப்போய் அவனைப் விசாரிச்சாப்போலே விசாரிச்சு துரையவர்கள் கிட்டயிருக்கிறவர்களை சுயஸ்தமில்லாமலிருந்தா யெப்படி யிருக்குது யென்று விசாரிக்குறதேயில்லை ஆனாலுக்கு ஆத்துமா கடைத்தேறுகிறதுக்கு யெப்படியுண்டோ அந்தப்படி பாத்துக்கொள்ளென்றும் சாடையாய் சொல்லிப்போட்டுப் போனாளாம் அப்பால் நேத்து மதாம் தானே அவன் வீட்டுக்குப் போய் விசாரிச்சு றங்கப்பிள்ளையை அழைச்சு யிவனுக்கு மோக்ஷம் கிடைக்கத்தக்கதாக நடப்பிக்கவேணுமென்று சொன்னதுக்கு அம்மா அப்படி நடப்பிக்கப்போகாது நாங்கள் பெருசனங்களுள் ளவர்கள் அல்லாரும் யெங்களைத் தள்ளி நடத்துவார்களான படியினாலே யிந்தவிசேஷம் சம்மதியில்லை யென்று அவர்கள் சொன்ன தாகவும் அதுக்கு மறுபடியும் யென்ன மானாலென்ன யிவனுக்கு ஞானஸ்னானங் கொடுத்து யிவன் கடைத்தேறத்தக்கதாகப் பார்க்க வேணுமென்று மதாம் சொன்னதுக்கு ஆனால் யெங்களுறவின் முறையாருடனே ஆலோசினை பண்ணி சொல்லுகிறோமென்று சொன்னாப்போலேயும் அப்படி செய்யுங்கோளென்று மதாம் சொல்லிப்போட்டுப் போனாளாம் இத்தனை அவன் பந்துக்கள் யெல்லாம் யிந்தச் சமாச்சாரம் கேட்டு யிப்படி கொத்த நடத்தை யுண்டா அதுக்கு யெல்லாம் ஒரு சொட்டு கொண்டு வருகிறீர் களென்று சொன்னதுக்கு அப்பால் றெங்கப்பிள்ளை யின்னாசி (Ignace the Topass) பறங்கியுடனே சம்மதியில்லாத உத்தரமாய்ச் சொல்லி மதாமுக்குச் சொல்லச் சொல்லியனுப்பின விடத்திலே மதாமுடனே இன்னாசி பறங்கி சொன்னதுக்கு மதாம் கேட்டுக் கொண்டு சும்மாயிருந்து சாயங்காலம் கேவலம் உபாதியாயிருக்கு தென்கிற சேதி மதாம் கேட்டு மதாம் றங்கப்பிள்ளைவீட்டுக்குப் போய் அங்கேயிருந்த பேரையெல்லாம் அடுச்சித்துரத்தி தான் தானே சரீரம் சொறணையில்லாதவனுக்கு மந்திர உபதேசம் பண்ணி எண்ணை தடவுகிறது வாடிக்கைப்படிக்கு எண்ணையும் தடவின விடத்திலே றங்கப்பிள்ளை முதலானவர்கள் எல்லாரும் கூடி யிந்த அநியாயம் உண்டாவென்று கூக்குரல் போட்டார்களாம் அப்பால் றங்கப்பிள்ளை போய் துரையவர்களுடனே அய்யா யிந்தப் படிக்கு நடத்தினால் எங்களினத்தாரெல்லாம் எங்களைத் தள்ளி கட்டு வார்கள் மாப்பு பண்ணவேணுமென்று சொல்லிக் கொண்டதுக்கு துரையவர்கள் கோபிச்சுக்கொண்டு உனக்கென்ன அவனுடைய ஆத்துமங் கடைத்தேறத்தக்கதாக அவன் நடப்பிச்சுக்கொண்டால் நீ விவாதம் பண்ணுவானேனென்று சொன்னதுக்கு மறுபடியும் அவன் துரையவர்கள் காலிலே விழுந்து வேண்டிக்கொண்டானும் அவர் அதுக்கு பிரம்பையெடுத்து அடிக்கப்போனவுடனே யிவன் பிறப்பட்டு யிப்பால் வந்து யெப்படியாகிலும் நடப்பிச்சுக்கொண்டு போகட்டும் என்று சொல்லிப்போட்டுப் போனானும் அப்பால் துரையவர்கள் நாலுபேர் உபதேசிகளையும் இரண்டுபேர் சோபு தாரர்களையும் நாலுபேர் சேவுகரையும் அனுப்பி அவன் வீட்டு வாசற்படியிலே காவல் யிருக்கச்சொல்லி அனுப்பிவிச்சான் அதற்கு றெங்கப்பிள்ளை யென் வீட்டுவாசற்படியிலேயேன்காவல் யிருக்கிறீர் கள் அவனெங்கேயாகிலும் எடுப்பிச்சுக்கொண்டு போகட்டும் என்று சொன்னதுக்கு உனக்குயேது விடு சகலமும் அவனுதுதான்யென்று சொல்லி அவர்களாரையும் வீட்டுக்குள்ளே விடாமல் பத்திரமாய்

வாசற்படியிலே உபதேசிளும் சேவகர் சோபுதாரர் காவலிருக்கிறார்களென்று சேதி கேட்கப்பட்டது. இத்தனாள் ராத்திரி றங்கப்பிள்ளை அவன் வீட்டுக்கு யெதிரேயிருக்கிற நம்முட மாட்டுக் கொட்டாவிலேயே யிருந்தான்.

### 1752௵ ஒயித்தோபர் மீ 29௳ ஆங்கிரசு ௵ அற்பிசி மீ 17௳

இத்தனாள் ஆதிவாரம் நாள் நேத்து ராத்திரி றெங்கப்பிள்ளை வீட்டு வாசற்படியிலே காவல் வைத்திருந்த உபதேசிகளும் சோபுதாறர் சேவகர்களும் இன்று மத்தியானம் மூணு மணி மட்டுமவன் வீட்டு வாசற்படியிலே யாரையும் போக வரவொட்டாமல் காவலிருந்தார்கள்.

அப்பால் மதாம் சம்பாவுலு கோவில் பாதிரிமார்களுக்கு முத்தய்யனுக்கு ஞானஸ்தானங் கொடுங்கோவென்று நேத்து ராத்திரிதானே அழைச்சனுப்பிவிச்சதுக்கு அவர்கள் சொல்லியனுப்பின வயணம். அவன் சம்மதியாதமட்டுக்கும் நாங்களந்த வீட்டிலே வந்து ஞானஸ்தானங் கொடுத்தால் பலவந்தம் பண்ணுற தாய்க்காணும் அந்தக் காரியத்துக்கு நாங்கள் வருகிறதில்லையென்று சொல்லியனுப்பினார்கள். யின்றைய தினமும் மூணு மணி மட்டுக்கும் பாதிரிமார் வராதபடியினாலே அப்பால் நாலு மணி வேளையிலே மதாம் ஒரு தந்த பல்லக்கும் தன்னுடைய போயண்டரையும் பத்துப் பேர் சேவகரையும் ஒரு சேருவைக்காறனையும் யிரண்டு பேர்சோபுதாறரையும் கிறிஸ்துவரிலே நாலு பேரையும் கூடக்கூட்டி முத்தய்யன் வீட்டுக்கு அனுப்பிவிச்சு அவனை யெடுத்துக்கொண்டு வந்து தானப்ப முதலி தன் வீட்டுக்கு எடுத்துக்கொண்டு வந்து தானப்ப முதலி வீட்டிலே வைக்கசொல்லி யனுப்பிவிச்சான் அதுக்கு வருகிறதுக்குச் சம்மதியாதபடியினாலே மீறுபள்ளியிலேயிருக்கிற அருளானந்த உபதேசி வீட்டுக்கு யெடுத்துக்கொண்டு போய் வைத்தார்கள். அதின் பேரிலே மதாம் சம்பாவுலு கோவிலார்க்குச் சொல்லியனுப்பிவிச்சுது. முத்தய்யன் அவன் வீட்டை விட்டு அப்பாலே ஒரு கிறிஸ்துவன் வீட்டிலே வந்திருக்கிறான் அவனுக்குப் பாவசங்கல்பம் கொடுக்கிறதுக்கு வாருங்களென்று சொல்லியனுப்பிச்சதுக்கு அவர்கள் சொல்லியனுப்பிவிச்சது அவன் ஞானஸ்தானம் பெறுகிறதுக்கு அவன் கையெழுத்து யில்லாமலிருக்கிறபடியினாலேயும் நீதானே அவனுக்கு பலவந்தமாய் ஞானஸ்தானங் கொடுத்தபடியினாலேயும் நாங்கள் வருகிறதில்லையென்றும் சொல்லியனுப்பிவிட்டார்கள். அப்பால் கப்புசுக் கோவில்காறருக்குச் சொல்லியனுப்பிவிச்சாவளாம் அவர்களும் மேலே யெழுதப்பட்ட படிக்குத்தானே சொல்லியனுப்பிவிச்சார்களாம் அதின் பேரிலே மதாம் பிசுப்பாய் புதுசாய் வந்த மயிலாப்பூர் அங்கோளி பாதிரியார் என்கிறவரைக் கூட வழைத்துக்கொண்டு முத்தய்யனிருக்கிற உபதேசி வீட்டுக்குப் போய் மொழுகு திரி கொளுத்திவிச்சு அவனுக்கு அந்திய காலத்திலே செய்யவேண்டிய சடங்கெல்லாம்

கடப்பிச்சார்கள். மேலே யெழுதப்பட்ட சேதியை பட்டணத்துக்குள்ளே யெவர்கள் யென்ன சொல்லிக்கொள்ளுகிறார்களோவென்று சேவுகர்களுக்கும் வேவுகாறர்களுக்கும் பிஷ்ஷைக்காறர் வேஷம் போட்டு வீடுக்கு வீடு பிச்சை பூந்து அந்தந்த வீட்டிலே யென்ன சொல்லிக் கொள்ளுகிறார்களோவென்று விசாரிக்கச் சொன்னதாகவும் அந்தப்படிக்கு விசாரிக்கிறார்களென்று சேதி கேழ்க்கப் பட்டுது.

இத்தனாள் றாத்திரி யேழு மணி வேளையிலே முத்தய்யன் பரமபதம் சேர்ந்தான். அந்தச் சேதி துரை பெண்சாதி கேட்டு பிணத்தை யொரு கிறிஸ்தவன் வீட்டுக்கு யெடுப்பிச்சுக்கொண்டு போகச் சொல்லியும் காலமே தானே வந்து சம்பிறமமாய் யெடுப்பிக்கப்போறேனென்றுஞ் சொல்லியனுப்பின படிக்கு அந்தப்பிணத்தை பின்னையொரு கிறிஸ்துவன் வீட்டுக் கெடுப்பிச்சுக் கொண்டு போனார்கள்.

இத்தனாள் காலத்தாலே நான் வெளியே பிறப்படவேணும் யென்று யோசனை பண்ணி ஆறாந் தேதி முதல் சரீரம் சுவஸ்தமில்லாமல் வெளியே பிறப்படாமல் யிருந்ததைத் தொட்டு ஆறேழு தரம் சீக்கிறமத்துக்கு வரவேணுமென்று அடிக்கடி சொல்லியனுப்பினதைத் தொட்டு யினி தாமதம் சொல்லிப்போகாமல் போகவேணுமென்று பிறப்பட்டு நான் யிருக்கிற காசாக் கச்சேரியே வந்தேன். அப்போ ஆனைப்பிள்ளை குமாரன் றங்கப்பிள்ளை தம்பி முத்தய்யனை மதாம் துப்பிளேக்சு சோறுவரி பண்ணி மூந்தாம் நாள் கிரிஸ்தாம் கொடுத்து நேத்து சாயங்காலம் குத்துயிருடனேயிடக்கிறவனை ஒரு பல்லக்கின் பேரிலே போட்டு மீரா பள்ளியிலே ஒரு கிறிஸ்துவன் வீட்டிலே போட்டதும் அங்கே நேத்து றாத்திரி செத்துப்போனதுமல்லாமல் அதெல்லாம் எடுத்து நேத்து மூந்தாம் நாள் தினசரியிலே வயணமாம்படியோ யெழுதியிருக்கிறதே. இத்தனாள் அவனை யெடுத்து கல்லறையிலே கொண்டு போய் புதைக்கிறதுக்கு ஆண் பிள்ளைகளுக்கும் பெண்டுகளுக்கும் சொல்லி எல்லாரையும் பிறேதத்தின் பிறகே வரச்சொல்லி தானும் அஞ்சாறு சொலுதாதுகளையும் காடுது குதிரைக்காறர்களையும் கூடக்கூட்டிக்கொண்டு பிறப்பட்டு மீரா வெளிக்குப்போய் அந்தப் பிரேதத்தை தன் மகனேறுகிற தந்தப் பல்லக்கிலே போட்டு கிறிஸ்துவர் சாவுகளுக்கு பாதிரிகளை பிள்ளைகள் மெழுகு திரி பிடிச்சுக் கொண்டு பிறகே வேதத்திலேயிருக்கிற படிக்குப் பிடிச்சுக் கொண்டு வர அதிர்வெடி சுட மேளதாளத்துடனே சம்பிறமமாய் யெடுப்பிச்சுக்கொண்டு போகத்தக்கதாக திட்டம் பண்ணிக்கொண்டு மதாம் துப்பிளேயிக்சு பிறப்பட்டு பிறேதமிருக்கிற மீரா வெளிக்குப் போனாள். அப்பால் துரையவர்கள் அண்டைக்குப்போனேன். அவர் தென்னண்டை பாரிசம் சாலையிலே ஒண்டியாய் உலாத்திக்கொண்டிருந்தவர் யென்னைக் கண்டவுடனே பொத்கலின்பேரிலே போயி உட்கார்ந்துகொண்டு கையிலே பத்தகம் பார்த்துக்கொண்டிருந்ததை அப்பாலேயிருக்கிற நாற்காலியிலே கண்ணாடியைக் கூடவைத்து யென்னைப் பார்த்து யிப்போ சரீரம் ஆரோக்கியமாயிருக்கிறதாவென்று கேட்டார். உங்களுடைய பரிபூரண கடாசத்தினாலே ஆரோக்கியமாச்சுது என்று சொன்னேன்.

## 1752௵ நொவாம்பர்மீ 4௳ ஆங்கிரச௵ அற்பிசிமீ 23௳ சனிவாரம்

இத்தனுள் கேள்விபட்ட சேதி வல்லபு சுந்தரர் குமாதஸ்தா நாகண்ணுநாயக்கன் யென்கிறவன் தனக்கு காசுதின்கான் லெசுக்கரிலிருந்து தங்கள் கடை குமாஸ்தா யெழுதின காகிதம்வந்துது. அந்தக் காகிதத்திலே காசுதின்கான் (Ghazi-ud-din-Khan) அபறங்காபாத்து வந்து சேந்தவுடனே சலாபத்து சங்கு அனுப்ப பாசிராயன் குமாரன் சவாபாசிராயன் அண்டைக்கு சயிது லசுக்கர்கானை தனக்கு மத்தத்தாய் வரவேணுமென்று தெரியப்படச் சொல்லச் சொல்லி அனுப்பினதுக்கு அவன் சையிது லசுக்கர்கானைக் கண்டு பேசின பிற்பாடு பாசிராயனும் சயிது லசுக்கர்கான் கூடப்பிறப்பட்டு அபறங்காபாது வந்து சேர்ந்து காசுதின்கானை மிலாகத்துப் பண்ணி சந்திப்பு பண்ணியான பிற்பாடு சலாபத்துசங்குவுக்கு பறோடா தேசம் கொடுக்க சவாபாசிராயனும் காசுதின்கானும் யோசனை பண்ணி தீத்து எழுதினதுக்கு சலாபத்துசங்கு தான் தகப்பன் சுபா பண்ணவேணுமென்று யிருக்கிறவன் பறோடா தேசம் வாங்கிக்கொண்டு யிருப்பானா அதுக்குச் சம்மதியில்லாமல் சண்டை பண்ணுகிறதென்று சலாபத்துசங்கு பதிலுத்தரம் காசுதின்கானுக்கும் சவாபாசிராயனுக்கும் எழுதி அனுப்பிவிட்டு அயிதராபாத்துக் கோட்டையிலிருந்த கில்லேதாரன் வெள்ளைக்காறர்களை கோட்டைக்குள்ளே அழைப்பிச்சுக்கொள்ளுகிறதில்லையென்றும் கசானுயிருக்கிறது பாதுசா உத்திரவுயில்லாமல் கொடுக்கிறதுயில்லையென்றும் சொன்னதாகவும் அதின் பேரிலே சலாபத்துசங்கு கில்லாதாரனுக்கு அபத்தம் போலே தோணப் பண்ணி சினேகம் விறுத்தியாய் நடப்பிச்சு யெதிராளிக்கு சந்தேகம் தோத்தாமல் நடப்பிச்சுக்கொண்டு வெளியே வருகிறப்போலேயும் மறுபடி அவனை அம்பக்கம் பண்ணி கில்லாவுக்கும் தன் வீட்டுக்கும் அவன் அரமனைக்கையில்லாமல் அவன் வரவும் யிவன் போகவும் யிப்படி பண்ணிக்கொண்டு விருந்துக்கு கில்லேதாரன் வகையிரா அவன் தானுக்கு பெரிய மனுஷர்களுக்கும் சொல்லி வரச்சொல்லி அவர்கள் வந்தவுடனே பத்திரம் பண்ணிக் காவல் வைத்துப்போட்டு கில்லாவை தன் வசம் பண்ணிக்கொண்டு அதிலே முசியே புசி (Monsieur Bussy) முதலான வெள்ளைக்காறர்களைக் கொண்டு போய் வைத்துப் பாறுக்காறர்களையும் கோட்டையில் கொண்டு போய் பீறங்கிகள் குந்தாணிப் பீறங்கிகள் வகையிரா ஆயுதங்களும் அதுக்கு மருந்து குண்டு வகையிரா சான்சாமிகளும் முஸ்தீத்துப் பண்ணி கில்லாவிலே சேத்து துப்பாக்கிகள் வகையிரா ஆயுதங்கள் கத்திகள். ஈட்டிகள் வகையிறு ஆயுதங்களும் விஸ்தாரமயக் கொண்டு போய் சேர்த்து செனங்களிருக்கிறவர்களுக்கு சாப்பாட்டுக்கு ஆன ரஸ்துக்கள் யென்ன வுண்டோ அதுகளெல்லாம் கொண்டு போய் விஸ்தாரமாய் சேர்த்து கோட்டையைப் பெலப்படுத்திக்கொண்டு அப்பால் தென்னண்டையிலிருக்கிற அய்யாயிரம் ஆராயிரம் சுவார்கள் கால்ப்பெலம் வகையிராக்களையுஞ் சிறிது வெள்ளைக்காறர் வகையிரா பாறுக்காறர்களையும் கூட்டிக்கொண்டு வெளியே கூடாரம் போட்டு சிறிது பீறங்கிகள் வகையிரா சண்டை சான்சாமுகளையும் தயாரு பண்ணிக்கொண்டு கோட்டையை நம்முடைய வெள்ளைக்காறர் வசம் பண்ணிப்போட்டு

வெளிக் கூடாரத்திலே சலபத்துசங்கு வந்திறங்கினதாகவும் யிந்தச்சேதி யெல்லாம் காசுதின் கானும், சவா பாசிராயனும் கேட்டு அவர்களும் வகூம் சுவார்களுடனே சண்டைக்கு யெத்தனம் பண்ணிக்கொண்டு அபறங்கா பாத்து விட்டு நித்தியம் நாலுநாழிகை வழி விழுக்காடு நாலு நாளையபயணமிப்பறம் வந்ததாகவும் இனிமேல் தெய்வமெப்படி நினைத்திருக்கிறதோ அப்படி நடக்குமென்று யெழுதிவந்ததாகவும கோவற்தன் தாசுகுமாஸ்தாக்களுக்கு காகிதாக புக்கவிசி குமாஸ்தாக்களுக்கும்கூட யெழுதிவந்ததாய் நாகண்ண நாயக்கன் என்னுடனே சொன்னான் இதல்லாமல் எனக்கும் மச்சிலிபந்தரிலிருந்து பிகாசாகலந்தர்கான் யெழுதின காகிதத்திலே நாகண்ண நாயக்கன் என்னுடனே சொன்னபடிக்குத்தானே யெழுதி யிருந்த படியினாலே அன்றுக் கொன்று தாக்கலா சரிப்பட்டபடியினாலே யிப்படி தெழுதப்பட்ட கபுறு வெங்கிறதுக்குச் சந்தேகமில்லை.

## 1752-ளு நொவம்பர்மீ 10உ ஆங்கிரஸளு அற்பசிமீ 29உ சுக்கிற வாரம்

இத்தனாள் ராத்திரி யெட்டு மணிக்கு நானென் கச்சேரியிலே யிருக்கச்சே வல்லபு சுந்தரர் குமாஸ்தா நாகண்ணன் நாயக்கன் யென்கிறவன் வந்து சொன்னது கோல்க்கொண்டையிலே யிருந்து காகிதம் வந்தது அந்தக் காகிதம் கொண்டுவந்த சேவகனை துரையவர்கள் வீட்டுக்கு வழிச்சாரி சேவகன் அழைச்சுக்கொண்டு போய் விட்ட படியினாலே அந்தக்காகிதங்கள் கோல்க் கொண்டையிலிருந்து வந்ததென்று துரையவர்களுக்குச் சேதி சொன்னாப்போலே அதை வாங்கி வைத்துக் கொண்டு என்னை அழைத்து வரச் சொல்லி அந்தக் காகிதமுமக்கு வந்தது தானோ வென்று லக்கோட்டாவை குடுத்துப் பார்க்கச் சொன்னதின் பேரிலே லக்கோட்டாவை வாங்கி மேல் விலாசத்தைப் பார்த்து யெனக்கு வந்தது தானென்று சொன்னேன். அதைப் பிரிச்சுப் படிப்பிச்சப்பின் சலாபத்து சங்கு சேதி யென்ன எழுதியிருக்குது பார்த்துச் சொல்லென்று சொன்னார். நல்லதென்று படிச்சுப்பார்த்து சலாபத்து சங்கு அயிதராபாத்துக் கோட்டையை வாங்கிக் கொண்டு அதிலே தன் அம்மானையும், நம்முட வெள்ளைக் காறர்களையும் சிப்பாயிகள் வகையிரா அய்யாயிரம் ஆராயிரம் துப்பாக்கிக் காறர்களையும் யெண்ணாயிரம் பதினாயிரம் சுவார் மட்டுக்கும் கூட கூட்டிக்கொண்டு அயிதராபாத்துக்கு அப்பால் பிதா யென்கிற கில்லாயிருக்கிறது பதின்காதவழியிலே அந்தக் கில்லா வெகு பெலத்தகில்லா அதிலே சலாபத்து சங்கு சேர்ந்திருக்கிறான் காசுதின்கான் பாசிராயன் வகையிராக்கள் அறுபதினாயிரம் எழுபதினாயிரம் குதிரையுடனே அபரங்கபாத்து விட்டு பத்து மசல் சண்டை பண்ணுகிறதுக்கே பிறப்பட்டு வாறார்களின்மேல் உபயத்திரவர்களும் சண்டையின் பேரிலே மனதாயிருந்து வரச்சே சண்டையாகிறதுக்கு அனுமானமில்லை யென்று தெய்வசங்கல்ப்ப மென்னமாயிருக்குமோ அந்தபடி நடக்குமென்று யெழுதி அப்பால் கடைச்சமாச்சாரமும் யெழுதியிருக்குதென்று சொன்னதுக்கு நல்லசேதியாய் சலாபத்து சங்கு செயஞ்செய்திருந்தால் முன்னே வந்து சொல்லும் உமக்கு யெகுமானம் கொடுக்கிறோமென்றும் துரையவர்களும் துரையவர்கள் பெண்சாதியும் சொல்லிப்போகச் சொன்னார்கள். அந்தசேதி

உங்களுடனே சொல்லிப்போட்டுப் போவோமென்று வந்தேனென்று சொன்னதுக்கு நாகண்ணை நாயக்கனுக்கு உபசாரஞ் சொல்லி அப்பால் இஷ்டா கோஷ்டி லோகா பிராயம்பேசியிருந்து நாகண்ணை நாயக்கனை யனுப்புப்போட்டு நானும் எட்டரை மணிக்கு வீட்டுக்கு வந்தேன் இதல்லாமல் இத்தனுள் சூரிய உதயமான சர்மவேளையிலே கபுறு வந்ததென்னவென்றால் காசுதின்கான் டில்லி விட்டு லக்ஷம் குதிரையுடனே பிறப்பட்டு சலாபத்துசங்கும் பேரிலே பிறப்பட்டு ராசகாரியம் பண்ணித் தக்கன (Deccan) சுபா தான் கட்டிக் கொண்டு ஆளவேனு மென்று வந்து அபரங்காபாத்து வந்து சேர்ந்து அவ்விடம் விட்டு அயிதராபாத்திலே யிறங்கிற சலாபத்து சங்கும்பேரிலே சண்டை பண்ண வேணுமென்று பாசிராயனையுங் கூட்டிக்கொண்டு பிறப்பட்டு அவரங்காபாதுக்கிப்பால் நாலுமசிலி வந்து யிறங்கினவிடத்திலே . சலாபத் சங்கு ஆலோசனை பண்ணி அதின்பேரிலே காசுதின் கானுக்கு சமையல் பண்ணி சாப்பாடு வைக்கிற படுருசிகானுவிலே யிருக்கிற பேர்களுக்கு லக்ஷமிரண்டுலக்ஷம் கொடுக்கிறேனென்றும் காசுதின் கானுக்கு வைக்குற சாப்பாட்டிலே விஷம் வைத்து கொல்லச் சொல்லியும் சொல்லி அனுப்பினதாகவும் அந்தப்படிக்கு அவருடைய யபுருசிகானுவிலேயிருக்கிற பேர்கள் அவருக்கு வைக்கிற சாப்பாட்டிலே விஷம் வைச்சாப்போலேயும் அவரந்த சாப்பாடு சாப்பிட்டாப்போலே யவருக்கு சரீரத்துக்கு அவஸ்தை கண்டு மூணாம்நாள் செத்துப்போனாரென்றும் அந்தக்கபுறு அவ்விடத்திலே யிருக்கிற புக்கன்சி காசிதாசு குமாஸ்தாக்கள் கூடலூர், தேவனாம் பட்டினம்யிதிலே இருக்கிற ஷை குமாஸ்தா ஆசிவசங்கா தறுவாடிக்கி யெழுதியனுப்பினதாகவும் அந்த சிவசங்கா தறுவாடியிவடத்திலிருக்கிற குமஸ்தா ஆசாரம் தறுவாடிக்கும் யெழுதியனுப்பினதாகவும் அசாரம் தறுவாடி யிந்தக் கபுறு துரையவர்களுடனே சொல்லுவோமென்று துரையவர்கள் வீட்டுக்குப்போனவிடத்திலே துரையவர்கள் நித்திரை போயிருந்தபடியினாலே அப்பால் ஆசாரம்தறுவாடி நானிருக்கிற கச்சேரியே வந்து என்னுடனே மேலெழுதப்பட்ட தேதியைச் சொல்லி யின்னயிந்தக்கபுறு துரைவயர்களுக்கு அறிக்கை பண்ண யில்லை யானபடியாலே நீங்களிந்த சமாச்சாரம் ஆருடனேயும் சொல்ல வேண்டாம் யென்று சொல்லிப்போட்டி அப்பால் துரை யவர்கள் வீட்டுக்குப்போய் அவர் நித்தரையிலிருந்தெழுந்தாப்போலே காசுதின்கான் செத்துப்போன கபுறு வயணமாய் துரையவர் களுடனே ஆசாராம்தறுவாடி சொன்னதுக்கு துரையவர்கள் மிகுதியும் சந்தோஷப்பட்டு அப்பால் காசுதின் கான் செத்ததுக்குப் பட்டணத்திலே சக்கரை பங்கிடவும் பீரங்கிபோடவும் யிந்தக்கபுறு சொன்ன ஆசாரம் தறுவாடிக்கு வெகுமானம் பண்ணவும் யோசனை பண்ணி மறிபடியும் யிந்தக் கபுறுக்கு சலாபத்துசங்கு தண்டிலே யிருக்கிற முசியே புசி வகையிராக்கள் காயிதங்கள் வந்த பிற்பாடு நடத்து வோமென்று மோக்கூப்புபண்ணிப்போட்டு வெகு சந்தோஷமா யிருக்கிறாரென்று சேதிகேழ்க்கப்பட்டுது.

நான் பனிரெண்டு மணிக்கு வீட்டுக்குப் போகவேணு மென்று பிறப்பட்டு பல்லக்கும் பேரிலே யேறிக்கொண்டு போகச்சே மதனாந்த பண்டிதன் வந்து மேலெழுதப் பட்ட படிக்கு சொல்லி . துரையவர்கள் மகா சந்தோஷ மாயிருக்கிறார் களென்று சொன்னான் மெத்தவுஞ் சந்தோஷம் யென்று சொல்லிபோட்டு நான் வீட்டுக்குப்போனேன்.

## 1752ஆம் நொவம்பர்மீ 26உ ஆங்கிரச௵ கார்த்திகைமீ 15உ. ஆதிவாரம்

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி யென்னவென்றால் தேவனாம் பட்டணத்திலே யிருக்கிற புக்கன்சி காசிதாசு குமான்தா பவானி சங்கரதறுவாடி யென்கிறவனிடத்திலிருக்கிற ஷெ குமஸ்தா ஆசாரம் தறுவாடிக்கு யெழுதியனுப்பிவிச்ச விவரமாவது மமுதல்லிக்கான் தண்டிலேயிருந்து கொண்டிருக்கிற இங்கிலிசுக்காற மேஸ்தர் லோரேன்சு யிறநூறு. முன்னூறு சொலுதாதுகளையும் கூட்டிக்கொண்டு சண்டை சாமானிருக்கிறதையும் எடுப்பிச்சுக் கொண்டு தேவனாம்பட்டணம் போய் சேர்ந்தவன் நேத்தயதினம் தேவனாம்பட்டணத்திலிருந்து மறுபடியும் மேஸ்தர் லோரேன்சு தன்பிறகே அழைத்துக்கொண்டுபோன சொலுதாதுகளையுமழைத்துக் கொண்டுச் சண்டை சாமானுகளும் ஏழு பிரங்கியும் வாங்கிக்கொண்டு பிறப்பட்டு மமுதல்லிக்கான் தண்டிலே போய் சேர்ந்தாரென்று மிதல்லாமல்சலாபத்துசங்கு காகதின்கான் செத்துப்போன கபுறு கேட்டு மோமுனிப் பேட்டை (Momunipettai) யென்கிறயிடம் விட்டுப் பிறப்பட்டு அபரங்காபாத்துக்குப் போகச்சே—மமுதல்லிகான் பேருக்கு ஒரு கடுதாசியெழுதி அந்தக்கடுதாசியிலே ஆற்காட்டு சுபா உமக்குத்தானே பாலியாயிருக்குதென்றும் அதுக்கு யின்தகல்லால் பர்வானாவும் (Declaratory Parwana) ஆகிறத்தமுதலான பிருது களும் அன்வறதிகான் பகதூரென்கிற கிதாப்புங்கொடுத்து பிறகாலே யனுப்பிவிக்கிறோ மென்றும் நீர்தானுக்கு பந்துபஸ்துபண்ணிக் கொண்டு காதிர்சமாவாயிருக்கவும் யென்கிறதா யெழுதியனுப்பிவிச்ச தாகவும் அதின்பேரிலே மமுதல்லிக்கானிப்போ மழைக்காலமான படி யினாலே மழைகள் நின்ற பிற்பாடு பிறப்பட்டு—சென்னபட்டணத்துக்குப் போகவேணு மென்றும் சேத்துப் பேட்டுக்குப் போகவேணுமென்றும் யிப்படிக்கு ரெண்டு யோசனை யின்பேரிலே யிருக்கிறானென்றும் யிதல்லாமல் சலாபத்துசங்கு—பாசிராயனை தமக்கு மத்தத்தாய் வரச்சொல்லி சானேசி திம்பால்க் கர்ரையும் சயிதுலசுக்கர்கானையும் பாசிறுயனண்டைக்கு அனுப்பி விச்சவிடத்திலே பாசிராயன் சானேசி திம்பால்க்கரையும் சயிது லசுக்கர்கானையும் பிடிச்சுக் கைதுபண்ணவேணுமென்று யிருந்த படியினாலே சயிது லசுக்கர்கான் ஓடிப்போய் சானேசி திம்பல்க் மாத்திரம் அகப்பட்டுக் கொண்டபடியினாலே அவனை மாத்திரம் பிடிச்சுக்கையிது பண்ணியிருந்தப்படியினாலே அவர்நிமித்தியமாய் அனுமந்தருவுயென்கிற மருட்டிய சறுதாறு ஒருத்தனும் ராசா சந்திரசேனன் குமாரன் ராசாராமச்சந்திரனும் பாசிராயனுக்குச் சொல்லி சானேசியைக் கையிது விடுவிச்சாப்போலேயும் அப்பால் ராசாராமச்சந்திரனும் அனுமந்தராவும் சானேசியும் அவரங்காபாத்துக்குப் போய் அவ்விடத்திலே காகதின்கான், செத்துப் போனபடியினாலே அவ்விடத்துக் காரியங்களெல்லாம் பந்துபஸ்து பண்ணிக்கொண்டு மறுபடி சலாபத்சசங்கும் பேரிலே சண்டைப் போடத்தக்கதாக வந்து யெதிர்ப்பாளையம் வந்திறங்கி யிருக்கிறார் களென்கிறதாகவும் யிதுமுதலான சேதி எழுதி வந்ததாயக் கேழ்விப்பட்டுது.

முராரிராயன் வக்கீல் சுப்ராயனென்கிறனிவ்விடத்துக்கு வந்து முராரிராயனிவ்விடத்துக்கு வருகிறதற்கு கருறுநாம்தார் பிறப்பிச்சுக் கொண்டு முருரிருயனை அழைத்துக்கொண்டு வருகிறேனென்று யேழெட்டு நாளைக்குமுன்னே—சுப்பராயன் முருரிருயனன்டைக்கு துரையவர்கள் லக்யில் அனுப்பிவிச்சுக்கொண்டு போகச்சே துரையவர்கள் முருரிருயனுக்கெழுதின காகிதத்திலே வாலிகொண்டாபுரந்து ரஞ்சன்கெடை—துற்கத்திலே யிருக்கிற உசேன் சாயபு குமாரன் மொத்தபர்கான் வசத்திலே நம்முட சறுக்காற் பணங்காசு தட்டு முட்டு சிறிது திருச்சிரார்ப்பள்ளியின் பேரிலே நம்முடைய லசுக்கர் போயிறங்கியிருக்கச்சே யவ்விடத்திலிருந்து நாம் அனுப்பிவிச்சது லசுக்கருக்கு அனுப்பிவிச்சதும் லசுக்கரிலேயிருந்து வந்ததும் அவன் வசத்திலே சேந்துயிருந்தது—அதை யெல்லாம் மொத்தபர்கான் நமக்குத் துரோகம் பண்ணி இங்கிரேசுக்காறர் வசத்திலே ஒப்பிச்சிப் போட்டான். அதல்லாமல் முன்னாலே அவன் நமக்கு ஒப்புக் கொண்ட பணத்திலே சிறிது செலுத்தினான் இன்னம் லக்ஷம்—லக்ஷத்து அன்பதினாயிரம் ரூபாய் மட்டுக்கும் செலுத்த வேணும் அவன் மெத்தப்பொல்லாதவன் அரும்சாதாயிருக்குறான் நீரும்முட பவுன்சுடனே பிறப்பட்டு யிவ்வடத்துக்கு வறச்சே றஞ்சன் கொடையின் பேரிலே வந்திறங்கி மோத்தபர்கான் தாலுக்கு சீர்மையெல்லாம் கொள்ளையிட்டு அவன் கில்லாவும் பத்தேயாகுறதாயிருந்தால் அட்டியில்லாமல்—கில்லாவும் வாங்கிக்கொண்டு அவன் நம்மை மோசம் பண்ணி நம்முட பவுன்சு தட்டுமுட்டு சமஸ்தமும் அவன் வசத்திலே நம்முட மனுஷன் ஒப்பிச்சபடியினாலே அவன் நமக்கு உத்திரவாதம் பண்ணவேண்டியதாமே. நீர்—அவன் ஆஸ்திபாஸ்தி கொள்ளையிட்டுக் கொண்டு வரவுமென்றும் கொள்ளையிட்டத்திலேயும் உமக்குப்பாதி யினும் தருகுறேமென்றும் மொத்தபர்க்கானையும் பிடிச்சுக்கொண்டு வரச்சொல்லியுமிப்படியாக யெழுதியனுப்பிவிச்சதாக சேதி கேழ்க்கப்பட்டுது.

## 1752௵ நொவம்பர்மீ 28௳ ஆங்கிரசு ௵ கார்த்திகைமீ 17௳ மங்களவாரம்

இத்தனாள் காலத்தாலே பத்து மணிக்கு துரையவர்கள் யெழுந்த பிற்பாடு நான் போய் ஆசாரம் பண்ணி கபுறுசொன்னவுடனே மமுதல்லிக்கான் சேதி யென்ன வென்று கேட்டார். இங்கிரேசுக்காறர்களுக்கும் மமுதல்லிக்கானுக்கும் அசமாதானமாய்க்காணுது. அதினாலே ஆகவேணும் யில்லாவிட்டால் சம்பளம் மாசாமாசம் லக்ஷம் ரூபாய் கொடுக்க வேணுமே அதினாலேயாம் இதுவினியில்லையே முன்னையைப் போல மயிசூரார் நாற்பது அன்பது லக்ஷம் குடுத்தபடியினாலே தாராளமாய் வாங்கி சாப்பிட்டுக்கொண்டு இங்கிரேசுக்காறர்களும் மத்தத்துப்பண்ணி மேஸ்தர் சாந்தாசு (Mr. Saunders) லாரென்சு—கிலேசு—வகையிரார்கள்—லக்ஷசாந்திரங்கள் சம்பாத்தியங்கள் பண்ணினார்கள்-யிப்போது அந்தக்கட்டம் நின்ற படியினாலே சீர்மையிலிருந்து வருத்து யில்லாத படியினாலேயும் கைப்பணம் கொடுக்கமாட்டாமல் இங்கிரேசுக்காறர்கள் கைவிட்ட படியினாலே மமுதல்லிக்கான் தட்டுமுட்டுகளெல்லாம் கூடலூரிலே யிங்கிரேசுக்காறரிடமும்-லிங்கிசெட்டி—குமரப்பசெட்டி வகையிராக்கள் வீடுகள் முஸ்திதுபண்ணி அதிலே கொண்டுவந்து சேர்த்தார்

வெள்ளைக்காறர்கள் சொலுதாதுள் மேஸ்தர் லோரென்சு வகையிரா தேவனும்பட்டணம் வந்து சேர்ந்தார்கள். மமுதல்லிகானும் இரண்டு மூன்று நாளையிலே வந்து சேருவானென்று சொல்லுகிறார் களென்று சொல்லி அப்பால் அவன் தம்பி அப்துல் வாபுக்கான் ஆற்காடு விட்டு திருவள்ளூர் வந்து சேர்ந்தானே அவன் அப்பால் நெல்லூருக்குப்போன பாக்கத்துல்லா வென்கிறவன் சீமையைக் கட்டிக்கொண்டிருந்தானே யிப்போ நெல்லூர்கோட்டையும் வாங்கிக் கொண்டாப் போலேயும் அதிலே யிருந்த அன்வறதிக்கான்வைப்பாட்டி பிள்ளை மகம்மது கமால் யிருந்தானே அவன் கோட்டையை ஒப்பிச்சுப் போட்டு கவிலின்பேரிலே கோவூரென்னும் கிறுமம் அந்த கிறுமத்திலே யிருக்கிறானும். அந்த சேதி வந்தவுடனே காசுதின்கான் செத்த கபுறும் அதுக்கு முன்வந்திருந்ததே அதின்பேரிலே நெல்லுரே போயிருந்து வேளைக்குத்தக்கதாய்ப்பார்ப்போமென்று நெல்லூருக்குப் பணயமாய்த் திருவள்ளூரைப் போய்ச்சேர்ந்து அங்கே யிருந்து சென்னப்பட்டணத்துக்கெழுதி அனுப்பிவிச்சு சம்பதிராயனை அழைப்பிச்சுக்கொண்டு கண்டு பேசிக்கொண்டு அப்பால் போறவனாக யிருந்தவனை யிங்கிலீசுக்காறர்கள் மனுஷர்களனுப்பிவிச்சு தங்களுக்கு வரவேண்டிய பணம்கொடுத்து போட்டு அப்பால் போகச் சொல்லி மறிச்சுப்போட்டதாய் நிசக்கபுறாய் வந்து சொன்னார்கள் என்று சொன்னேன். மெய்தான் யிவர்கள் மனுஷர்கள் எங்கே யிருந்தவர்கள் பற்களுவை விட்டுப் போட்டுப்போறார்கள யென்று சொல்லி மதாம் அண்டைக்குப் போனார்கள் நான் பிடவை பார்க்குற சாலையே வந்தேன்.

## 1752ௗு தெசம்பர்மீ 18உ ஆங்கிரசுௗு மார்கழிமீ 7உ சோமவாரம்

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி நேத்து ராத்திரி பாகூரிலே யிருந்து கொண்டிருந்த நம்முடை டாணுவின் பேரிலே மமுதல்லிக்கான் யிங்கிலீசுக்காரர்கள் வந்து விழுந்து வெகு சேதம் பண்ணின விடத்திலே நம்முடவர்கள் முன்னூறுபேர் யிருந்ததற்கு எல்லாஞ் சிதரி பத்து இருபதுபேர்கள் புதுச்சேரி வந்து சேர்ந்தார்கள் இத்தனாள் எட்டு மணிங்கு துரையவர்களுக்கு கபுறு சொல்லினதாய்ச் சேதி கேழ்க்கப்பட்டது.

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி யின்று பதினெட்டாம் நாள் சலாபத்துசங்கு லசுக்கர் சமாச்சாரம் பிதரிலேயிருந்து (Bidar) வல்லபுசுந்தரர் குமாஸ்தா—நாகண்ணநாயக்கனுக்கு யெழுதி வந்த தென்ன வென்றால் பாசிராயன் மல்லாரி—ஒல்க்கார் வகையிராக் களுக்கும் சலாபத்துசங்குவுக்குஞ் சண்டையானதுமல்லாமல் மறுபடி பாசிராயன் தன்பவுன்சை பந்துபஸ்துபண்ணிக்கொண்டு அகாடிக்கு முப்பதினாயிரம் குதிரையும் பிடிச்சாடிக்கு முப்பதினாயிரம் குதிரையுமாக நடு மத்தியத்தில் முப்பதினாயிரம் குதிரையுமாக தொண்ணூறாயிரம் குதிரையும் மூஸ்தீது பண்ணிக்கொண்டு வந்து சலாபத்துசங்கு லசுக்கரின் பேரிலே பாசிராயனுடைய அகாடி முப்பதினாயிரம் குதிரையும் போய் விழுந்து சுத்திக்கொண்டு சண்டை போட்டமாத்திரத்திலே சலாபத்துசங்கு லசுக்கர் தமாம் காபிறாப்

பட்டுதோப்புக்காணு வகையிரா ஆயிதசாமான் முஸ்தீப்பு பண்ணிக் கொண்டு சண்டைபோடுகிறதுக்கு அவகாசமில்லாமல் யிப்படி ரெண்டு மூன்று நாள் யிருந்த மாத்திரத்திலே சலாபத்து சங்கு லசுக்கரிலே ரெண்டு ருபாய்க்கு ஒரு சேர் அரிசி கொள்ளைக் கிடையாமல் ரெம்பவும் முத்திக்கைப்பே ஈட்டவுடனே சலாபத்துசங்கு விசாரகிருந்தனுய் ஆலோசனை பண்ணிக்கொண்டு அப்பால் பாசிருயனுக்கு ராசவட்டம் விட்டு யெழுதியனுப்பிவிச்சுது யெங்கள் தகப்பனுர் நிசாமன்முலுக்கு அவர்களுக்கும் உங்களுக்கும் மிகுதியுஞ் சினேகமாயிருந்து உங்களுடைய பவுஞ்சு வாங்காமல் தையினுத்துயிருந்துகொண்டு எந்தக்காரியத்துக்கும் அனுகூலமாய் நடத்தது அப்பால் அவர் விழுந்துபோய் தமையனுருன நாசறுசங்கும் விழுந்து போனுர் யிப்பவும் கர்சுதின்கான் வந்து விழுந்து போனுர் யினி நான்யிருக்கிறேன் யென்பேச்சும் ஆயிப்போனுல் யெங்களுடைய பேரே யெடுப்பட்டுப் போகுது. அப்படிவராமல் படிக்கு நீர் என்னுடனே சமாதானமாய் முன்னுலே உபயத்திரவர்களுக்கும் யிந்தச் சினேகமெப் படியோ அதுக்குப் பத்தத்தனை அதனமாய் நடப்பிச்கொண்டு வரவும் நானும் அப்படியே நடப்பிச்சுக் கொண்டு வாறேனென்று சொல்லியனுப்பிவிச்சதாகவும் அப்பால் பாசிராயன் யோசனை பண்ணி யிப்போவாகிலும் சலாபத்து சங்குவுக்கு புத்திவந்து சமாதானமாயிருக்கவேணுமென்று யிருக்குதாவென்று சொல்லி பதில் சலாபத்துசங்குவுக்கு பாசிராயன் எழுதி அனுப்பிவிச்சது நீர் பூருவசினேகம் மனதிலே வைத்து சமாதானமாயிருக்க வேணுமென்று யெழுதியனுப்பிவிச்சீரே மெத்தவுஞ் சந்தோஷமாச்சுது. அப்படியே சமாதானமா யிருப்போமென்று யெழுதி அப்பால் சண்டையை நிறுத்திப் போட்டு பாசிராயனுக்கும் சலாபத்து சங்குவுக்கும் பேட்டியாய் ஒருத்தருக்கொருத்தர் மிலாகத்துப்பண்ணிக்கொண்டு பேச்சுவார்த்தை நடந்து சலாபத்து சங்குடனே பாசிராயன் சொன்னது பூருவா பூருவமாய் உங்களண்டையிலே யெங்கள் பவுன்சு தையினுத்தாயிருந்து நீங்கள் சொன்னபடி கேட்டுகொண்டிருங்கிறதாச்சுதே அப்படியிருக்க யிப்போ நீர் மத்தத்து வேணுமென்முல் நாங்கள் கூட்டமாட்ட மென்றோமா? பறங்கிகள் மத்தத்து யேன் வைத்துக் கொண்டிருக்கிறீர் யிப்பவும் உம்மண்டை பவுன்சை மத்தத்து வைக்குறோம் சமாதானமாய்த்தானே யிருப்போமென்று சொன்னதாகவும் அப்பால் பாசிராயனுக்கு சலாபத்துசங்கு காந்தேசி (Kandesh) என்கிற சீர்மையும் பரோடாதேசமும் பூற்னுப்பூர் கசுப்பா நீங்கலாக அதினுடனே சேர்ந்த புனலா வகையிரா ராச்சியம் சாகீரா யெழுதிக்கொடுத்ததாகவும் அப்பால் பாசிராயனும் சலாபத்து சங்குவும் மயிசூரார் பத்துப்பனிரண்டு வருஷமாய் தொப்பா பணம் கொடாமல் யிருக்குறுர்கள் யென்றும் யிவ்வடத்துக்குப் போகவேணுமென்றும் யிருக்கச்சே சத்தாரர்விலே தாராபாயியென்கிறவள் செத்துப்போன சேதி கேட்டு நானு சத்தாராவுக்குப் போனதாகவும் மல்லாரி ஓல்க்கார்ரையும் பதினுயிரம் குதிரையும் சலாபத்துசங்கு அண்டையிலே தைனுத்து வைத்துப் போட்டு போனதாகவும் சலாபத்துசங்குவும் மல்லாரி ஓல்க்கார் வகையிராக்கள் மயிசூரார்டோரிலே வருகிறதாய் யெழுதி வந்ததாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

## 1752௵ டிசம்பர்மீ 20௳ ஆங்கிரசு௵ மார்கழிமீ 9௳* புதவாரம்

இந்தநாள் காலத்தாலே கேழ்விப்பட்ட சேதி யென்னவென்றால் வேலூரிலிருந்து முதுக்தசல்லிக்கான் ((Murtaza Alikhan) துரையவர்களுக்கு அக்கபர்பாது (News letter) யெழுதியனுப்பி விச்சதாகவும் அந்தப்பாறதுலே யெழுதியிருந்த விபரமாவது மொகார் மீ 9௳ தாரிக்குக்கு காற்திகைமீ 3௳ யில் பாசிராயனுக்கும் சலாபத்துசங்குவுக்குஞ் சண்டையானதாகவும் அந்தச்சண்டையிலே உபயத்திரவங்களுக்கும் சேதமுண்டாச்சுதென்றும் அப்பால் பாசிராயன் ஆலோசனை பண்ணிக்கொண்டு சலாபத்துசங்குவுக்கு பிருன்சுக்காறர்கள் குமுக்கு துயானபடியினாலே நாமவர்களுடனே சண்டைபோட்டு செயிக்கப்போறதில்லை யென்று தீத்துக்கொண்டு சலாபத்துசங்குடனே சமாதானமாயிருக்குறோமென்று காகிதமெழுதி அந்தக்காகிதத்திலே முசியே புசியை (Mr Bussy) தம்மண்டைக்கு அனுப்பிவிச்சால் அவர் சொற்படி கேட்டு நடபிச்சுக் கொள்ளுகிறோமென்று சொல்லி எழுதி வக்கீலையும் அனுப்பிவிச்சதாகவும் அதுக்கு சலாபத்துசங்குவும் சம்மதித்து முசியே புசியையும் சபிஷிக்கந்தர்கானையும் (Shafis-Sekandar Khan) பின்னையுஞ் சிறிது சறுதாறுகளையும் பெரிய மனுஷரையும் பயணம் பண்ணி பாசிராயனண்டைக்கு சமாதானத்துக்கனுப்பி விச்சதாகவும் அந்தச்சேதி பாசிராயன் கேட்டு மல்லாரி ஓல்க்கார்ரையும் அவன் மகன் அப்பாசி ஓலுக்காரையும் பின்னையும் சிறிது சறுதாறுகளையும் முசியே புசிக்கு யெதிராகப் போயழைத்து வரச்சொல்லி நாலு நாழிகை வழிதூரம் அனுப்பிவிச்சதாகவும் அந்தப்படிக்கு அவர்களும் வந்ததாகவும் அப்பால் முசியே புசி சபிஷிக்கந்தர்க்கானுக்கும் மல்லாரி ஓல்க்கார் அப்பாசி ஓல்காருக்கும் மிலாகத்தாய் ஒருத்தருக்கொருத்தர் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு குசலப்பிறஸ்தனை நடந்த பிற்பாடு யவ்விடம் விட்டுப் பிறப்பட்டு பாசிராயன் லசுக்கருக்குப் போன உடனே அவர் தம்முடைய நவபோத்துக்கானு மட்டுக்கும் யெதிராக வந்து முசியே புசியைக் கண்டு ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு வெகுமரியாதை பண்ணி அழைத்துக்கொண்டுபோய் தம்முடைய டேறாவிலே உளுக்கார்ந்துக்கொண்டு சலாபத்துசங்குவுக்கும் தமக்கும் சமாதானமாயிருக்கிறதுக்கு யென்னென்ன ஒப்பு உடன்படிக்கைகள் பேசவேணுமோ அதுகளையெல்லாம் பேசிக்கொண்டு முசியே புசியை ரெண்டு மூன்று நாள் வைத்துக் கொண்டுயிருந்து ரெண்டாயிரம் ரூபா சிலவழிச்சு விருந்து பண்ணிவிச்சு வெகுமதி பண்ணின விபறம்:—

சரிகை பிடவை சீலே உருப்படி——————————————7

சறப்பளி தாளிப் பதக்கம்————————————

கலிகுத்துராய்——————————————————

முத்து ஆரம்——————அம்பாரி வைத்த ஆனை——————1

உமாபஷ்ஷி வைத்துக் கொத்தளக் குதிரை — — — — — 1

இப்படியாக முசியே புசியே புசிக்கு வெகுமானம் பண்ணின பிற்பாடு சபிஷ்ஷிக்கந்தர்காரனுக்கு வெகுமதிபிடவை சீலே நகை — — — — — — — — — — — — — 4

அப்பால் பாசிராயனண்டையிலிருக்கிற சறுதாறுகளும் பெரிய

மனுஷர்களும் முசியே புசிக்கு விருந்துக்கு அன்னூறு அன்னூறு
ரூபாயாகக்கொடுத்து ஒவ்வொரு சிறெப்பாவும் ஒவ்வொரு குதிரையும்
வெகுமானம் பண்ணினதாகவும் அப்பால் முசிய புசி அனுப்பி
விச்சுக்கொண்டு பாசிராயன் வக்கீலையும் கூட்டிக்கொண்டு பிறப்பட்டு
சலாபத்து சங்கு அண்டைக்கு வந்து அவருடனே நடந்த பூருவோத்
திரமெல்லாம் சொல்லி அப்பால் சலாபத்து சங்குவுடைய தசுக்க
ருக்கும் பாசிராயனுக்கும் நடுமத்தியே ஒரு டேரா போடுவிச்சு யந்த
டேராவிலே பாசிராயனும் சலாபத்து சங்குவும் வந்து பேட்டி
யாகுறதாய் திட்டம் பண்ணி அப்பாலந்த டேராவிலே யிருவரும்
போய் மிலாகத்து ஆனப்போலேயும் பாசிராயன் நசறபறத்து
குடுத்து அப்பால் சாபுசால் ஆனவுடனே சலாபத்து சங்குவுடனே
பாசிராயன் சொன்னது தமக்கு காசுதின்கான் சொன்ன
உடன்படிக்கைக்கு நடப்பிக்கவேணுமென்று கேட்டுக்கொண்ட
தாகவும் அதுக்கு சலாபத்துசங்கு சமமதிச்சு நல்லதென்று சொன்ன
தாகவும் அதின்பேரிலே பாசிராயனது யிருபத்தையாயிரம்
குதிரை (25,000) சலாபத்து சங்கு அண்டையிலே தையினுத்து
வாங்காமலிருக்கவும் பேசி தீத்துக்கொண்டதாகவும் மீந்த மருட்
டியருக்குஞ் சலாபத்து சங்குவுக்குஞ் சண்டையாயிருக்கச்சே சயிது
லசுக்கர்கான் பிறப்பட்டு பாலிக்குக்கு (Palack) அப்பால் அய்ங்காத
வழியிலே ஒரு கோட்டை யிருக்குதாம் அந்தக் கோட்டையிலே
போயிருக்கிறானும் அந்த சயிது லசுக்கர்கானை சலாபத்து சங்கு
வரச்சொல்லி யெழுதியனுப்பிவிச்சதாகவும் அவன் வந்த பிற்பாடு
சலாபத்து சங்கு தம்முட பவுன்சுடனே மல்லாரி ஒல்க்கார்
வகையிரா தையினுத்து யிருக்கிற இருபத்தையாயிரம் குதிரையும்
கூட்டிக்கொண்டு மயிசூரார் பேரிலே வருகிறவனாக யிருக்கிறா
னென்று யிப்படியாக யெழுதி வந்தக் காகிதச் சேதி கேழ்க்கப்
பட்டுது. யிந்த மறாட்டியக் குதிரை இருபத்தையாயிரத்துக்கும்
யிந்த சீர்மைக்கு வந்த பிற்பாடு வசூலாகிற பணத்திலே
பாதி கொடுக்க உடன்படிக்கைப் பண்ணிக்கொண்டு வருகிறார்கள்.

மறுபடியும் அழைப்பிச்சு யென்னுடனே சொன்னது
சலாபத்து சங்குவுக்கும் நாணாவுக்கும் சமாதானமான சேதி
யிருத்தசல்லிக்கான் யெழுதின விபரம் மேலே யெழுதப்பட்ட
படிக்குச் சொன்னார். ஆனாலந்த சமாசாரத்திலே மறாட்டியக் குதிரை
யிருபத்தையாயிரமும் மல்லாரி ஒல்க்கர் வகையிராக்களும்
சலாபத்து சங்குவுடனேகூட யிவ்விடத்துக்கு வருகுற சேதியுஞ்
சயிது லசுக்கர்கானை மனுஷர் போய் அழைக்கப்போன சேதியும்
சொல்லவில்லை சொல்ல மறந்து போனாரோ அல்லவென்று காகிதம்
படிக்கச்சொன்னவர்கள் சொல்லவில்லையே. தெரியாது அதுக்கு நான்
துரையவர்களுக்கு வெகு உபசாரமாய் நீங்கள் வந்து மகாராச
யோகசாலி உங்களுடைய பவுன்சு சலாபத்துசங்குவுக்கு மத்தத்து
போயிருக்கச்சே மராட்டியரை செயிக்கிறதென்னவாச்சரியம் யினி
பாதுசாவைக்கூட பத்தே பண்ணி அந்த தகுத்துக்கூட உங்களுக்கு
ஆகப் போகுதென்றும் அந்தப்படிக்கு நடக்குமென்கிறதுக்கு
உங்களுடைய பெயரைச் சொன்னால் லோகத்திலே யிருக்கப்பட்ட
பாதுசாக்கள் வசீர்கள் அமீர்கள் உமறாக்கள் ராசாதிராசாக்கள்
சமஸ்தமான பேரும் நடுநடுங்கிக்கொண்டிருக்கிறார்கள் அப்படிப்
பட்ட உங்களுடைய கீர்த்தி கோடி சூரிய பிரகாசமாய் பிறகாசிக்

குதுவென்று பின்னையும் அதுக்குத்தக்கதாய்ச் சொல்லி ஆசாரம் பண்ணினவுடனே துரையவர்கள் மகாசந்தோஷப்பட்டு அப்பால் கோற்றமமாமுடைய மேல்மெத்தையின் பேரிலே அழைத்துப்போய் அவ்விடத்திலே வெள்ளி மூலாம் பண்ணியிருக்கிற காம்பிருவையும் அந்தக் காம்பிருவிலே சீர்மையிலேயிருந்து வந்த பெரிய கண்ணடி கட்டியிருக்கிறதும் அவ்விடத்தில் சன்னல்களுக்கெல்லாம் பச்சைப் போட்டு சுறுட்டியினாலே தெறைகள் தசசு சரிகையினாலே சாலர் செய்விச்சுக் கட்டியிருக்கிறதும் காண்பிச்சு இதெப்படியிருக்கு தென்று கேட்டார் அதுக்கு நான் சொன்னது அய்யர் யிந்த விடு வந்து மகாறமணியமாய்ப் பார்க்கப் பார்க்க மனதுக்குச் சந்தோஷம் குடுக்கிறதுமல்லாமல் திவ்விய புவனமாயும் உங்களுடைய யோகத் துக்குத் தக்க அனுசாரமாய் அமந்துதென்றும் பின்னையும் ஸ்தவுத்தியமாய்ச் சொன்னேன். நான் சொன்னதுகளெல்லாம் கேட்டு மகாசந்தோஷத்துடனே அதுவே பிறஸ்தாபமாய் பின்னையும் லோகாப்பிறமமாய் பேசிக்கொண்டிருந்து அப்பால் அனுப்பிவிச்சுக் கொண்டு பிறப்பட்டு வந்தேன்.

1752ஞு டிசம்பர்மீ 21உ ஆங்கிரசஞு மார்கழிமீ 10உ குருவாரம்

இத்தனுள் வேலூரிலிருந்து மன்னுறுநாயக்கன் மகன் வறதப்ப நாயக்கன் நமக்கு யெழுதின காகிதப்படிக்கு யெழுதியனுப்பிவிச்ச விபறமாவது.

இப்போதும் தங்களுடனே செஞ்சிக்குப் போறேனென்றும், சொல்லி அனுப்பிவிச்சுக்கொண்டு வந்தேன். முசியே லெகிரி வேலூருக்குப் பிறப்பட்டுப் போயிவிட்டான். ஆனபடியினாலே அவனண்டைக்குப் போய் சேர்ந்தேன். முசியே லெகிரி (Mr. Legris) யென்கிறவனை துரையவர்களுடைய உத்தாரப்படிக்கு வேலூார் கோட்டை முஸ்தீது பண்ண வந்தான். அவன் பதிமூனு பேர் சொலுதாதுகளுடனே வந்திறங்கியிருக்கிறுன்.

நவாபு மிருதசல்லிக்கான் துரையவர்களுக்கு யெழுதிக் கொண்டான் வேலூரின் பேரிலே யிங்கிலேசுக்காறர்கள் வருகிறுர்கள் யென்று பிரங்கிகளெல்லாம் முஸ்தீது பண்ணுகிறுன் அதில்லாமல் ஆற்காட்டிலே பிறஞ்சுக்காறர்கள் 50 அன்பது பேரும் மூன்று ஒபிசியால் மாரையும் காவல்பண்ணியிருந்தது. அவர்களை மெள்ள அழைத்து வரவேணுமென்று துறையவர்கள் கடுதாசியெழுதியனுப்பிவிச்சார். நபாபு அவர்களுக்கும் வெள்ளைக்காறர்களுக்கும் அதுநிமித்தியம் சிறிதுமனுஷரை யனுப்பி கண்டு பேசி அனைவரும் வந்துவிட யத்தனமாயிருக்கச்சே அந்தசேதி இங்கிறேசுக்காறர்களறிஞ்சு ரெவண்டு பேருக்கு ஒவ்வொரு விலங்கு போட்டு மூணுஒபிசிவால்மாரையும் பல்லக்கும்பேரிலே போட்டு யிறநூறு பேர்சிப்பாயிகளும் அன்பதுபேர் வெள்ளைக்காறர்களும் இரண்டு பிரங்கிகளும் பிறுன்சுக்காறரையும் சென்னபட்டணத்துக்கு காரத்திகைமீ 26உ காலமே (December 10உ) ஒன்பது மணிக்கு பிறப்பட்டு சென்னப்பட்டணம் போறுர்கள். மத்தப்படி நபாபு

சண்டை பீறங்கி முஸ்தீது பண்ணுகிறூர். துறையவர்களுக்குத்தாரப் படிக்கு முராரிராயன் வந்தபிற்பாடு—ஆற்காட்டின் பேரிலே போற தாய்க்காணுது. நவாபு அவர்களுக்கு கடுதாசி வந்தது. கார்த்திகைமீ 28உ ராத்தி ரெண்டு சாமத்துக்குமேல் காடிதாசி வந்தது. சாலபத்துசங்கு எழுதியனுப்பிவிச்சார். மொகறம்மீ 8உ ஒரு சண்டையும் 9உ ஒரு சண்டையும் அன்று சண்டையிலே மல்லாரி ஒல்க்கார் என்கிற மருட்டியன் நாற்பதிணுயிரங் குதிரையுடனே டில்லியிலே யிருந்து வந்து பாசிராவுடனே சேர்ந்து முன் பாசிராவு சாமாதானமானவனை கரைச்சு நமக்கு லக்ஷத்து அன்பதிணுயிரங் குதிரை யிருக்குது நமக்கு டில்லி பாதுசா ஒரு எதிரியல்ல வென்று சொல்லி சண்டை கொடுந்தார்கள். அந்தச் சண்டையிலே ஆயிரம்—ஆயிரத்தன்னூறு குதிரை விழுந்தது. அனேகம் பேர் மராட்டியர் விழுந்தார்கள். மல்லாரிரால் ஒல்காருக்கு ஒரு காயம் பட்டது. நம்முடைய வெள்ளைக்காறர்களிலே நானூறுபேர் விழுந்தார்கள். அதின்பிற்பாடு பாசிராவு சமாதானத்துக்கு அழைத்து அனுப்பினுன் இங்கேயிருந்து முசியே புசியும் நேமத்துல்லாக்கானும் சபிஷ்ஸிக்கந்தர்க்கான் முத்தபர்க்கான் யிவர்கள் நாலுபேரும் கூடி பாசிராவைக்கண்டார்கள்—பாசிராவு—முசியே புசிக்கு ஒரு ஆனையும் வெள்ளி முஸ்தீதிது போட்ட குதிரை ஒன்றும் சரிப்பேஞ்சும் பதக்கமும் ஒரு முத்து தாவடமும் ஒரு முத்துக்கடுக்கனும் நாலுநகை வெகுமானமும் கொடுத்து அனுப்பி கூடவந்த பெரியமனுஷர் மூனு பேருக்கும் சிரேப்பாவும் கொடுத்து அனுப்பிவிச்சார். சலாபத்து சங்கு பாசிராவுக்கு தனக்குச் செல்லுகிற தேசத்திலே பாதியும் பூரணபுரி (Burhanpur) சீர்மையும் ஆற்காட்டுப் பட்டணத்திலே நூத்துக்கு முப்பத்ஞ்சு யெழுதிக் கொடுத்து முசியே புசி சொன்ன படிக்கு கேழ்க்கச் சொல்லிச்சொன்னூர். முசியே புசி—துரையவர்கள் சொன்னபடிக்கு சீரங்கப்பட்டணத்துக்குயாவது புதுச்சேரிக்குயாவது வர யிருக்கிறூர்கள் யென்று நவாபு சொன்னுர் யிப்போ றகோசி யென்கிற மராட்டியனை முன்னே புதுச்சேரிக்கு இருபத்தையாயிரம் குதிரையுடனே அனுப்பிவிக்குறூர்கள் யென்று நபாபுக்கு சலாபத்துசங்கு யெழுதியனுப்பிவிச்சார். பதினுலாம் நாள் வந்து சேர்ந்தது. அந்தச்சேதி தேவரீரவர்கள் பாத்ததுக்கு யெழுதி யனுப்பிவிச்சேன். யெங்கே யிருந்தாலும் தேவரீர்கண்டு தம்முடைய வனென்று சத்துமனதில் வைத்து அடியேனைகடத்தேற வைக்கவேணும் அது தங்கள் சித்தம் அரியக்கட்டளையிடவேணும். விண்ணப்பம் நம்முட முசபர்க்கான் கந்தஹாரிலே யிருந்தவன் பாசிராவுக்கு ராசவட்டம் விட்டு லக்ஷத்தன்பதிணுயிரம் ரூபா வாங்கிக் கொண்டு பாசிராவுடனே சேர்ந்து போனுன். பாசிராவுக்கும் முசியே புசிக்கும் சமாதான பிறகு முசாபர்க்கானுக்கு விலங்கு போட்டு முசியே புசி காவல் பண்ணுறுன். பாசிராவுக்கும் புசிக்கும் சமாதானமானயிடம் ராசா சந்திரசேனன் சீர்மையிலே இலக்கி யென்கிற பட்டணத் தண்டையிலே சமாதானமானது, முசியே புசிக்கு சலாபத்துசங்கு கிதாப்பு கொடுத்தது—கெசப்பாசங்கு யென்று பேர்

## 1752௵ டிசம்பர்மீ 22உ ஆங்கிரசு௵ மார்கழிமீ 11உ சுக்கிறவாரம்

இத்தனாள் காலத்தாலே பத்துமணிக்கு நேத்துராத்திரி வந்த முராரிராயன் மனுஷன் பாலாசிபோற்படையும் (Balaji Ghorpadai) நாரோ பண்டிதனும் கோவிந்தராவும் சுப்பராயனும்-கிஷ்ணாச்சாரி வகையிராக்களும் இத்தனாள் துரையவர்கள் பேட்டிக்கிப்போன விடத்திலே பாப்பையப்பிள்ளையும் மதனாந்தபண்டிதனும் யெதிராக கோட்டைவாசற்படிமட்டுக்கும் வந்து அழைத்துக் கொண்டு போய் துரையவர்களும்-மதாமும் கூட யிருக்கச்சே பேட்டி பண்ணி விச்சார்கள் அப்பால் துரையவர்களுக்கும் யிவர்களுக்கும் பேட்டியாய் முறாரிறாயன் துரையவர்களுக்கு கொடுத்த காகிதமும் கொடுத்து தங்களுக்கு நடப்பிக்க வேண்டிய காரியங்களுக்கு இருபத்திரண்டு அறத்திக்களாய் யெழுதிக் கொண்டுவந்த உடன்படிக்கை பறுவைதயும் கொடுத்துப் பின்னையும் பேசவேண்டியப்பேச்சையெல்லாம் பேசிக் கொண்டு தங்களுடைய மறசியெல்லாம் சொல்லிக்கொண்டதுக்கு அதுகளையெல்லாம் கேட்டு நல்லது மூனுசாமத்துக்கு நீங்கள் வந்தால் சபாபுசால் நடப்பிச்சு முறாரிறாயனுக்குப் பதில் காகிதங்களெழுதி யனுப்பிவிப்போமென்று சொல்லி வந்தபேருக்குப் பன்னீர்பாக்கு வெத்திலை குடுத்து அனுப்பிவிச்சதாகவும் அவர்களும் அனுப்பிவிச்சுக் கொண்டு விடுதிபோனார்கள்.

மத்தியானம் மூனுமணிக்கு பாளாசி கோற்ப்படையும் நாரோ பண்டிதன் கோவுந்தாராவும்-சுப்பராயன்-கிஷ்ணச்சார்ரி வகையிராக்கள் துரையவர்களண்டைக்குப் போனவிடத்திலே பாப்பய்யப்பிள்ளை-மதனாந்தபண்டிதன் கூடயிருந்துகொண்டு துரையவர்களுக்கும் முறாரிறாயனுக்கும் நடக்கவேண்டிய உடன்படிக்கை பேசிக்கொண்ட சம்மதி நான் கேட்டதென்னவென்றால் முராரிராயனுக்கு சிறிது சீர்மை சாகீர்விடவும் சிறிது கில்லாவுகள்விடவும் சிறிது சீர்மை யாசாராவாய்க் கொடுக்கவும் சீரப்பா சீர்மையும் ஆடககச்சி-தாட்டிப்பத்திரி-சீமையும் சாகீராய்க் கொடுக்கவும் யென்றும் யிது முதலானது இருபத்துரெண்டுகாரியம் அறத்திகளாயெழுதிக் கொடுத் ததுக்கு துரை சம்மதிச்சு சீர்ப்பிசீர்மை ஆடக்கிதாட்டிபத்திரி சீர்மை பேச்சுக்கு சம்மதியாமல் உத்திரம் சொன்னதாகவும் சாகீரா யில்லாவிட்டால் யிசாராவாயாகிலும் பண்ணிக்கொடுக்க வேணு மென்று கேட்டுக்கொண்டதாகவும் அதுக்கு சீரப்பி பேச்சுக்குச் சம்மதியாமல் ஆடக்கிதாட்டிபத்திரி சீர்மைக்கு மாத்திரம் யிசாராப் பேச்சுக்குப் பிறயத்தனம் பண்ணுகிறோம் அந்தபடிக்கு நடந்தால் ஆகட்டுமென்று சொல்லிப்போட்டு வந்ததாகவும் அந்தமட்டிலே அவர்களும் சம்மதிச்சுக்கொண்டு ஆற்காட்டு சீர்மை சவுதாயிப் பேச்சுக்கு வடக்கே சலாபத்து சங்குவுக்கும் பாசிறுவுக்கும் சமாதானமாய் கற்றட்டகத்துக்குக்கூட சலாபத்துசங்கு பாசிராயனுக்குச் சவுதாயி யெழுதிக்கொடுத்து இருபதினாயிரம் குதிரையும் கூட்டிக்கொண்டு பத்தேசிங்கு வகையிராக்கள் வருகிறார்களே அதுக்கெப்படி யென்று கேட்டுக்கொண்டதுக்கு-துரையவர்கள் சொன்னது அப்படியவர்கள்

வந்தாலும்--கற்னாட்டக சவுதாயி உங்களுக்குத்தானே நடக்கிறதாயிப் பண்ணி நீங்களும் நாமும் கூடியிருந்து அவர்கள் பேரிலே சண்டை போட்டு அடித்துத் துரத்தி விடுவோம் என்று சொன்னதாகவும் அப்பால் மொத்தபர்கான்-மனுஷர்களையும் அனுப்பிவிச்சு சாவுக்காறர் டைப்பும் கேட்டுக்கொண்டதுக்கு துரையவர்கள் சம்மதிச்சு-ரேசுமறுமீ 1-க்கு லக்ஷத்து யிருபத்தையாயிரம் ரூபாய்க்குக் குடுக்கிறது-ஒரு மாசத்தையத்து--ரொக்கமும் யினும் கொடுக்கிறதிலே சத்தியாய் கொடுக்கிற ரெண்டு லக்ஷம் ரூபாயிலே யிப்போ லக்ஷம் ரூபாய் ரொக்கம் கொடுத்து மத்தலக்ஷமும்-ஒரு மாசம் பொறுத்து குடுக்கிறோ மென்றும் இப்படியாக துரையவர்கள்தானே உடன்படிக்கை யெழுதிக்கொடுத்து யிதல்லாமல் பிறதமபேட்டியிலே ஆனை-குதிரை-ரத்தினம் யிழைத்த நகைகள் பெருமானம் கொடுக்கவும் முராரிராயனுக்கு யெதிராக திருவக்கரை மட்டுக்கும் முசியே அனுபோர் என்கிற வெள்ளைக்காரனையும் பின்னையும் ஒரு குமிசெல்காறனையும் பாப்பையப்பிள்ளையையும் அனுப்பிவிக்குறோம் என்று முராரிராயன் வந்தால் யிவ்விடத்திலே முன் யிதாய்த்து மொகதின்கானுக்குப் பேட்டியான மரியாதைப்படிக்கி நடப்பிக்குறோமென்று சொல்லி தீத்து யிதுகளுக்கெல்லாம் ஆணைசத்தியப்பிறமாணிக்கமாய் நம்பிக்கைகளாய் மஞ்சளிலே கைதோச்சு காகிதத்திலே வொட்டி ஒருத்தருக்குக் கொருத்தர் நடப்பிச்சுக் கொண்டு அந்த நம்பிக்கை காகிதத்தைக் கொடுத்து அப்பால் முராரிராயனை பாதுருபுல்லூர்-விட்டுப் பிறப்பட்டு திருவக்கரை வந்து சேரச்சொல்லி துரையவர்களுங் காகிதமெழுதி பாளாசி கொறப்படை வகையிராக்களையும் யெழுதச்சொல்லி அந்தக் காகிதங்களைப் பயணம் பண்ணியனுப்பிவிக்குறதுக்கு ஒரு சுவாரிநிசுவார் ஒட்டகத்தையும் பத்துசுவாரையும் பயணம்பண்ணி த்றுவாசாவுக்கு சீட்டுங்குடுத்து அப்பால் துரையவர்கள் பாளாசி ராயனுக்கு ஒரு சிறப்பனியும் பதக்கமும் ஒரு சிப்பம் சகலாத்தும் ஒரு சிரொப்பாவும் அப்பால் நாரோபண்டிதனுக்கும் கோவிந்தராவ் -சுப்பராயன்-யிவர்களுக்கு பேருக்கு ஒரு சிப்பம் சகலாத்தும் ஒரு சிரொப்பாவும் கொடுத்து அப்பால் பாளாசிராயனை அரியாமல் நாரோபண்டிதன் கோவிந்தராவு-சுப்பராவு யிவர்கள் மூணுபேருடனேயும் துரையவர்களும் மதாமும் அழைச்சு முராரிராயனை யெந்தவிதமும் அழைப்பிச்சு மதத்துப் பண்ணி நடப்பிச்சுதேவுண்டானால் உங்களுக்குச் சந்தோஷமாகத்தக்கதாக நடப்பிக்குறோமென்று சொல்லி அனுப்பிவிச்சதாகவும் அதின் பேரிலே யவர்கள் அனுப்பிவிச்சுக் கொண்டு விடுதியே போய் ராத்திரி பத்துமணிக்கு சுவார் நிசுவார் ஒட்டகத்தையும் சுவார்களையும் பயணம்பண்ணி அனுப்பிவிச்சதாகவும் அவர்கள் போனபோது வாசர்படி மூடிப்போட்டப்படியினாலே வாசற் படியண்டையிலே போறாப்போலே மரிச்சதாகவும் அப்போ ஒரு தனுசு சீட்டைக்குடுத்து அதுக்கு அந்த சீட்டிலே உங்களை விடச் சொல்லி உத்தாரமில்லையே யென்று வாசற்படி ஒடுசியால் சொன்னாப் போலேயும் அப்பால் அந்த சுவார்கள் மறுபடியும் பாளாசிராயன் விடுதியேபோனதாக சேதிகேழ்க்கப்பட்டது.

ஆனால் முராரிராயன் வருகுறதுக்குமுன் யிதாயித்து மொகதின் கானுக்கு நடப்பிச்ச மரியாதை நடப்பிக்கிறோமென்று சொன்ன மாத்திரத்திலே துரையவர்களறிஞ்சு நடத்தினதாயெனக்குத் தோன வில்லை அவன் வரச்சே நடப்பிக்கிறமரியாதையிலே அறியவேண்டியது,

A.D. IX/7

## 1752௵ டிசம்பர்மீ 29௳ ஆங்கிரசு௵ மார்கழிமீ 18௳ சுக்கிரவாரம்

இந்தனாள் பத்தொன்பதாம் நாள் சலாபத்துசங்கு வசக்கரிலே நடந்த சமாச்சாரம் கோவற்தலநாகக்-காவலத்திலே யிருக்கிற குமாஸ்தா நாகண்ண நாயக்கனுக்கு யெழுதி வந்த விபரம் கேழ்விப்பட்டதென்ன வென்றால் சலாபத்துசங்கு கற்னூட்டகத்துக்கு வந்து பந்துபஸ்து பண்ண வேணுமென்று பிறயாணமாயிருக்கச்சே பாசிராயன் சொன்னது நீர் கற்னூட்டகந்துக்குப் போகவென்னவிருக்குது நாம் பவுஷை யனுப்பி பந்துபஸ்து பண்ணுகிறோம் யென்று சொன்னதுக்கு அப்படியல்ல போகவேணுமென்று சலாபத்துசங்கு சொன்னதுக்கு பாசிராயன் சொன்னது-விடரம் கற்னூட்டகம் காசுறின்கான் யெங்களுக்கு யெழுதிக் குடுத்திருக்கிறான் நீருமந்தப்படிக்கு யெழுதிக் கொடும். நாங்கள் போய் பந்துபஸ்து பண்ணிக் கொள்ளுகிறோம் நீரிப்போ அபறங்காபாத்துக்குப் போயிருமென்று சொன்னதுக்கு அந்தப்பேச்சு சலாபத்துசங்குவுக்குத் தட்டக்கூடாமல் நல்லதென்றும் சம்மதிச்சு சலாபத்துசங்கு அபறங்காபாத்துக்குப் போகவேணுமென்று பவுன்சுடனே பிறப்பட்டு அவசிப்புதிகாயென்கிற யிடத்தில் போயிறங்கினதாகவும் அதுக்கு ஆறு கோசுக்கு யிப்பாலே அமுணாபாது (Aminabad) க்கு சமீபம் பாசிராயன் யிறங்கினதாகவும் பாசிறாயனுடைய தம்பி றகுனாதறாயனுடையவும் சதாசிவறாயரென்கிறவனும் முப்பதினாயிரம் குதிரையுடனே கற்னூடகத்துக்கு வருகிறவர்களாய் பிறப்பட்டு பீதரிலே வந்திறங்கினார்களென்றும் யிப்படியாக எழுதி வந்ததாக சேதி கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் காலத்தாலே முசியே பெத்தலமே (Mr. Part! clemy) காரைக்கால் துரைத்தனத்துக்கு போறதுக்கு பயணம் கிஷ்க்கருனையானபடியினாலே நான் போய் அவரைக்கண்டு காரைக்கால் கும்பினீர் வர்த்தகர் குமாஸ்தாக்கள் அப்பாஜி அய்யன் மங்காச்சியாப்பிள்ளையையும் அழைப்பிச்சு அன்பது அன்பது அன்பது வராகனுக்குப்பொன் பொத்தான் அழைப்பிச்சு வரச்சொல்லி அதை அவர்கள் வைத்துப் பேட்டி காணச் சொல்லி அதை அவர்கள் வாங்கி முசியே பெடுத்தல்மியுடனே காரைக்கால் கும்பினீர் வர்த்தகர் பேரிலே நீர் தயவாய் நடப்பிச்சுக் கொண்டு வரவேணுமென்றும் அவர்கள் காரியம் ஞாயமாப்படியே நடப்பிச்சுக் கொண்டு வரவேண்டியதென்றும் பின்னையும் உபசாரமாய்ச் சொன்னதுக்கு அவரும் அந்தப்படியே நடப்பிச்சுக்கொண்டு வருகுறோமென்று தயவாய்ச் சொல்லிச் சொன்னார். அப்பால் காரைக்காலிலிருக்கிற மட்ட கந்தப்பன் பேரிலேயும் தயவாய் நடப்பிச்சுக்கொண்டு வரவேணுமென்றும் பின்னையும் சிறிது சங்கதிகளுபசாரமாய்ச் சொன்னதுக்கு அவரும் அந்தப்படிக்குத்தானே நடப்பிச்சுக் கொண்டு வருகுறோமென்று யென்னைக் கந்தப்பன் பேருக்கு யொரு காகிதம் யெழுதிக்கொடுக்கச் சொல்லி சொன்னபடியினாலே நான் முசியே பெடுதல்மேயுடனே சொன்னவயணமாம்படிக்கு கந்தப்பன் பேருக்கு ஒரு காகித மெழுதிக்கொடுத்து அதுக்கு சவ்வாது எழுதிக்

கொடுத்து முத்திரை போட்டு அவர் கையிலே கொடுத்து வர்த்தகர் பேருக்கு ஒரு காகிதமெழுதிக் கொடுத்து மிகுதியும் உபசாரமாய்ச் சொல்லிப்போட்டு பிறப்பட்டு வந்தேன்.

1753ஆம் சனவரி௴ 1உ ஆங்கிரசுஞு மார்கழி௴ 21உ சோமவாரம்

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதியென்னவென்றால் சவாபாசிராயன் காகிதமொன்று தஞ்சாவூர் பிறதாபசிங்கு ராசாவுக்குப் போகையிலே நம்முடவர்கள் மனுஷர் வழியிலே கண்டு பிடிச்சு துரையவர்களண்டைக்கு வந்து கொண்டு விட்டதாகவும் துரையவர்கள் காகிதங்கொண்டு வந்த இரண்டு போறுக்காறுகளையும் அப்பாலேயிருக்கச் சொல்லி அந்தக் காகிதத்தைப் படிச்சுப் பாற்க்குமிடத்திலே யெழுதியிருந்த வயணமாவது;

புதுச்சேரி சென்றால் சாயபு அவர்களுக்கும் நமக்கும் சமாதானமாச்சுது நீர் அவருடைய உக்குமத்தியிலேயிருந்து அவர் மனதின் படிக்கு நடந்துக்கொள்ளச் சொல்லியும் யிதல்லாமல் சந்தா சாயபு பேரிலே சறுக்காருக்கே வெகு பணம் வரவேண்டியிருக்கச்சே நீர் அந்தச் சேதி அறிஞ்சுயிருந்தும் சத்துருவான மமுதல்லிக்கானுடனே கூடிக்கொண்டு சந்தாசாயபை மடிப்பு பண்ணி அவரை வெட்டிப் போட்டீர். உம்முட பேரிலே அந்தப்பளுவு யிருக்கிறபடியினாலே யிப்போ சத்துருவாய் மமுதல்லிக்கான் கலாபம் பண்ணிக்கொண்டு யிருக்கிறவன் தலையையும் வெட்டிவிச்சீரே ஆனால் அந்தத் தப்பு ஆயிப்போம் இல்லாவிட்டால் அந்த தப்பதனையும் நீர் உத்தரவாதம் பண்ணவேண்டிவரும் ஆனபடியினாலே அது அறிஞ்சு நடந்து கொள்ளவுமென்று யெழுதியிருந்ததாம். அந்தக்காகிதத்தைப் பாத்தவுடனே துரையவர்கள் மிகுதியும் சந்தோஷப்பட்டு அந்தக்காகிதங் கொண்டுவந்து கொடுத்த இரெண்டு பேரையும் அழைத்துவரச் சொல்லி பேருக்கு இரண்டு ரூபாய்க்கொடுத்து அதுக்குச் சவாது யெழுதி கட்டிக் கொண்டு அந்தச் சினார் அந்தக் காகிதத்தையும் அவர்களையும் படகின் பேரிலே வெகு சுருக்காய்ப் போய் யின்று சாயங்காலந்தானே காரைக்காலிலே கொண்டு போய்க் கொடுக்கச் சொல்லியும் அந்தப்படிக்குக் கொண்டு போய்க் கொடுத்தால் படகுக்காறருக்கு பத்து ரூபாய் யினும் கொடுக்கிறோமென்றும் சொல்லி காரைக்கால் கோவற்ணதோர் முசியே பெடுத்தலேமம் பேருக்கு ஒருகாகிதமுமெழுதி தஞ்சாவூர் ராசா காகிதம் சுறுக்கிலே தஞ்சாவூருக்கனுப்பச் சொல்லி யெழுதி றவானா பண்ணி யனுப்பிவிச்சுப்போட்டார்கள் யென்று சேதி கேழ்க்கப்பட்டுது. இத்தனாள் யிலீசுக்கான்-பாப்பய்யப்பிள்ளை வீட்டுக்குப் போய் அவன் பேரிலே முருரிருயனுக்கு தனக்கா பண்ணின ரூபாயிலே சிறிது பாக்கியிருக்குதென்றும் அந்த ரூபாய் சாடாவாய்க்கொடுத்து விடச் சொல்லியும் பாப்பய்யப்பிள்ளையைக் கேட்டத்துக்கு அதுக்கு அவன் தனக்கு முருரிருயன் வாங்கிக்கொண்ட பணத்துக்கெல்லாம் நூத்துக்குப் பத்து உண்டென்றும் அந்தப்படி வாங்கிக் கொள்ளச் சொல்லியுஞ் சொன்னாப்போலேயும் அதுக்கு யிலீசுகானுக்கு கோபம் வந்து யெங்களுக்கு சவாதுசால் நீ பண்ணியா — நாங்களாய்த்தானே சமஷ்ஷத்திலே வந்து கண்டு பேசிக் கொண்டு

வந்தோம். முசியே அல்பேர் துபாசித்தனம் பண்ணினான். அப்படி யிருக்க உனக்கு ஈங்கவேன் கொடுப்போமென்று சொன்னாப் போலே யிவனுக்கும் அவனுக்கும் வித்தியாசமாய் உதாசீனமாய் பேச்சுவார்த்தை நடந்தது அதன் பேரிலே யிலீசுக்கான் தன் கால் பையிசார் வாங்கி - பாப்பய்யப்பிள்ளை அடிக்கப்போனாப்போலே யும் குண்டூர் பாலிசெட்டி போய் தன்மேல் போட்டுக்கொண்டு அந்தப பாக்கி ரூபாய் தான் தாறேன் யென்று யிலீசுக்கானுக்குப் பாலிசெட்டி சொல்லிக் கொண்டு ரெண்டு பேருக்குஞ் சமாதானம் பண்ணி பாப்பய்யப்பிள்ளை கேட்ட சம்மதி கவையில்லை யென்று தீத்துப்போட்டு விட்டதாகவும் அதன்பேரிலே யிலீசுக்கான் (Iliayas Khan) பிறப்பட்டுப் போனாப்போலேயுஞ் சேதி கேழ்க்கப் பட்டுது.

இத்தனாள் சவா பாசிராயன் காயிதமொன்று துரையவர் களுக்கு வந்தது. அந்தக் காயிதச் சேதாவன் கேழ்விப்பட்ட சேதி யென்னவென்றால் சலாபத்து சங்குவுக்கும் தனக்கும் சமாதானமாச்சு தென்றும் றகோபாவையும் (Ragoba) மூப்பதினாயிரம குதிரையும் கற்நாட்டகத்தை பந்துபஸ்து பண்ணச் சொல்லி அனுப்பிவிச்சோம். நீங்களும் கூடயிருந்து யெந்தவிதம் பந்துபஸ்தி பண்ணவேணுமோ அந்தப்படி நடப்பிக்க வேணுமென்றும் தானும்—சலாபத்து சங்கும் பிறப்பட்டு மயிசூரின் பேரிலே போறோமென்றும் யிப்படியாக யெழுதிவந்தசேதி கேட்டு மகா சந்தோஷப்பட்டு காயிதம் கொண்டுவந்த மனுஷருக்கு நாற்பது ரூபாயுமிரண்டு பாகையும் யினாம் கொடுத்து பதில் காயிதம் யெழுதச் சொன்னாரென்று சேதி கேழ்க்கப்பட்டுது. இதல்லாமல் மூசபர்கான் தங்காக்காறர் கையிலே அபாரானபட்டு பதினாறு குதிரை சுவாருடனே ஓடிப்போய்—பாசிராயன் கைக்கீழ் சேர்ந்ததாகவும் பாசிராயன் ஆதரிச்சதாகவும் நடப்பிச்சுக் கொண்டு வருகிறானென்றும் அப்பால் பாசிராயன் மூசபர்கானை கற்நாட்டகத் துக்கும்—மூசபர்கானை கூடப்போகச் சொன்னதுக்கு மூசபர்கான் சொன்னது நான்பெகு பிறதிஷ்டையாய் வருஷப்பத்துடனே வந்தேன். அதெல்லாம் போச்சுது—நானெப்படி போறதென்று சொல்லிக் கொண்டதுக்கு நல்லது உனக்கு எப்போதும்போலே வேண்டியதெல்லாம் சான்சாமி கொடுக்கிறோம் போகச்சொன்ன தாகவும் அந்தப்படிக்கு மூசபர்கான் கூடவருகிறதாகவும் யிந்தப் படிக்கு அவன் வீட்டுக்கும் ஒரு கடுதாசி யெழுதி யெனக்கும் ஒருகடுதாசி யெழுதி யனுபபிவிச்சான்.

இத்தனாள் முறாரிராயன் சுப்பிராயனென்கிறவன் துரையவர் களண்டைக்குப்போய் பாப்பய்யப்பிள்ளை குடுக்கவேண்டிய பணம் சாடாவாய்க் கொடுக்கவில்லையென்றும் யினும் சம்மதியிலே லக்ஷத்தன்பதினாயிரம் ரூபாய் கொடுக்கிறோம் யென்று தஸ்தவேசு யெழுதிக் கொடுத்திருக்கிறதாகவும் — துரையவர்களுடனே சொனனதுக்கு துரையவர்கள் பாப்பய்யபிள்ளை பேரிலே மிகுதியும் கோபிச்சுக்கொண்டு பிரம்பாலே மேசையின்மேலே அடிச்சுப் பாப்பய்யபிள்ளையை அழைக்கச்சொல்லி ஒருத்தன் யிரண்டுபேர் மூணுபேர் சேவுகரை அனுப்பிவிச்சு அவன் வந்தாப்போலே

அவனைப் பார்த்து முராரிராயன் சம்மதி ரூபாயை சாடாவாய்ச் செலுத்தாமல் யேன் வைத்துக் கொண்டிருக்கிறாயென்றும் யிறும் சம்மதியிலே சத்தியாய் லக்ஷம் ரூபாயைக் கொடுக்கிறேனென்றும் சொன்னதேயல்லாமல் லக்ஷத்தன்பதினாயிரம் ரூபாய் கொடுக்கிறே மென்றுயெழுதிக் கொடுக்கச் சொன்னானேயென்று மிகுதியுங் கோபிச்சுக்கொண்டு அதுக்கு பாப்பய்யப்பிள்ளை சொன்னது அவர்களுக்குச் செலுத்தவேண்டிய பணஞ் சாடாவாய் செலுத்திப் போட்டேன் இன்னம் கொஞ்சம் செலுத்தவேணும் அதுவும் யிப்போ குடுக்க யிலீசுக்கானுக்கு போகச்சொல்லி யிருக்குதென்றும் யினும் சம்மதியிலே லக்ஷத்தன்பதினாயிரம் ரூபாய் கொடுக்கிறோ மென்றும் யெழுதிக்கொடுத்ததில்லை. யென்றும் சொன்னதுக்கு பாப்பய்யப்பிள்ளைக்கும் சுப்புறாயனுக்கும் துரையவர்கள் முன்பாகத்தானே வித்தியாசமாய்ப் பேச்சுவார்த்தை நடந்து உதாசீனம் சொல்லிக்கொண்டதாகவும் அதிலே சுப்புறாயன் பாப்பய்யப் பிள்ளையை—நாளதுவரைக்கும் நீ பிக்ஷை யெடுத்தவன் யுப்போ துரையவர்கள் தயவு பண்ணினதினாலே உனக்கு அயிசுவரியம் வந்துதென்றும் சொல்லிக்கொண்டிருக்கச்சே யிலீசுக்கானுக்கு பாப்பய்யப்பிள்ளை ரூபாய் சேர்ந்ததென்று துரையவர்கள் முன்பாக வந்து சொல்லச்சொல்லி யனுப்பினபடி யினாலே யிலுசுகானும் வந்து துரையுடனே ரூபாய் சேர்ந்துபோச்சு தென்று சொல்லி சுப்புறாயனுக்கும் பாப்பய்யப்பிள்ளைக்கும் சமாதானமாய்ச் சொல்லிப் போட்டானாம். அப்போது துரையவர்கள் யிலுசுக்கானுடனே யின்னம் பத்துநாள் போகட்டும் வேண்டிய பணம் தருகிறேன்—நீ முறாரிறாயனுக்கு யெழுதியனுப்பி மமுதல்லி கான் தலையை கொண்டுவரச்சொல்லி யெழுதியனுப்பென்று சொல்லி அனுப்பிவிச்சதாகவும் அப்பால் இலிசுக்கான் பாப்பய்யப் பிள்ளை சுப்பராயன் வகையிறாக்கள் பிறப்பட்டுப் போனார்களாம்.

## 1753௵ சனேரிமீ 31௳ ஆங்கிரசு௵ தைமீ 22௳ புதவாரம்

இத்தினாள் பகலுக்கு மேலாக திருவிதியண்டையிலிருக்கிற நம்முட பவுன்சு மமுதல்லிக்கான் பவுன்சின் பேரிலேபோய் நெருங்கினதினாலே சத்துருக்களுக்கு நிறுவாகமில்லாமல் மமுதல்லிக்கான் யிங்கிலீசுக்காறர் வகையிறாக்களும் பிறப்பட்டு தேவனாம்பட்டணம் மார்க்கமாய்ப்போய் விட்டார்களென்று திருவிதிக்கோட்டையிலே கொஞ்ச சனங்களை வைத்துப்போட்டுப் போனார்கள். அவர்கள் பேரிலே நம்முடைய பவுன்சு சண்டை பண்ணுதென்றும் கோட்டையை வாங்கிக்கொள்ளுவார்களென்று யிப்படியாக துரையவர்களுக்கு சேதி வந்ததாகவும் யிதல்லாமல் மயிசூர் நந்திராசா வக்கீல் வெங்கிட்ட நாரணப்பய்யனென்று வந்திருக்கிறவனுக்கு சேதி வந்ததாகவும் அவன் துரையவர்களுடனே சொன்னதாகவும் மயிசூரார் திரிச்சிராப்பள்ளிக் கோட்டையை— வாங்கிக்கொண்டு யிங்கிலீசுக்காறர்களையும் மமுதல்லிக்கான் மனுஷர்களையும் வஞ்சனை பண்ணி காவல் பண்ணியும் சிறிது பேர்களைக் கொன்றுப் போட்டும் கோட்டையைக் கட்டிக்கொண்டதாகவும் அதிலே பிறான்சுக்காறர்கள் சொலுதாதுகளை நூறு

பேர்களை மாத்திரம் முன் யிங்கிலீசுக்காறர்களை காவல் வைத்திருந்
தார்களாம் அவர்களை மயிசூரார் சேர்த்துக்கொண்டு அவர்களைக்
கொண்டு கோட்டை வாசலையும் பீறங்கிகள் சுடுகிற யிடங்களிலே
யும் வைத்துக்கொண்டு மயிசூரார் திரிச்சிராப்பள்ளி கோட்டையைக்
கைவசம் பண்ணிக்கொண்டதாய் துரையவர்களுக்கும் மயிசூரார்
ஸ்தானாபதி சேதி சொன்னதாய் ஊரிலே உண்டான செனங்களெல்
லாம் சந்தோஷமாய்ப் பேசிக்கொண்டதாய் நானும் சேதி கேட்டு
சந்தோஷமாய் பாக்கு கிடங்கு வந்து யிருக்கச்சே
துரையவர்கள் சேவுகன் வந்து அழைச்சான். அப்போ
ஆறுமணிவேளையான படியினாலே துரையவர்களண்டைக்கு
நான்போன விடத்திலே துரையவர்கள் வீட்டிலே
கிழண்டை பாரிசம் சறுக்கத்திலே துரையவர்கள்
துரை பெண்சாதி முசே தெபோசேத்து முசே பெலேன் வகையிரா
வெள்ளைக்காறர்களிருந்தார்கள் மயிசூர் நந்தி ராசாவினுடைய
வக்கீல் வெங்கிட்டநாராயணப்பையன் கூடயிருந்தான் அபபோ நான்
போனவுடனே யென்னைக்கண்ட மாத்திரத்திலே யெழுந்திருந்து
யெதிரே வந்து திருவிதி சேதி யென்னமாய்க் கேழ்விப்பட்டாயென்று
கேட்டார். அந்தப்பக்கத்திலே யெழுதியிருக்கிறபடிக்கு நான் கேழ்விப்
பட்ட சேதி திருவிதி சேதியும் திரிச்சிராப்பள்ளி சேதியும்
சொன்னதுக்கு திருவிதி சேதி முசியே தெபோசே யெனக்கெழுதின
காகிதத்தில் மமுதல்லிகானும் அவன் பவுன்சும் யிங்கிலீசுக்காறர்
பவுன்சும் மேஸ்தர் லோறென்சு வகையிராவும் திருவிதிக்
கோட்டையை விட்டுப்போட்டு கிழக்கே தேவனாம்பட்டணம்
பாத்தாப்போலே போனார்களென்றும் அவர்கள் போறதுக்கும்
திருவிதி கோட்டைக்கும் இரண்டரை மூணு நாழிகை வழியுண்டு
அந்தச் சேதி கேட்டு மருட்டியர்கள் சுவார்களெல்லாம்
மமுதல்லிக்கான் பவுன்சும் பேரிலே வெகு கோபத்துடனே
போனார்கள். நாங்களும் போறோமென்று யெழுதினான் யிப்போ
அரை நாழிகைக்குமேல் வீட்டின் பேரிலே யிருந்து பார்த்தால்
திருப்பாதிரிப்புலியூர் திருவேந்திபுரம் அந்தச்சாயலிலே துப்பாக்கி
வெடி பீறங்கிவெடி வெகு விஸ்தாரமாக அந்த நெருப்பு யிந்த மெத்தை
மேலே பார்க்க நன்றாய்த் தெரிவந்து தென்று சொல்லி யின்னம் நன்றாய்
அறியவேணும் யிப்பால் நடந்த சேதி வந்தால் ஆதியந்தமாய்
விசிதமாய்ச் சொல்லத் தெரியுமென்று சொன்னார். அது மெய்தா
னென்று சொன்னவுடனே மயிசூரார் வஞ்சனை பண்ணி கோட்டை
வாங்கி நம்முடவர்கள் நூறு பேரிருந்தார்கள். அவர்களை
மமுதல்லிக்கான் மனுஷர்கள் காவல் வைத்திருந்தவர்களை விட்டு
அவர்களை மயிசூரார் சேர்த்துக்கொண்டு கோட்டையிலே
பந்துபஸ்துவாயிருக்கிறார்கள். ஆனால் வஞ்சனை பண்ணி வாங்கி
னார்களென்று அதை அசுவாரிசயமாய்ச் சொன்னார்கள். இந்தப்
பேச்சு ஒரு நாழிகை தேச காலம் பேசியிருந்து அப்பால் தாழயிறங்கி
வந்தார். நானுங்கூட யிறங்கி வந்தேன். தாழ மமுதாக்கல் வகையிரா
துலுக்கர்களிருந்தார்கள். அவர்களில் மமுதாக்கலைப் பார்த்து
திருவிதி கோட்டை சேதியும் மமுதல்லிக்கானுக்கும் அவன்
பவுன்சுக்கும் சம்பவிச்ச சேதி கெட்டியாவென்று கேட்டார். நான்
சுவாமியைப் பார்த்துப் பிராத்திக்கிறது உங்கள் சமயமாக
வேணும் உங்கள் சாயலிலே நாங்கள் சுகமேயிருக்க வேணுமென்று
கோருகிறோம் என்று சொல்லி மமுதல்லிக்கான் ஓடிப்போய்
விட்டான் திருவிதிக் கோட்டையை நம்முடவர்கள் வாங்கிக்

கொண்டார்களென்று சேதி கேள்க்கப்பட்டேனென்று சொன்னான் அதுக்கு துரையவர்களிங்கே கேட்ட சேதியா யுனக்கேதாகிலுஞ் சேதி வந்துதாவென்று கேட்டார். யெங்கள் மனுஷர் போக்கு வரத்தேயில்லை உங்களுக்கு வருகிற கபுறு கேட்டுத்தான் நான் சொல்லுகிறேனென்று சொன்னான். ஆனால் மெய்யல்ல யின்னம் அறியவேணும் யென்று துரையவர்கள் சொல்லிப் போட்டுப் போனார். அப்பால் நான் பாக்குக்கிடங்கியே போய் வீட்டுக்கு எட்டரை மணிக்குப் போனேன்.

இத்தனாள் ராத்திரி ஒன்பது மணிக்கு கேழ்விப்பட்ட சேதி மமுதல்லிக்கான் பவுன்சுடனே தேவனாம்பட்டணம போய் சேர்ந்தானென்றும் திருவிதி கோட்டையின் பேரிலே நம்முடவர்கள் சண்டை போடுகிறார்களென்று சேதி வந்ததாய்ச் சொன்னார்கள்.

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி திருவத்தியூரிலிருந்து அமுல் பண்ணின அய்யன் சாஸ்திரி கொண்டவெட்டி சீனிவாசன் அப்பு மகம்மது தம்பி பீர்மகம்மது யென்கிறவன் வகையிரா இரண்டாயிரம் காடுதிகளும் யிருந்தார்கள். அவர்கள் பேரிலே அப்துல் வாபுக்கான் யிங்கிலீசுக்காறர்கள் பவுன்சு வந்து விழுந்து சண்டை பண்ணினவிடத்திலே திறுவாகமில்லாமல் அய்யன சாஸ்திரி கொண்டவெட்டி சீனிவாசய்யன் பீர்மகம்மது வகையிராக்கள் ஓடிப்போய் சேத்துப்பேட்டுப் போய்ச்சேர்ந்தார்கள் யெதிரி கையில் முன்னூறு துப்பாக்கிகளும் நாலு பீரங்கியும் அகப்பட்டுப் போனதாயும் சிப்பாயிகளெல்லாம் சிதரிப்போய்விட்டார்களென்று யிப்படியாக சேதி சொன்னார்கள்.

### 1753வரு பிப்ரவரிமீ 10வ ஆங்கிரசவரு மாசிமீ 3வ.
### சனிவாரம்

21வ 1753வரு சனேரிமீ முதல் உ கோவளம் தையூர் செம்பஞ்சேரி முதலான கிராமங்கள் குடிகள் வகையிரா மனுஷர்களை சபுறு சஸ்தியாய் மஞ்சி பிடிச்சுக் கொண்டு வந்து பட்டணத்திலே யிருந்து அழைத்துவந்த காமாட்டிகள் வகையிராக்களையும் வைத்துக் கொண்டு ராத்திரியேழுமணிக்கு கோட்டையினுடை வடப்பிறம் மதில் அஸ்திவாரத்திலே ஒரு பாகம் நாலுமுழமிப்படியாக அங்கங்கே யிடம்விட்டுயிடம்விட்டு பள்ளங்களை வெட்டி ராத்திரி பனிரெண்டுமணிவரைக்கும் வடப்பிறம் மதிள்பேரிலே மூணத்திலே ஒரு பங்கு வெட்டித்தீர்த்தார்கள் அப்பால் 22வக்கு சனேரிமீ 2உ முதற்கொண்டு வடப்பிறத்தும் மதிலிலே சுமாம் பள்ளங்களை வெட்டி மருந்து பீப்பாய்களை புதைச்சு வூரிலே யிருக்கப்பட்ட புளியமரங்களையெல்லாம் வெட்டிக்கொண்டுபோய் துண்டம் துண்டமாய் வெட்டி அந்தத்துண்டங்களை மருந்துப் பீப்பாய்கள் புதைச்சிருக்கிறதுக்கு ஆசார் கொடுத்து அப்பால் கிழப்பிறம் மதில் அஞ்சு நாளையிலே பள்ளங்களை வெட்டி மருந்து பீப்பாய்களை புதைச்சு புளிய மரங்களை துண்டம் பண்ணி ஆசார் கொடுத்து வைத்தார்கள். மேல்பிறமும் கோட்டை மதிள்நாலஞ்சு நாளையிலே

பள்ளங்களை வெட்டி மருந்துப்பீப்பாய்களை புதைச்சு புளியந் துண்டுகளை ஆசார் குடுத்து வைத்தார்கள். அப்பால் தென்புறம் மதிலிலே தறுவாசா மட்டும் விட்டு மத்தயிடமெல்லாம் அஞ்சு நாளையிலே வெட்டி மருந்துப் பீப்பாய்களை புதைச்சு புளியந் துண்டுகளை யாசா குடுத்து பத்திரம் பண்ணினார்கள் இந்தப்படிக்கு பத்தொன்பது நாளையிலே கோட்டை மதில் நாலுபுறமும் பள்ளங்களை வெட்டி மருந்து பீப்பாய்களை புதைச்சு புளியந்துண்டுகளை யாசா கொடுத்து பத்திரம்பண்ணி தீத்து அப்பால் கோட்டையிலே யிருந்த பிரங்கிவகைகயிரா சாமானிலே சிறிது கட்டுமரங்களின் பேரிலேயேத்தி சென்னப்பட்டணத்துக்கு றவானைபண்ணி அப்பால் வடபுறம் மதிலுக்கு ரஞ்சகம் வைத்துக்கொளுத்தி மதிலைத் தள்ளிப் போட்டார்கள். அப்பால் மேல்ப்புறம் மதிலையும் சுட்டுதள்ளிப் போட்டார்கள் கிழ்புறம் கொடிமரமிருக்கிற இடம்விட்டு மத்த மதிலையும் சுட்டுத்தள்ளிப்போட்டார்கள். தென்புறம் தறுவாசா மட்டுக்கும் நிறுத்தி மத்ததை சுட்டுத்தள்ளிப்போட்டார்கள். கோட்டையிலே இருந்த வீடுகளிலே ஒரு வீட்டை மாத்திரம் நிறுத்தி மத்த வீடுகளையெல்லாம் யிடித்துத்தள்ளிப்போட்டார்கள் கோட்டைக்கு வெளியேயிருந்த மக்கள்பேரிலே யிருந்த கொத்தளங்களையெல்லாம் யிடிக்கப்போட்டார்கள் யிடிச்சுப்போட்ட யிடங்களிலேயிருக்கிற மேடுபள்ளங்களை நன்றாய் சாப்புபண்ணவேண்டி யிருக்கிறபடியினாலே மேஸ்திரிகளை மூணுபேரையும் காமாட்டிகள் பதினேழுபேரையும் வைத்துக்கொண்டு மத்தப்பேர் வந்தவர்களை சென்னப் பட்டணத்துக்கனுப்பிவிட்டார்கள். கோட்டையிலிருந்த பெரிய பீரங்கிகள் சின்னபீரங்கிகள் ரேக்காலால் பின்னையும் ஆயுதசாமானும் மெத்தைப்பலகைகள் கதவுகள் உத்திரங்கள் நாற்காலிகள் பெட்டிகள் கண்ணாடிகள்—பீரங்கி வண்டிகள் பனைமரங்கள் பின்னையும் பட்டிணத்திலே யிருந்தவர்கள் வீடுகளை யிடிச்சுப் போட்ட சாமான்களும் படே சாயபு மகன் மியா சாயபு வீட்டிலே அகப்பட்ட சாமானுகள் நெல்வகையிரா அமாநிதிவீசுகளை யெடுத்து சலங்குகள் பேரிலேயும் கட்டு மரங்கள் பேரிலேயும் கரை வழியிலேயும் ஆக சிறிது அனுப்பினார்கள். இன்னஞ்சிறிது அனுப்பிக்கொண் டிருக்கிறார்கள் தைமீ 22உ க்கு-பிப்ரவரிமீ 7உ வரைக்கும் கோவளத்திலிருக்கிறவர்கள் மேஸ்தர் யிசுமதி யென்கிற கப்பித்தான் கோட்டையிலே ஒருவீடுயிடியாமல் நிறுத்தின வீட்டிலே யிருக்கிறான் சொலுதாதுகள் சட்டைக் காறர்கள் செனம்-20 காப்பிரிகள் செனம்-50 சிப்பாய்கள் செனம் 60 காமாட்டிகள் செனம் 120 யிவர்கள் தறுவாசாவண்டையிலேயும் ஊரிலேயும் அங்கங்கே பந்தல்கள் தாவாரங்கள் போட்டுக் கொண்டுயிருக்கிறார்கள். தறுவாசாவுக்குக் கிழ்புறமும் மேல்புறமும் முன்னிருந்த கொத்தளங்களை யிடிச்சுப்போட்ட மேடுகளின் பேரிலே மண்ணினாலே ஆசானு பண்ணிக்கொண்டு நாலு சின்ன பீறங்கியை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். சென்னப்பட்டணத்திலேயிருந்து ஒரு ஒத்தைப்பாய் மரம் சலுப்ப ஒன்று வந்திருக்குது. அந்த சலுப்பின் பேரிலே பத்து பீறங்கிகள் யேத்தினார்கள். யின்னம் பத்து பீறங்கியும் வண்டலேகளும் சமுத்திரக்கரையிலே யிருக்குது அதுவும் சலுப்பும் பேரிலே யேத்துகிறவர்களாயிருக்கிறார்கள். முன்சென்னப் பட்டணம் பிடிச்சபோது ஒரு கப்பலின் பேரிலே அவ்விடத்து பீறங்கிகள் யேத்தி புதுச்சேரிக்கி வரையில் அந்தக் கப்பல்

திருவடந்தைக்கும் கோவளத்துக்கும் நடுவே வரச்சே சமுத்திரத்திலே முழுகிப்போச்சுது. நம்முட அமுலான பிற்பாடு மனுஷரை விட்டு சமுத்திரத்தில் முழுகச் சொல்லி சிறிது பிறங்கிகள் யெடுத்தார்கள். அதில் செங்கல்பட்டுக்கும் கோவளத்துக்கும் சிறிது பிறங்கிகளனுப்பினதுபோக முப்பத்தேழு பிறங்கி தரையிலேயிருந்தது அதிலே ஆறு பிறங்கி பட்டணத்துக்கு அனுப்பினார்கள். மத்த முப்பத்தொரு பிறங்கியும் குறவிலேயிருக்குது.

சவாபாசிருயன் யிவடத்துக்கு வெகு பவுஞ்சுடனே ஆற்காட்டு பந்துபஸ்து பண்ண வேணுமென்று வருகுறானென்றும் மமுதல்லிக்கானும் யிங்கிலீசுக்காறர்களும் சொல்லிக்கொள்ளுகிறார்களாம். மெய்தானாவென்று கேட்டார். மெய்தான் அவர்கள் சொல்லிக் கொள்ளுகிறது ஆனாலவன் வருகிறது உங்களைப் பேட்டி பண்ணிக் கொண்டு உங்களுத்தாரம் வாங்கிக்கொண்டு இங்கிலீசுக்காறர் மமுதல்லிக்கான் வகையிறாக்களை சரியப்பிடிச்சுப்போட வருகுறானென்றும் சனங்களுஞ் சொல்லிக் கொள்ளுகிறாரென்று சொன்னேன். அதுக்கு நகைச்சுக்கொண்டு யிவர்கள் முன் புறுதிசுக் காறருடனே சண்டை போட்டு பசேனென்கிற கோட்டை வாங்கிக் கொண்டது முதலான சம்மதி பேசியிருந்தார். அப்பால் நானும் அனுப்பிவிச்சுக்கொண்டு வீட்டுக்குப் போனேன்.

கேத்து விட்ட நாகேசராயனை யித்த நாள் சாயங்காலம் மறுபடி நயினார் தன் வீட்டிலே காவல் வைத்துக்கொண்டு துரையவர்கள் யிருபதினாயிரம் ரூபாய் அபராதம் கொடுக்கச் சொல்லி கேழ்க்கச் சொன்னார்யென்று சொன்னானென்று கபுறு வந்து சொன்னார்கள்.

## 1753வரு பிப்றவரிமீ 16வ ஆங்கிரசவரு மாசிமீ 9வ சுக்கிறவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போய் கபுறு சொல்லிப்போட்டு பிடவை பார்க்கிற சாலையிலே வந்திருந்து பனிரெண்டு மணி மட்டுக்கும் யிருந்து அப்பால் வீட்டுக்குப் போனேன். துரையவர்கள் சீமைக்கு யெழுதுகிற காகித அவசரத்தினாலே விசேஷம் பேசாமல் மேல் வீட்டின் பேரிலே போனார்.

இத்தனாள் கேழ்விபட்ட சேதி தேவனாம்பட்டணத்திலிருந்து இங்கிலீசுக்காறர் ஒரு ஒபிசியாலும் யெட்டு சொலுதாதுகளும் யிறநூறு சிப்பாயிகளும் ஒரு பிறங்கியும் கொஞ்சம் ரஸ்தும் திருவிதிக்கு கொண்டு போகச்சே நம்முட பிறஞ்சுக்காறர் தானுக்கு அல்லிக்கான் வகையிறா ஆயிரம் ரெண்டாயிரம் சுவார்கள் மட்டுக்கும் கூடப்போய் விழுந்து மேலே யெழுதப்பட்ட யிங்கிலீசுக்காற ஒபிசியால் வகையிறா வொன்பது செனமும் யிறநூறு குவாடுதிகளையும் தலையை வெட்டிப்போட்டு துப்பாக்கிகளையும் பிறங்கிகளையும் ரஸ்துவையும் நம்முடைய பாளையம் சேர்த்து சந்தோஷ கபுறும் கேத்து ராத்திரி துரையவர்களுக்கு வந்து கபுறு சொன்னதின்பேரிலே துரையவர்களித்தனை சந்தோஷமாய்

சகலமான பேருடனேயுஞ் சொன்னாரென்று முசியே பெய்சேத்து யென்னுடனே சொன்னார். நானும் வெளியிலேயுங் கேழ்விப் பட்டேன். ஆனால் துரையவர்களுக்கு சாவகாசமில்லாத்தினாலே யென்னுடனே அவர் பேசாத்தினாலே யெனக்குச் சொல்லவில்லை. இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி துரையவர்கள் பாசிருயன் வருகிற கபுறு சுருக்காய் வருகிறபடியினாலே டீ வக்கீல் சாமாருயனை அழைப்பிச்சு ஆகெதபுசலாமிச்சு பேசி கில்லாவுகளுக்குப்படி யெழுதிக்கொடுக்கிறோமென்று பாளையக்காறர்கள் கில்லாதாறர்கள் சாகிர்தாறர்களுக்கும் அப்படி பத்து லக்ஷம் ருபாயிக்கு யெழுதிக் கொடுத்ததாகவும் யிதை வாங்கிக்கொண்டு போய் நாங்கள் செய்யவேண்டியதென்னவென்று சொன்னதாகவும் பின்னையும் யிப்போதே யெழுதப்பட்ட கில்லாதார் சாகிர்தாறர்களுக்கு கில்லே சாகிரையே காணுமென்று கேட்டதாகவும் எல்லாம் உண்டா யிருக்குது. குடுப்பார்களென்று துரையவர்களும் மதாமுஞ் சொன்னதாய் சேதி சொன்னார்கள்.

மயிசூர் வக்கீல் வெங்கிட்ட நாறணப்பையனுக்கு-மயிசூர் ராசா நந்திராசா யெழுதின வயணம் பாளாசிராயன் பவுன்சு சிற்பி வந்து (Sirpi) சேர்ந்து நம்முடைய சீர்மையெல்லெசாத்து ஆனபடியினாலே நம்முடையபேரிலே ருசக்காசியமாயிருக்கிறபடியினாலே நம்முட பவுன்சுயெல்லாம் ஒரு யிடத்திலே பொட்டலமாயிருந்தால் பெகு பேர்களையும் செயிக்கலாம் ஆனபடியினாலே சிரங்கபட்டணம டடாணவை பெலக்க வைத்துப்போட்டு யென்னைவரச்சொல்லி மயிசூர் பெரிய தளவாயி தேவறாஜய்யனுடைய கடிதம் யெழுதி யனுப்பிவிச்சபடியினாலே நானித்தனை நாள் பிறஸ்தாபனம் பண்ணி னோம் ஸ்ரீரங்கபட்டணம் டடாணவும் பெலக்க தைத்துப் போட் டோம் நாளைய தினம் மயிசூருக்குசாகிப்போறோம் நீர் யிவ்விடத்து காரியம் நான் சொல்லியனுப்பினபடிக்கு அவர்கள் குமுக்கு கூட்டு வார்களானால் கூட்டிக்கொண்டு வந்தால் நாங்களும் பதுச்சேரி யாரும் முறாரியனும் யேகமாய் ஒருமிச்சுப் பாசிருவையும் கனவாய்க் கீழே யிறங்க வொட்டாமல் அடிச்சு மறுதலிக்கான் இங்கிலீசுக்காறர் வகையிராக்களையும் துறத்திவிட்டு திரிச்சிராப் பள்ளி ஆற்காட்டு வகையிறாவும் சுறுறு பிறாறம் திரிச்சிராப் பள்ளி யெங்களுக்கும் ஆற்காடு உங்களுக்குமாக இருக்கலாமென்று யிதுசம்மதியில்லாவிட்டால் நீ பிறப்பட்டு வந்துவிடவும் என்று யெழுதியிருந்த காகிதத்தைப் பார்த்து துரையவர்களும் மதாமும் அவர்கள் குசசாதி மண்சட்டிப்பானை பண்ணுகிற சாதியானபடியி னாலே நாங்களெழுதினகாரியத்தை விட்டு வேரேயெழுதினானென்று சொல்லி காகிதமும் அந்தப்படிக்கே யெழுதச்சொன்னதாகவும் அந்தப்படிக்கு காகிதம் யெழுதி லக்கோட்டாபோட்டு இத்தனைக்கு பயணம்பண்ணி அறுக்காறுகளை அனுப்புனதாய்ச் சேதி சொன்னார் கள்.

இத்தனாள் இராத்திரி சேதி திருவெண்ணைநல்லூர்பழஞ்செஞ்சி மாற் சாகீரையும் கில்லாவையும் யிங்கிலீசுக்காறர்கள் கட்டிக் கொண்டதாய்ச் சேதி சொன்னார்கள்.

இத்தனாள் ராத்திரி கேழ்விப்பட்ட சேதி பாப்பய்யபிள்ளைக்கு முன்பெரியவியாதி அனுசரிச்சுப்பலமாயிருந்ததின் பேரில் சிறந்தியும் ரெத்தப் பிறமியமும் கண்டு சரீரமெல்லாம் சிறந்தி கொணுக்காய் போலே பிறப்பட்டதும் முன்பெரிய வியாதியினுடைய தழும்பும் தடிப்பும் அதுவும் விஸ்தரிச்சு முகம் கண்களிலே கூட கண்டு அதுக்கும் மருந்து தின்கிறதும் உப்புயில்லாமல் பத்தியம் பிடிக்கிறதும் மனுஷன் ரொம்ப வேசால்லினாலே வெளியே பிறப்பட சங்கோசம் பெலகீனமானாலும் லெக்ஷத்து பிருபத்தையாயிரம் ரூபாய் முஞூரியனுக்குக் கொடுக்க வேண்டியது ரெண்டுநாள் தவணையிருக்குது மாசக்கெடுவு அந்தப்பணம் அவர்களுக்குச் சம்மதி பண்ணச் சொல்லி துரையவர்கள் யென்னேரமும் மடிப்பும் உதையும் உதாசினமும் நடத்துகிறபடியினாலே வீட்டிலே யிருக்கக்கூடாமல் குண்டூர்பாலிசெட்டி வகையிராக்கள் வீட்டிலே போய் பணம் சான் சாமிபண்ணிகுடுக்கச்சொல்லி கேட்டுக்கொண்டு திரியுறதாய்ச் சேதி சொன்னார்கள்.

## 1753௵ மார்ச்சுமீ 7௳ ஆங்கிறசு௵ மாசிமீ 28௳ புதவாரம்

இத்ததானாள் துரையவர்கள் முதலாகிய சமஸ்தமான வெள்ளைக்காறர்களுக்கு யின்றையதினமுதல் ஒருசந்தி நாள் ஆரம்பமானபடியினாலே துரையவர்கள் கோவிலுக்குப் போய் பூசைகேட்டு யின்றையதினம் அவர்களெல்லாரும் விபூதியிட்டுக்கொள்ளுகிற வாடிக்கையானதினால் அந்தப்படிக்கு விபூதியிட்டுக்கொண்டு துரையவர்கள் வந்தவுடனே நான் போய் ஆசாரம்பண்ணி

கபுறும் மத்ததுகளும் சொல்லியான பிறப்பாடு முசியே அலுபேரைப் பார்த்து முறுத்தசல்லிக்கான் வழுதாவூர் வந்து நீர்போய் அவரை யழைத்துக் கொண்டு சாயங்காலம் ஆறுமணிக்கு வாரும் யென்று உத்தாரங்கொடுத்தார்.

பகலைக்கு மேலாக இரண்டு மணிக்கு முசியே அலுபேரும் பாப்பய்யபிள்ளையும் முசபர்கான் வீட்டிலேயும் பிள்ளையும் ஊரிலே அங்கங்கே யிருந்த குதிரையிலே யிருபது குதிரை மட்டுக்கும் அழைப்பிச்சுக்கொண்டு பிறப்பட்டுப்போய் அகுப்பாத்த பிள்ளை சாவடி யண்டையிலே போனவுடனே முறுத்தசல்லிக்கானும் அவனுடனேகூட யெழெட்டுப்பேர் பெரிய மனுஷர் துலுக்கர் பின்னையும் அவன் தாலுக்கு குதிரைசுவார்களும் பாறுக்காறர்களுமாய் சிறிது பேர்களும் அதுக்குள்ள ஆடம்பரத்துடனே வந்தான் அப்பால் முசியே அலுபேர் வகையிராக்களுக்கும் முறுத்தசல்லிக்கான் வகையிராக்களுக்கும் பேட்டியாய் அங்கே யிருந்து யழைத்து வந்தார்கள், சாயங்காலம் ஆறுமணிவேளையிலே வழுதாவூர் வாசற்படி வழியாய் வந்தார்கள்: வாசற்படியிலே சொலுதாதுகள் வரிசையாய் வைத்துக்கொண்டு சென்னப்பட்டணத்து வாசற்படியிலே மேலண்டை மூலைக்கொத்தளத்தின் பேரிலே பதினேறு பிறங்கி போட்டார்கள். அப்பால் உள்கோட்டை வாசற்படியண்டையிலே போகச்சே முறுத்தசல்லிக்கான் பல்லக்கை நிறுத்தினார்கள் அப்பால்

துரையவர்கள் முசியே கில்லியாரையும் முசியே தெபோசெத்தையும் (Mr. Guillard and–M-du Bausset) கோட்டை வாசற்படி மட்டுக்கும் போய் முறுத்தசல்லிக்கானை அழைத்துவரச்சொல்லி அனுப்பினபடிக்கு அவர்களிரண்டு பேரும் கோட்டை வாசற்படிக்குப் போனார்கள். அப்பால் முறுத்தசல்லிக்கான் பல்லக்கை விட்டிறங்கிவிடச் சொல்லி முசியே அனுபேர் அழைத்துவரச்சொன்னபடி அழைத்து வந்து முசியே கில்லியார் முசியே தெபோசேத்துக்கும் முறுத்தசல்லிக்கானுக்கும் பேட்டி பண்ணிவிச்சாள் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு ஆனவுடனே தீவட்டிகள் மத்தும் உண்டான ஆடம்பரத்தெல்லாம் வெளியே தானே நிறுத்திப்போட்டு முறுத்தசல்லிக்கானும் அவனுடனே கூடவந்த பெரிய மனுஷரிலே அஞ்சாறுபேரும் அல்லிசாயபுசலக்கும் பின்னையும் கிசுமத்துக்காறரிலே அஞ்சாறு பேரும் யிந்தமட்டுடனே உள்ளே போனார்கள். தீவட்டிகளில்லாதபடியினாலேயும் இருட்டானபடியினாலேயும் புதுசாய் வந்தவர்களானபடியினாலேயும் நிலவுயில்லாதபடியினாலே அழைக்க வந்த வெள்ளைக்கார பெரியமனுஷருடனே கூடமேல் வீட்டண்டையிலே வந்திருக்கச் சொன்னார்கள். அப்பால் துரையவர்கள் கோவற்ணமாவின் தாழப்படியண்டையிலே வந்திருந்தார் முறுத்தசல்லிக்கான் வகையிராக்களும் யிவ்விடத்துக்குப் போனார்கள். அப்பால் உபயத்தரவர்களும் பேட்டிபண்ணிக்கொண்டு துரையவர்களும் முறுத்தசல்லிக்கானும் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு தாழத்தானே கச்சேரிபண்ணிக்கொண்டுயிருந்தபடியினாலே போய் நாற்காலிகளின் பேரிலே உறுக்கார்ந்தார்கள். அப்போ பதினஞ்சு பீறங்கி போட்டார்கள் துரையவர்களுக்கு முறுத்தசல்லிக்கான் பிறகே வந்த அல்லிசாயபுசலக்கு வகையிராக்கள் நதிர்வைத்துஆன பிற்பாடு துரையவர்களும் முறுதசல்லிகானும் செல பிறசினைபேசி ஆனவுடனே பாப்பைய்ய பிள்ளை மிறுத்தசல்லிகான் கிட்டப்போயி நின்றான். அவனைப் பார்த்து மிறுத்தசல்லிக்கான் துலுக்கப்பேச்சிலே யென்னமோ சொன்னதுக்கு பாப்பையபிள்ளைக்கு துலுக்கப்பேச்சு தெரியாதபடியினாலே மதனாந்த பண்டிதனையென்ன சொல்லுகிறானென்று கேட்டானாம். அப்பால் மதனாந்த பண்டிதன் கேட்டு தெரிஞ்சு சொன்னதாகவும் துரையவர்கள் யிந்தச் சாடை பார்த்து பாப்பய்ய பிள்ளையைப் பார்த்து அப்பால் போகச் சொல்லி கோபிச்சுக் கொண்டதின் பேரிலே முகம் செத்து அப்பாலே போய் விட்டானாம். அவ்விடத்திலே சத்து நேரம் பேசியிருந்து மேல் வீட்டின் பேரிலேயிருக்கிற மதாம் அண்டைக்கு துரையவர்கள் முறுதசல்லிக்கானை கையைப்பிடித்து அழைத்துக்கொண்டு போனார். அல்லிசாயபுசலக்கு வகையிறாக்களும் மதனாந்த பண்டிதன் பாப்பய்ய பிள்ளையும் போனார்கள். அப்பால் முறுதசல்லிக்கான் மதாமைக் கண்டு பேசியானவுடனே பன்னீர் பாக்கு வெத்திலை அழைப்பிச்சுக் கொடுத்தார்கள். வாங்கிக்கொண்டு அனைவரும் தாழ வந்தார்கள் அப்போ நான் அவ்விடத்திலேயிருக்கச்சே துரையவர்கள் யென்னையழைச்சு முறுந்த சல்லிக்கானுக்கு யென்னென்ன சாமக்கிரியை வேணுமோ அதுகள் தாஷியில்லாமல் அனுப்பி வைக்கச் சொல்லி வினயகப் பிள்ளைக்குத் தாக்கீது பண்ணென்று சொன்னார். அந்தப்படிக்கு வினயகப்பிள்ளையை துரையவர்கள் உத்தாரபடிக்கு சொல்லி போகச் சொன்னேன். அப்பால் முறுத்தசல்லிக்கான் வகையிறாக்கள் பிறப்பட்டவுடன் விடுதி முஸ்தீது பண்ணியிருக்கிற முசியே தும்மா தோட்டத்துக்கு ராத்திரி ரெண்டரை மணிக்குப் போனார்கள்.

ஆனால் துரையவர்களுக்கும் முறுத்தசல்லிக்கானுக்கும் உத்தரப் பிரதி உத்தரம் நடந்தது முறுதசல்லிக்கான் அல்லி சாயபுசலக் குட்டனே சொல்லவும் அவர் மதனந்த பண்டிதனுடனே சொல்லவும் மதனந்த பண்டிதன் துரையவர்களுக்கு அறிக்கை பண்ணுவுமாக நடந்தது. இந்த முறுத்த சல்லிகானுக்கும் முருரியனுக்கும் நடந்த மரியாதையிலே பத்திலே ஒரு பங்குயில்லை

இத்தனாள் முறுத்த சல்லிகான் அரும்பாத்தைப்பிள்ளை சாவடி பண்டை வரச்சேயிங்கயிருந்து பெத்திற்கொண்டு அழைக்கப்போன மூசியே அலுபேர் பாப்பய்யப்பிள்ளை வகையிறுக்களுக்கு அவன் வெகுமானம் பண்ணினவயணம்:—

மூசியெ அலுபேருக்கு—

குதிரை—1—சீறேப்பா—1

பாப்பய்யப்பிள்ளைக்கு—

குதிரை—1—சீறேப்பா 1.

மதனந்தபண்டிதன் மருமகன் வெங்கிட்டநரசுக்கு சீறெப்பா —1

இராத்திரியையகப்பிள்ளை உலுப்பை கொண்டுபோனபோது அவனுக்கு சீறெப்பா —1

பெரிய பரசுராமபிள்ளை மகனுக்கு சீறெப்பா —1

இந்தப்படிக்கு அவரவர்களுக்கு வெகுமானம்பண்ணினதாகச்சேதி சேதி கேழ்க்கப்பட்டுது.

1753௵ மார்ச்சுமீ 8௳ ஆங்கிரசு௵ மாசிமீ 29௳ குருவாரம்.

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போனவிடத்திலே அவர் தாமுவந்தார் நான் போய் சுபுறுமத்ததுகள் சொல்லியானவுடனே முறுதசல்லிக்கான் வந்திருக்கானே பாத்தியா வென்று கேட்டார் பார்த்தேன் என்று சொன்னேன் அப்பால் துரையவர்கள் சொன்னது வேலூரிலே கருவாலியினுடைய அம்மான் ஒருத்தன் சந்தலேனெகிற (Mr. Carvalho) (Mr. St. Hillaire) வனிருந்தான் அவனுக்குயிந்த முறுத்தசல்லிக்கான் பிறந்தவனகவேணுமில்லா விட்டால் அவனுக்கொருத்தனை கொல்லவேணும் என்கிறபுத்தியும் ஓடிப்போகவேணும் என்கிற புத்தியும் இராது. இவன் மகா சின்ன மனுஷன் தவுலத்துக்கு லாயக்கானவனல்ல வென்று அவவிடத்திலே அயிசுவாரிசயமாய்ச் சொன்னர். நானுமதுக்குத்தக்கதாய் அவர் மனது பிறகாறமாய்த்தானே மெய்தானே நீங்கள் சொல்லுகிறது முறுத்தசல்லிக்கான் பாரி மனுஷன் அல்லவென்று சொன்னேன். அப்பால் மமுதல்லிக்கானுக்கு அரிசிமுதலான ரஸ்து போறத்துக்கு யில்லாமல் பெரி முத்திக்கை முத்திக்கையாயிருக்கச்சே யிந்த மட்டுக்குமவன் ஓடிப்போகாமல் யிருப்பானென்று கேட்டார் அதுக்கு

நான் சொன்னது நம்முட பவுன்சு போயி யித்தனை நிற்பத்தமாய் முத்திக்கை போட்டுக்கொண்டு யிருக்கிறமட்டுக்கும் அவன் ஓடிப் போகாமல் சிறிது நிறுவாகம் யிருக்குதா ஆனால் அவனுக்கு பாசிராயன் காகிதம் ஒன்று ஆசைவாத்தையா வெழுதி வந்திருக்கிற படியினாலே அசைத்துக்கொடுத்துக்கொண்டிருக்கிறான். இங்கிலீசுக் காறர்கள் அந்தக் காகிதம் வரவிடலாகாதென்றும்—அதை கைவிட லாகாதென்றும் சத்து நாட்டம் கொடுத்துக்கொண்டிருக்கிறார்கள் அந்தக் காகிதம் வராவிட்டால் யிதுவரை இக்கிலீசுக்காறர்களும்- கைவிடுவார்கள் அவனும் பலாயனுமாய்ப்போய்விடுவானென்று சொன்னதுக்கு மெய்தானென்று ஒத்துக்கொண்டார்.

## 1753ஹ மார்ச்சுமீ 26வ ஆங்கிரகஹ பங்குனிமீ 17வ சோமவாரம்

இத்தனாள் பகலைக்குமேலாக முறுத்தசல்லிக்கான் வேலூருக்குப் போகப்பயணமாய் துரையவர்களண்டைக்குப் போய் அனுப்பிவிச்சுக் கொண்டு போகப்போனவிடத்திலே முறுத்தசல்லிக்கானுக்கு துரையவர்கள் வெகுமானம் பண்ணினது தெலுங்கிலே சாப்பிதா யெழுதி யிதிலே போட்டிருக்குது. யிப்படிக்கு வெகுமானம் பண்ணி குல்பசார்சங்கு யென்று கித்தாப்புங்குடுத்து. அப்பாலவருடனே கூட வந்து தலுக்கர் பெரியமனுஷர்களுக்கும் முத்தியசல்லிக்கானுக்கும் அவர்வருக்குத்தக்கதாய் வெகுமானம் பண்ணி கோட்டையிலே பதினஞ்சு பீரங்கி போட்டார்கள் அப்பால் முறுத்தசல்லிக்கான் துரையவர்களுடனேயும் மதாமுடனேயும் சொல்லி யனுப்பிவிச்சுக் கொண்டு அவருடைய சான்சாமியுடனே வழுதாவூர் வாசர்படியாலே பிறப்பட்டுப்போய் அரும்பாத்தப்பிள்ளை சாவடியிலே விநாயகப்பிள்ளை விருந்தானபடியினாலே யித்தனாள் ராத்திரி அரும்பாத்தைபிள்ளை சாவடிலே போயிறங்கினார்கள். போகச்சே வாசற்படி கொத்தளத்தின் பேரிலே பதினொரு பீரங்கி போட்டார்கள். மத்தபபடி அருமாத்தையப் பிள்ளைசாவடிக்கு முறுத்தசல்லிக்கான் பிறகே பாப்பைய பிள்ளையும் மதனந்த பண்டிதனுங் கூடப்போனார்கள். அப்பால் ராத்திரி பனிரெண்டு மணி மட்டுக்கும் கேளிக்கையான பிற்பாடு முறுத்தசல்லிக்கான் வகையிராக்கள் விருந்து சாப்பிட்டு யானவுடனே விநாயகப்பிள்ளை சிறிது வெகுமானம் பண்ணதாய் அதை வாங்கிக்கொண்டு ஒரு நாழிகை வழிக்கப்பால் டேரா போட்டிருந்தபடியினாலே அந்த டேராவிலே முறுத்தசல்லிக்கான் போயிறங்கினதாகவும் அவ்விடத்துக்கு பாப்பைய பிள்ளையும் மதனந்த பண்டிதனும் யிரண்டு பேரும் போய் முறுத்தசல்லிக்கானுடனே சொன்னது. நீர்கொடுக்கிறேமென்ற மூணுலக்ஷம் ரூபாயும் இப்போ கொடுக்கவேணுமென்று துரையவர்கள் கேழ்க்கச்சொன்னதாய்க் கேட்டதுக்குப் பின்னையும் யிவர்கள் சொன்னது இப்போ நீர் வேலூருக்குப் போய் காரியம் யென்ன யிங்கேயிருந்து திருவண்ணாமலைக்குப்போய் அவ்விடத்திலிருந்து திருக்கோயிலூர்- கல்லக்குறிச்சி பாண்டியம் சங்கராபுரம் வகையிரா தாலுக்கா சப்த்தி பண்ணி பணம் வசூல் பண்ண வேணும் அப்படி செய்தால் யெதிரி களுக்கு பலம் ஒடுங்கிப்போம் யென்று சொன்னதுக்கு முறுத்தசல்லிக்கான் சொன்னது மெய்தான் நீங்கள் சொல்லுகிறது

யிப்போ நீங்கள் மூனுலக்ஷம் ரூபாய் கேட்டால் யென்கையிலே எங்கே யிருக்குது பணத்துடனே சேர்ந்தது உங்களுக்கு கருறு பண்ணபடிக்கு செலுத்திப் போடுகிறேன் என்றும் யிப்போ திருவண்ணாமலைக்குப் போய்க்காரியமென்ன வேலூருக்குப் போய் அவ்விடத்திலே யிரண்டா யிரங்குதிரை யிருக்குது அவர்களுக்கெல்லாம் சம்பளம் கொடுக்க வேண்டியதை கொடுத்து கும்மக்கு கூட்டிக்கொண்டு அப்பால் ஆற்காட்டை சப்தி பண்ணினால் மத்தயிடங்களெல்லாம் சுளுவா சமாய்ச் சப்திப்பண்ணிப்போடலாம் இப்போ யென்கிட்ட கொஞ்சபவுன்சு யிருக்குது இதினாலே சிறிது காரியமாகப்போகுதா. அப்படியானாலும் வேலூருக்குப் போய்பந்துபஸ்து பண்ணிக்கொண்டு திருவண்ணாமலை வகையிராயிடங்கள் கட்டவேணும் யில்லாவிட்டால் யெதிரிகள் பவுன்சு கூட்டிக்கொண்டு வந்து சண்டை பண்ணினால் காரியம் கெட்டுப்போமென்று சொன்னதாகவும் ஆனால் நம்முடனே யிப்போ முராரிராயன் கூடியிருக்கிறானே யிவனை விடலாகாது யவனுக்கு மாதம்மாதம் உடன்படிக்கைப் பண்ணபடிக்கு பணத்தைக்குடுத்து வைத்துக்கொள்ளவேணும் யிவனால் நமக்குப் பெரியகாரியம் சாதக முண்டு ஆனபடியினாலே யிப்போ யிவனுக்கு கொடுக்க வேண்டிய சம்மதிக்காகிலும் லக்ஷம் ரூபா மாத்திரம் கொடு யென்று கேட்டதுக்கு அதுக்கவனாலோசனை பண்ணி யிவர்களுக்கு சவால் பண்ணி நாம் மெள்ள நமுருகவேணுமில்லாவிட்டால் போருட்டமிருக்குதென்று அப்பால் பாப்பய்யப்பிள்ளைக்கு சால்சாபுவார்த்தை எழுதிவைத்தபடிக் கொடுத்து நான் வேலூருக்குப்போயி பணம் தருறேன் நீங்களென் காரியம் நிமித்தஞ் சொல்லுகிறீர்களோ அப்படியே வைத்தபடி யல்லவென்றும் அந்த மட்டுக்கும் சமுதாயிச்சுக் கொண்டு யிருவென்றும் சொல்லி ரெண்டாயிரம் குதிரை தவுலத்தும் நகருவும் குடுத்ததாகவும் அந்த சந்தோஷத்தின் பேரிலே யிவனும் நல்லதென்று சொல்லி அனுப்பிவிச்சுக்கொண்டு போய்விட்டான் யென்று சொல்லிக் கொண்டார்கள் இப்போழுது முறுத்தசல்லிக்கான் செஞ்சிக்குப் போறான் அப்பால் வேலூருக்குப்போவானோ-திருவண்ணாமலைக்குப் போவானோ தெரியாது.

இத்தனாள் ராத்திரி ஒன்பது மணிக்கு சலாபாசிராயன் வக்கீல் சாமராயன் யென் வீட்டுக்கு வந்து பாசிராயனண்டைக்குப் போறேனென்று பயணம் அனுப்பிவிச்சுக் கொண்டு போகவந்தான் நானும் நல்லதென்று சொல்லி சிறிது உபசாரம் சொல்லி வெகுமதியும் பண்ணியனுப்பிவிச்சேன்.

சலாபத்துசங்கு லஸ்கர் சமாச்சாரம் இத்தனாள் புக்கன்சி சாசிதாசு துக்கானத்துக்கு சலாபத்துசங்கு லஸ்கரிலேயிருந்து யெழுதி வந்த விபரம் நாம் கேழ்விப்பட்டதென்னவென்றால் சலாபத்துசங்கு முசிக்கு சாகீர் விட்ட கொண்டவெகு குண்டூர் வகையிறு தாலுக்கும் சப்தி பண்ணினதாயும் யிவர்கள் மாரிபத்திலே சேக்கு யிபருமுக்கு சாகீர் விட்ட கம்பம்பேட்டை வகையிறு தாலுக்கும் சப்தி பண்ணினதாயும் யிவர்கள் மாரிபத்திலிருந்த சிப்பாயிகளிலே அய்யாயிரம் ஆராயிரம் பேரை பறதுருப்பு பண்ணிப்போட்டதாகவும் யின்னஞ் சிறிது பேர் யிருக்கிறவர்களுக்கு செனம் 1-க்கு மீ 1-க்கு ஆறு ரூபாய் விழுக்காடு கொடுக்கிறோம் அத்தப்படிக்கு சம்மதியாலிருக்கச் சொல்லியும் சம்மதியில்லா

விட்டால் போகச்சொல்லியும் முசியே குப்பியையும் போகச் சொல்லியும் சாபுசவாபு கொடுத்ததாகவும் அவனும் பிறப்பட்டு வருகிறவனாக யிருக்கிறானென்றும் யிப்போ பற்றுருப்பு பண்ண சிப்பாயிகளுக்கு சம்பளம் பிறாது. ரெண்டு லக்ஷத்து யென்பதினாயிரம் ரூபாய் கொடுக்க வேண்டியிருக்குது. அந்த ரூபாயை மச்சிலிபந்தர் தாலுக்காவிலே வாங்கிக்கொள்ளச்சொல்லி சன்னது பண்ணிக்கொடுத்து யனுப்பினதாகவும் சயிது லசுக்கர்கானுக்கும் சானேசி நிம்பள்கர்நம் ரூசா ரூமச்சந்திர ரூவும்யிவர்கள் மூணு பேரும் பேமோபனிச்சு யிருக்கிறார்களென்றும் குல்திவான் சயிது லசுக்கர்கானென்றும் யவர் மாரிபத்திலே சகல காரியங்களும் சாபுசால் நடக்குதென்றும் அவ்விடத்திலே வரவேண்டிய பணத்தை தஸ்து பண்ணிக்கொண்டு அப்பால் அயிதராபாத்துக்குப் போய் அவ்விடத்திலே சாவணி பண்ணப்போறார்கள் யென்றும் யிப்போ வந்ததாய்ச் சொன்னார்கள்.

## 1753௵ மார்ச்சுமீ 27௳ ஆங்கிரசுஹு பங்குனிமீ 18௳
## அங்காரகவாரம்

இந்தனாள் நேத்து சாயங்காலம் யிவ்விடத்திலே யிருந்து போன முறுதரசல்லிக்கான் வாழுதாவூர் கோட்டையோரமாய்ப் போகச்சே அந்தக்கோட்டையின் பேரிலேயும் பதினொரு பீரங்கியும் போட்டார்கள் யென்றும் சேதி கேழ்விப்பட்டுதுபின்னையொரு சேதியுங் கேழ்விப்படவில்லை.

## 1753௵ மார்ச்சுமீ 30௳ ஆங்கிரசுஹு பங்குனிமீ 30௳
## குருவாரம்

இத்தனாள் காலத்தாலே 9 யழரை மணிக்கு துரையவர்கள் தாமுவந்து தேத்தண்ணீர் குடிக்கிற வேளையிலே நான் போய் ஆசாரம் பண்ணினேன் யென்ன சேதி யென்று கேட்டார். சாவடிக் கபுறு கும்பினீர்க் கபுறு வாத்தகர் கிட்டங்கிக் கபுறு வகையிரா சொல்லியான வுடனே திருவதி மொறதல்லிக்கான் சேதியென்னவென்று கேட்டார். நேத்தய தினம் நம்முடைய முருரிருபன் வகையிரா நம்முடைய பவுன்சிலே சிறிது குதிரைக்காறர்களுக்கும் முசியே லவோலேந்தே யென்கிற கோணப்பறங்கி வகையிரா திருவேந்திபுரம் நேத்தைய தினம் வாங்கினதாய் சேதி கேழ்விப்பட்டேன் யென்று சொன்னதுக்கு மெய்தான் திருவேந்திபுரம் கோயில் வாங்கிக்கொண்டது ஆறுலிங்கிரேசுக்காறர் பாருக்காறர் சிப்பாயிகள் வகையிரா ஒருத்தரில்லை. அரிசி மூட்டைகள் மாத்திரம் யிருபது முப்பது மூட்டைகளிருந்ததை பெண்டாரிகள் எடுத்துப் போனார்கள். பீரங்கி ஆறு ருத்தல் குண்டு ஓடுகிறது பீரங்கி அங்கே யிருந்தது. அகப்பட்டுதென்று துரையவர் சொல்லி மொறதல்லிக்கானுக்கு பணங்காசு யில்லாமல் ரஸ்துமில்லாமல் வெகு சங்கடப்படுகிறோம் மெய்தானோ வென்று கேட்டார் மெய்தான் அதினாலே திருவிதி கோட்டையிலே மடாறுவைத்துப்போட்டு கூடலூரே போய் சேருகிறோமென்கிற கபுறு ஊர்ச்சிதமாயிச்

சொன்னதுமல்லாமல் யிவ்வடத்தில் சிறிது ரஸ்து வகையிரா பிடிச்சுக் கொண்டு மறுபடியும் திருவீதிக்குப் போறவனும் வருகிற கபுறு அவ்விடத்து தபால் மனுஷர் போக்கு வரத்துக்காறர்கள் சொன்னார் களென்று சொன்னதுக்கு அவ்விடத்துலே--யவனை-சேர்க்கிறது பிறயாசமென்று சொன்னார் அதுக்கு நான் சொன்னது யின்றையத்தினம் கூடலூரே போயிருக்கிறதாய் ஊர்ச்சிதமாய்ச் சொன்னபடியினாலே கேழ்விப்பட்டதை சொன்னேனென்றுசொன்னேன்,——————

## 1753ஸ்ரூ அவ்றீல்மீ 2உ ஆங்கிரசஸ்ரூ பங்குனிமீ 24உ சோமவாரம்

இத்தனாள் காலத்தாலே கோட்டையிலே யெனத்துப் பிடவைப் பிருவையானபடியினாலே ஆரரை மணிக்கெல்லாம் நான் கோட்டைக்குப் போய் பிடவைபார்க்கிற சாலையிலே யிருக்கச்சே துரையவர்கள் தேத் தண்ணீர் குடிக்க தாழ வந்தாரென்று கபுறு அறிஞ்சுக் கொண்டுபோய் சலாம் பண்ணி சமீபத்திலே போனவுடனே அதுக்கு முன் தோஸ்து மகம்மது உடனே முறாரிறாயனும் அவன்தம்பி புசங்கராயனும் அவர் களுடைய பவுன்சும் நம்முட பவுன்சும் திருவீதிக் கோட்டையின் பேரிலே சண்டைக்கு நிற்க்கச்சே நேத்துஆதிவாரம் பத்துநாழிகைக்கு மமுதல்லிக்கான் சான்சாமியும் பிடிச்சுக்கொண்டு யிங்கிறிசுக்காறர் வகையிரா தன்னுடைய பவுன்சும் யேழட்டுப்பீரங்கியுடனே தேவனாம்பட்டணத்திலிருந்து திருவீதிக்கோட்டைக்குச் சமீபமாக ரெண்டு நாழிகை வழியில் போகச்சே நம்முட பவுன்சும் முறாரிறாயன் பவுன்சும் கூடகோட்டையின் பேரிலே சிறிதுபேர்கள் சண்டைக்கு நிற்கிறவர்கள் போக மந்தப்பேர் போய் மமுதல்லிக்கான் பேரிலே சண்டைக்குடுக்கச்சே நம்முட பவுன்சிலே சிறிது பேர்களில் ரெண்டொரு சொலுதாதுங்களும் ஒரு ஒபிசியாலும் சிறிது சிப்பாயி களும் விழுந்தமாத்திரத்திலே நம்முட பவுன்சுயான வாங்கி முறிஞ்சிப் போச்சுது அப்போ கோட்டையின் பேரிலே அகறத்தை அண்டையிலே சண்டைபோட்ட முராரிராயன் தம்பி புசங்கறாயன் பாத்து நம்முட பின்வாங்கினார்களென்று போய் விழுந்து அன்னூறு குதிரைக்காறர் களும் முராரிராயனும் நல்ல சண்டை குடுத்து யெதிரிதளங்களைக் கலங்கடிச்சு அவர்கள் பீரங்கிகளையும் பிடிச்சுக்கொண்டு ரஸ்துவையும் பிடிச்சுக்கொண்டு திரும்புகிற வேளையிலே மமுதல்லிக்கானுமவன் பக்குஷி பேர்விளங்கனும் குதிரையின் பேரிலே யிருந்தவர்கள் குண்டுபட்டுக்கீழே விழுந்ததாகவும் துலுக்குப் பேச்சிலே கோவில்கா நபாபுகிறுய்ப் பாலக்கீலாவு யென்கிற சபுத்தம் அவர்கள் தண்டுயெல்லாம் யேகக்கூந்தலாயிருந்ததாகவும் அதின் பேரிலே மேல்பவுன்சு கோட்டையிலே யிருந்து பிறகாலே வந்தவர் களை சுட்ட குண்டு புசங்கராயனுக்கு தலையிலே பட்டு தலைசிப்பி யெடுத்துக்கொண்டுப்போச்சுது. அத்துடனே கூடரெண்டு சமேதாரர்கள் செத்துப்போனார்கள். முறாரிறாயனுக்குப் படுகிறகுண்டு அவன்குதிரைக்குப்பட்டு குதிரை மேலும் முறாரிறாயன் கீழேயுமாய் விழுந்தானிவர்கள் செனங்களிலே சிறிது பேர்கள் செத்தார்கள். யெதிரி களிலே விஸ்தாரமான செனங்கள் செத்தார்களென்று துரையவர்கள் வாக்கினாலே சொன்னதுமல்லாமல் நம்முடவர்கள் பின்வாங்கினதுக்கு

ம்ராட்டியர் நல்ல சண்டை கொடுத்து கீர்த்திபெற்றார்கள் யென்று சொல்லி பின்னையும் அவர்கள் கையில் துப்பாக்கிகளே யிருந்தால் ஒருத்தரை விடத்தக்கதில்லை அவர்களொப்படி சண்டை கொடுக்க வேணுமோ அப்படி ரெண்டத்தனை மூணத்தனை அதனமாய் நல்ல சண்டை கொடுத்தார்கள் நம்முடவர்கள் மோசம்பண்ணிப்போட்டார்களென்று சொல்லி அப்பால் முறாரிறுயனுக்கு மாத்திரம் புரிசிக்காகிதம் ஒன்றும் எழுதி ஒரு சிறெப்பாவும் மோக்காவிலே யிருந்து வந்த குதிரையிலே ஒரு குதிரையும் கொடுத்து முசியே அலுபேரையும் முசியே கெறுசாடமையும் போயதுக்கோபசமனஞ் சொல்லிப்போட்டு சிறெப்பாவும் குதிரையும் கொடுத்துப்போட்டு வரச்சொல்லி அனுப்புகிறேனென்று சொன்னதுமல்லாமல் கோட்டையிலே அடுக்குற நவமொத்து மூணுநாள் அடியாமல் உத்தாரங் கொடுத்தோமென்று சொன்னார். அப்படி செய்யவேண்டியதுதான் யென்று சொன்னேம் அப்பால் குதிரை மேஸ்திரி சட்டைக்காறனை அழைத்து மோக்கா அருபிகுதிரை கொண்டு வரச்சொல்லி முன்வந்தது-வெள்ளி—மொகவட்டுலகாபவரூதயிருந்துது—அதையெடுத்து கொடுக்கச் சொல்லி அப்புவுக்கு உத்தாரங் கொடுத்தார் சிறெப்பா நூறு ரூபாயிலே யெடுக்கச் சொல்லி தியாகுவுக்கு உத்தாரங்குடுத்தார்—முசியே அலுபேரையுமழைக்கச் சொல்லிப் போட்டு மேல் வீட்டின் பேரிலே போனார்-தோஸ்து மகம்மது-அவன் வீட்டுக்குப் போறேன். நான் பிடவைப்பார்க்கிற சாலையிலே வந்தேன். அங்கே யேனத்துப் பிடவை முப்பத்தெட்டுக்கட்டுப் போட்டார்கள். அந்த சீட்டை வாங்கிக் கொண்டு யென்கச்சேரியே வந்தேன்.

இத்தனாள் துரையவர்கள் உத்தாரப்படிக்கி முசியே அலுபேரும் முசியே கெறுசாமும் பாப்பையபிள்ளையும் முறாரிறுயனுக்கு நுக்கோபசனம் பண்ணுகிறதுக்கு ஆகசிறெப்பாவும் குதிரையும் பிடிச்சுக்கொண்டு லசுக்கருக்குப் போறார்கள். ஆங்கிரச ௵ பங்குனி ௴ 25௳ அங்ககாரகவாரம் 1753௵ ஏப்ரல் ௴ 3௳,

## 1753௵ ஏப்றல் ௴ 4௳ ஆங்கிரச௵ பங்குனி ௴ 26௳ புதவாரம்

இத்தனாள் கேழ்விபட்ட சேதி பாசிராயன் மைசூர்சீர்மையில் ஸ்ரீரங்கப்பட்டணங்கோட்டை மேலே சண்டைபண்றவன் எண்பது லஷம்ருபாயாகத்தீத்துக்கொண்டு அப்புறம் சாத்தாறுவுக்குப் போறதாய் நாற்காதவழி பயணம்போயி அப்புரவிறங்கினதாயி துரைக்கு காகிதம் வந்ததாய்ச்சொன்னார்கள்.

இத்தனாள் காலத்தாலே ஏழரை மணிக்கு துரையவர்கள் அண்டைக்குப்போய்க் கபுறுகள் சொல்லியானவுடனே தோஸ்துமகமது கிட்ட நிற்கச்சே தேவனாம்பட்டணம் சேதி நான் சொல்லுகிறேன் கேழுங்கோளென்று துரையவர்கள் சொன்னது - நாயித்துக்கிழமையின்றும் மமுதலிக்கான் தேவனாம்பட்டணத்திலிருந்து திருவீதிக்கு வரச்சே கோட்டை சமீபத்திலே சண்டையானபோது மமுதலிக்கானுக்கு குண்டு பட்டு சாவுகாயத்துடனே பல்லக்கின் பேரிலே திருவீதி கோட்டைக்கு யெடுத்துக் கொண்டு போனது மேசா யென்கிறவனும்

நூத்திருப்து பேர் சொலுதாதுகளும் செத்தது மெய்தான் மேசா யென்கிறவன். மேஸ்தர் லாரென்சு (Mr. Lawrence) யென்கிறவனோ அல்லது பின்னையொருத்தனோ தெரியாது. நூறு வெள்ளைக்காறர்களுக்கு காயமிதமில்லாமல் சிப்பாயிகளிலே செத்தப் பேர்கள் ஆயிரம் பேர்களுண்டு. கூலிக்காறர் வகையிருவிலே செத்தவர்கள் ஆயிரம்பேர்களுண்டு. அவர்கள் கொண்டு வந்த ரஸ்துகள் எல்லாம். பிசுக்கோத்துகள் ரொட்டிகள் சோப்பு சாரும் வகையிரா அரிசிகளெல்லாம் கொள்ளையிட்டுக்கொண்டு வந்தார்கள் இதல்லாமல் மகம்மதல்லிக்கான் பக்கிசு மகம்மது—பீரு—ரென்கிறவன் (Mahamud Abru) செத்துப்போனானென்றும் அந்தப் பிணங்களை யெல்லாம் நாயும் நரியும் பிடுங்கித்தின்றதென்று சொல்லி நமக்கு அஞ்சுவெள்ளைக்காற சொலுதாதுகள் செத்தார்கள். யேழுபேர் காயப் பட்டார்களென்கிறதும்—அதுமாத்திரம் நமக்கு சேதமில்லாமல்—புசங்கறுயன் செத்தானென்கிற சேதமொன்றுமாத்திரமே அல்லாமல் மைத்தப்படி நமக்கு ஒரு நஷ்டமுமில்லை யென்று துரையவர்கள் சொன்னாரிதல்லாமல் மராட்டியரின்று முதல் தேவனாம்பட்டணம் போக்கு வரத்து நடவாதபடிக்கு பந்துபஸ்து பண்ணிவிப்பார்களென்று சொன்ன மாத்திரத்திலே யிதிலே முராரிராயன் மனுஷன் தங்களண்டையிலே யிருக்கிற பீரங்கிக் குண்டு வேணுமென்று சொல்லிக்கொண்டான். அதுக்குத் துரையவர்கள் பீரங்கி மேஸ்திரியை அழைப்பிச்சுக் கொடுக்கச் சொல்லி உத்தாரங்குடுத்தார். உடனே முகுந்தறுயனென்கிறவன் வந்தான் அவன் யென்னைப்பார்த்து போசனமாச்சுதா வென்று கேட்டான் ஆச்சுதென்று சொன்னேன்—யென்ன கேழ்க்கிறானென்று துரையவர்கள் கேட்டார்—போசனமாச்சுதா—வென்று கேழ்கிறானென்று சொன்னதுக்கு நீர்காலத்தாலே யென்ன அலமுசு பண்ணுவாயென்று கேட்டார்— பழையதும் தயிரும் ஊறுகாயும் யென்று சொன்னேன். தமிழர் சாப்பாடும் ஒரு சாப்பாடா—மிருகங்கள் சாப்பிடுகிறாப் போலே சாப்பிடுகிறதுமல்லாமல் அவர்கள் சமைக்கிற கறியும் மத்தமரப் பண்டங்களுடனே கூடியவஸ்துவும் அப்படித்தான் மிருகங்கள் சாப்பிடு கிறதுக்கு யோக்கியமேயல்லாமல் மனுஷர் சாப்பிடுகிறதுக்கு சறுவாத்து மறந்து யோக்கியமல்ல வென்றும் துலுக்கர்-புலாபன்றி சாப்பிடுகிறார்களே அது யெவ்வளவாகிலும் கூட்டிக் கொள்ளலா மென்றும் மத்தப்படி யெங்கள் சாப்பாட்டுக்கு சமானம். பிறபஞ்சத்திலேயில்லை. சமைக்கிற பாகமும் அப்படித்தான் அந்த வஸ்துக்களும் அப்படித் தான் அதை மேலே மேசை மேலே வைத்துக்கொண்டு அதை இங்கிரித்து மெள்ளமெள்ள வெகு சந்தோஷத்துடனே பெண்சாதி புருஷன் பிள்ளை பின்னையும். பந்துக்கள் சினேகிதர் வகையறாக் களுடனே ஆனந்தமாயிதுவும் ஒரு காலக்ஷேபம்போலே யிருக்க சாப்பிடுகிறதுமல்லாமல் யெங்கள் சாப்பாட்டுக்கு அந்த துலுக் கனும் யிந்த தமிழனும் ஆசைப்பட்டு வாறதேயல்லாமல் நாங்கள் அவர்கள் சாப்பாட்டுக்கு ஆசைப்படத்தக்கதில்லை. யென்றும் அந்தக் கறிகளின் பேரிலே யெங்களுக்கு சறுவசனியமென்றும் யிப்படி பின்னையும் யிதுக்கு உள்ள குத்தத்தை யெல்லாம் சொல்லி மெத்த நிந்திச்சு நீர் வெள்ளைக்காற சாடையாய் சாப்பிடுகிறீரா—மேசை போட்டுக் கொண்டு நீர் வெகு நாள் வெள்ளைக்காறரிலே பழகின படியினாலே விவேகியான படியினாலே அதைத் தொட்டு மத்த விறுத்தமில்லையே யென்று யோசனை பண்ணி நடக்கிறாய்.

அதுயெனக்கு மெத்த சந்தோஷமாயிருக்குதென்று சொல்லி தமிழர் யெத்தனை பழகியிருந்தாலும் வாடிக்கையென்றும்—நாங்கள் பறயர் சாப்பிடுகிற தென்றும் மின்றிச்சு தள்ளினது அவர்கள் விவேக மில்லாதவர்களுமாய் மிருகங்களுமாய் யெண்ணி யிருக்கிறார் யென்றும் பின்னையும் யிப்படி விஸ்தாரமாய்ச் சொல்லி அப்பால் கொன்சிம் சீனாவுக்கு (Cochen China) பிசுப்பு போனாரே — அவரை அவ்விடத்திலே யிருக்க — பெகுமரியாதையுடனே சங்கை பண்ணி பேட்டி பண்ணிவிச்சுக்கொண்டான். அவ்விடத்து வியாபாரம் சமஸ்தமான பேர்களும் பண்ணிக்கொள்ளலாமென்று உத்தாரங் கொடுத்தானும் ஆனபடியினாலே யிவடத்திலே யிருந்து ஒரு கப்பல் அனுப்பப்போறோம் அந்தப் பிசப்புக்கு கும்பினீர் கோந்தாவிலே யெழுதிக்கொண்டு - அஞ்சு கோடி 2¼ 40-முழச் செல்லாவும் மாதிரைப்பாக்கும் — ஓர்கண்டியிலே ஓர்கண்டி 1-க்கு யிருபது ரூபாயிலே ஒரு கோடியும் இருபத்துஞ்சு ரூபாயிலே ஒரு கோடியும்— முப்பது ரூபாயிலே ஒரு கோடியும் -- ஆக மூணு கோடியும் ஓர் கண்டியும் வாங்கி சிகப்பு வோர்சாயம் தீருவிச்சு - பிசப்புவுக்கு — அனுப்பி கும்பினீர் கணக்கிலே பத்து எழுதிக்கோவென்றும் சொன்னார். நல்லதென்று சொன்னவுடனே யெழுந்திருந்து மேல் வீட்டே போனார். நானென் காசாக்கக்சேரியே வந்தேன்.

## 1753-ஹு அப்ரீல்மீ 5உ ஆங்கிரசஹு பங்குனிமீ 27உ குருவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப்போன விடத்திலே கபுறு மத்ததுகளைச் சொல்லியான பீற்பாடு துரையவர்கள் சொன்னது மமுதல்லிக்கானுக்கு -- சண்டையிலே கையிலே குண்டு காயம்பட்டு அதின்பேரிலே அந்தக் கையை வாங்கிப்போட்டார்கள் யென்றும் பாப்பய்யப்பிள்ளைக்கு சமாச்சாரம் வந்துதாம்—அந்தச் சேதிமெய்தானாவென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது உங்களுடனே நானப்படி கண்டிப்பாய் சொல்லுவேன் ஒருத்தர் சொல்லும் சேதிப்படிக்கி ஒருத்தர் சொல்லுகிறதில்லை சிறிது பேர் கைக்குக் காயம்பட்டு — அறுத்துப் போட்டார்களென்றும் — காயம் கட்டுகிறார்கள் யென்றும் அசல்லியமென்றும் வலியெடுத்துச் செத்துப்போனானென்றும யிப்படியாக அவரவர் - சரிப்போன படிக்கு யெல்லாம் நானாவித மாய்ச் சொல்லுகிறார்கள். யெதை மெய்யென்று நம்புகிறது ஆனால் மெய்யும் பொய்யும் யின்றைய - நாளையிலே வருகிற சமாசாரத்தினாலே தெரியவரும் யென்று சொன்னேன். மெய்தானென்றும் எதுவும் மெய்யென்று யெண்ணப் போகாது. யிதுவரையிலே மமுதல்லிக்கான் இரநூறுதரம் செத்துப்பிழைச்சு வந்தாரென்று - சொன்னார் அதுக்கு நான் சொன்னது. உங்களைப் பகைச்சபேர்கள் யெவன் பிழைச்சான் - செத்தானென்று ஒரு சபுத்தம் பிறந்தாலவன் செத்தவனே அல்லாமல் பிழைச்சவனல்ல நிசமை செத்தானென்று சொன்னார்கள். அப்படியே அவனும் செத்துப் போனான் நாசறு சங்கும் செத்தான். காசுதின்கானும் செத்தான். யிப்படி அனேகம் பேர்கள் செத்துப்போனார்களோயில்லையோ அந்தப் படிக்கு

மழுதல்லிக்கானும் செத்தவன் தானென்று சொன்னதுக்கு துரையவர்களும் ஒத்துக்கொண்டு நகைச்சுக்கொண்டு பேசியிருந்தாரிதிலே — தண்டிலேயிருந்து காயிதங்கள் வந்தபடியினாலே அதைப் படிச்சுக்கொண்டு பதிலெழுதப் போனார். நான் அனுப்பிவிச்சுக் கொண்டு பிடவைப் பார்க்கிற சாலேயே வந்தேன்.

இத்தனாள் பகலுக்கு மேலாக துரையவர்களுக்கு முராரிராயன் காயிதம் வந்ததாகவும் அந்தக்காகிதத்திலே முன்னாலே இரண்டு மூணுதிரம் சண்டையிலே உங்கள் மனுஷர் மோசம்பண்ணிப் போட்டார்களோ அல்லாமல் யெங்களுக்கு சகாயங்கூடயிருந்து யெதிரிகள் பேரிலே முனைஞ்சு சண்டைபண்ணாமல் போனார்கள். நேத்து மூந்தாம்நாள் நடந்த சண்டையிலேயும் அப்படித்தான் மோசம் பண்ணிப்போட்டார்கள். யிந்தப்படியானால் காரியமெப்படி சேகரமாய்வரும் யிப்பவும் யிவ்விடத்திலே யிருக்கிற உங்கள் பவுன்சு சறுதாறுக்கு எங்களுடனேகூடநின்று சத்துருக்கள் பேரிலே சண்டைகுடுக்கச்சொல்லிதாக்கீதும் யெழுதி யின்னம் குழுக்கும் மருந்து குண்டு பீரங்கிவகையிரா சண்டை சாமானும் அனுப்பிவிச்சால் சண்டைபண்ணலாமென்றுமிதல்லாமல் ரூசு மருச்சம்மதியிலே அறுபதினாயிரம் ரூபாய் வரவேணும் அதையும் அனுப்பாமல் போனீர்கள் அட்டியண்ணாமல் அறுபதினாயிரம் ரூபாயை யனுப்பிவிச்சால் கொடுக்கவேண்டிய பேருக்குக்குடுத்து காரியஞ்சலயிக்கலாமில்லாவிட்டால் பவுன்சு சண்டையிலே முனைய மாட்டார்கள். மத்தப்படி நம்முடவர்கள் தண்ணீர்பெண்ணையாத்தங் கரைக்கி இக்கரையிலே யிறங்கியிருக்கிறதாகவும் எதிரிகள் தண்டு அக்கரையிலே காபரு மங்கலத்திலே யிறங்கி யிருக்கிறதாகவும் அவர்களெட்டு பீறங்கியும் வைச்சுக்கொண்டு சண்டைக்குவரச் சொல்லி சொல்லி அனுப்பிவிச்சார்கள் யென்றுமவர்கள் சுடுகிற பீறங்கிகள் குண்டுகள் அவர்கள் பவுன்சில் போடடிருக்குதென்றும் இப்படியாக யெழுதிவந்தது அப்பால் நீங்கள் தமமக்கும் பணமும் உங்கள் பவுன்சு சறுதாறுகளுக்கு தாக்கீதும் அனுப்பிவிச்சாலாச்சு யில்லாவிட்டால் வழுதாவூரிலே நமக்கு சாகிர்குடுத்தால் அவ்விடத்திலே வந்திருக்கிறோமென்றுமிந்தப்படி கண்டிச்சு யெழுதி அனுப்பினதாகவும் அந்த காகித சேதி துரையவர்கள் பார்த்து—பாப்பய்ய பிள்ளையை அழைப்பிச்சு முராரிராயனுக்கு யின்னம் அறுபதினாயிரம் ரூபாய் கொடுக்கவேணுமாம் அதையேன் கொடுக்கயில்லை யென்று கோபிச்சுக்கொண்டதுக்கு யிப்போதானே கொடுத்துவிடுகுறே னென்று முராரிராயன மனுஷனைப் பாப்பய்யபிள்ளை தன்விட்டுக்கு அழைச்சுக்கொண்டுபோனான். அப்பால் துரையவர்கள் சிறிதுபேர் சொலுதாதுகளையும் சட்டைக்காறருமாய் நூறுபேரைக்கூட்டி பதினெட்டு ராத்தல் குண்டு ஒடுகிற பீறங்கியும் பனிரெண்டு ராத்தல் குண்டு ஒடுகிற பீறங்கியும் ஆக ரெண்டு பீறங்கியும் மருந்து குண்டும் முஸ்தீதுபண்ணிவைக்கச்சொல்லிப் பயணம் பண்ணி முராரிராயனுக்கும் காகிதமெழுதி யித்தனாள் ராத்திரி பத்துமணிக்கு றவானா பண்ணி அனுப்பிவிச்சார்கள்.

இத்தனாள் மச்சிலிபந்தரிலே யிருந்து முசியே புரியுடைய (Mr. Bury) சுலுப்பு ஒன்று வந்தது இந்த சுலுப்பும் பேரிலே சலாபத்துசங்கு லசுக்கரிலேயிருந்து முசியே ஓபமோ (Mr. Aumont) யென்கிறவனும் மூசியெ-தறஷி (Mr. Dargy) யென்கிறவனும்

இரண்டுபேர் கொலுதாதுகளும் மச்சிலிபந்தருக்கு வந்து அவ்விடத்திலேயிருந்து யிந்த சலுப்பின் பேரிலே யேறிவந்திறங்கினார்கள்—முசியே புரி வகைபிராக்களும் வந்து மச்சிலிபந்தர் யேனம் அந்தப் பிரூந்தியங்களிலே வந்துயிருக்கிறார்கள் அவர்களும் வருவார்களென்றும் யின்னம் சலாபத்து சங்கு தங்கிலேயிருக்கிற வெள்ளைக்காறர் கொஞ்சம் நஞ்சமாய் பிறப்பட்டு வருகிறார்களென்றும் சேதி கேழ்க்கப்பட்டது.

இத்தனாள் தண்டுக்குப்போன மருந்துகுண்டு பீறங்கி வகையிரா சண்டைசாமான் பிறகே துரையவர்கள் உத்தாரப்படிக்கு நயினாரும் தில்லை மேஸ்திரியும் போனார்கள்.

1753௵ அபிரேல்மீ 6உ ஆங்கிரச௵ பங்குனிமீ 28உ. சுக்கிறவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் அண்டைக்குப்போயி கூடிறு செல்லியானவுடனே துரையவர்களிருந்துக்கொண்டு மமுதல்லிக்கான் செத்துப்போனானென்கிறபேச்சு போய் அவன் செத்துப்போனானேயானால் அவர்கள் பவுஞ்சு வந்து நம்முடைய பவுஞ்சுக்கு எதிரே உறுக்காருமோ இதுவரையிலே யில்லையே அப்படிப்பட்டகாரியம் நேத்தியதினம் நடக்கிறபடியினாலே அவர்களுக்கு எசமானில்லாமல் பவுஞ்சுவந்து நீக்குமாவென்று சொன்னதுக்கு நான் சொன்னது மமுதல்லிக்கானுக்கு காயம் மாத்திரமேயல்லாமல் சாவுயில்லை. புசங்கறாயன் செத்தான் என்கிற உச்சாகத்தினாலே மமுதல்லிக்கான் பவுஞ்சு வெளியே பிறப்பட்டு வந்து யெதிர்ப்பாளையம் போட்டார்களேயல்லாமல் இல்லாவிட்டால் இத்தனை நாள் நாலுமாதமாய் திருவிதி கோட்டையைவிட்டு வெளிப்படாமலிருந்தவர்கள் இப்போ வெளியே பிறப்பட்ட காரண உச்சாகத்தினாலேயென்று தோத்துயென்று சொன்னேன். தோஸ்து மகம்மது நானுமப்படிதான் கேழ்விப்பட்டேன் என்று சொன்னான். அதிலே துரையவர்களென்னைப் பார்த்து இத்தனை ஆயிரம் பேர்களியிருக்கிறார்கள் ஒருத்தரும் இந்தப் பீரங்கியை அனுப்புவாரைக் காணோம். இதோ பாத்தயா இன்னமிங்கேதானே யிருக்குது நீர் போயி அவர்களுக்குத் தாக்கீது பண்ணி ராமச்சந்திர அய்யனையும் தாக்கீது பண்ணிப் பட்டணவரைக்கூட்டி அனுப்பிவிடென்று சொன்னார் இதிலே ராமச்சந்திர அய்யன் வந்து பட்டணவரைக் கூட்டினேன். சேவுகனில்லாமல் அட்டியாயிருக்குதென்று சொன்னான் சேவுகரென்னண்டையிலேயில்லை. உன் சேவுகரைக் கூட்டி அனுப்பென்று சொன்னார். நல்லதென்று யென் சேவுகரையுங் கூடக் கூட்டி பீரங்கியின் பிறகே அனுப்பி சேவுகருக்குங் கூலிக்காறருக்குங்கூட மூணு விருகன் பணம் சாருயக்கிடங்கியிலிருந்து வாங்கிக் கொடுத்து அனுப்பிவிச்சுப் போட்டு நான் காசுக் கச்சேரியே வந்தேன் இந்தப்பணம் ராமச்சந்திர அய்யன் தான்

## 1753ஹு அப்ரீல்மீ 8வ ஆங்கிரசஹு பைங்குனிமீ 30வ ஆதிவாரம்

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போய் துரையவர்களை பேட்டி பண்ணிக்கொண்டு கபுறு மத்ததுகள் சொல்லியான பிற்பாடு மருந்து குண்டு தண்டுக்கு அனுப்புமென்று சொன்னார். அப்பால் விஜயகப்பிள்ளையையும் தில்லை மேஸ்திரியையும் அழைப்பிச்சு மருந்து குண்டு ரவானா பண்ணச்சொல்லி அனுப்பினேன் அந்தப்படிக்கு ரவானா பண்ணினார்கள்.

இத்தனாள் துரை அவர்கள் விஜயகப்பிள்ளையை அழைப்பிச்சு தண்டிலே உன் மனுஷர் சிலவுக்கு யில்லை யில்லை யென்று வெள்ளைக்காறருடனே சொல்லுகிறார்களாம் அதென்னவென்று கேட்டார். மெய்தான் சிலவுக்கு யில்லை யென்று சொன்னான் அதின் பேரிலே துரையவர்கள் கோபிச்சுக்கொண்டு உன் பேரிலே வெகு பணம் வரவேண்டியிருக்கச்சே சிலவுக்கு தட்டில்லாமல் அனுப்பவேணுமே அல்லாமல் யில்லாமல் போவானேன் யென்று கோபம் பண்ணி யினிமேல் சிலவுக்கு யில்லை யென்று செல்லாமல் படிக்கு அனுப்பிக்கொண்டு வாவென்று சொல்லிப்போகச் சொன்னார். அப்பால் நான் அனுப்பிவிச்சுக்கொண்டு காசா கச்சேரிக்கு வந்தேன். யித்தனாள் மத்தியானம் பனிரெண்டு மணி முதல் தண்டிலே வெகு பீரங்கி வெடி கேழ்க்கப்பட்டுது. இத்தனாள் பகலுக்கு மேலாக துரையவர்கள் யென்னை அழைப்பிச்சு தண்டிலே விஸ்தாரமாய் வெகு பீரங்கி வெடி கேழ்க்குது நம்முட்டவர்கள் நல்ல சண்டை குடுக்கிறார்கள் என்று சொன்னார். அதுக்கு நான் நேத்து நீங்கள் பெரிய பீரங்கி அனுப்பின பிற்பாடு நல்ல சண்டை ஆகுமென்று சொன்னேன் அப்பால் தண்டுக்கு கறுவல் அனுப்பவேணும் நாலெஞ்சுச் செக்கடா அழைப்பியென்று சொன்னார் நல்லதென்று சேவுகருடனே சொல்லிக்கொண்டு வந்து தில்லை மேஸ்திரி வசம் பண்ணிப் போடச் சொல்லி சொன்னேன் அந்தப்படிக்கு சேவுகர் போய் ரெண்டு மூணுச்செக்கடா கொண்டு வந்து ஒப்பிச்சுப்போட்டார்கள்.

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போயிருந்து யென் கச்சேரிக்குப் போகச்சே பிடவை பார்க்கிற சாலையிலே சின்ன துரையும் மூசே பொலேவும் யிருந்துக்கொண்டு பிடவையானால் யிப்படி கிடக்குது மழை கொப்பாயிருக்குது யிந்த கலாபங்களினாலே ஒரு காரியமும் பார்க்கிறதுக்கு யில்லை கும்பினீர் வேலையெல்லாம் கெட்டுப்போகுதென்று சொல்லிக்கொண்டார்கள்.

## 1753ஹு அப்ரீல்மீ 9வ ஸ்ரீமுகஹு சித்திரைமீ 1வ சோமவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்கிப் போனவிடத்திலே துரையவர்கள் சொன்னது யென்னத்துக்கு பதினெஞ்சு குஞ்சம் பத்தொன்பது—குஞ்சம் 25—குஞ்சம் 26—குஞ்சம் 30—குஞ்சம் முதலானதுகளும் மச்சிலிபந்தரிலே வேங்கிஷ

கட்டுகளும் வந்துது. யேனத்துப் பிடவைக் காரிக்கம் நூத்துச் சில்வானம் கட்டு வந்தது. அதைச் சலவைப் பண்ணிப் போடச் சொல்லி வண்ணாந்துரைக்கி விடச் சொல்லி மூசே பீராவுக்குச் சொல்லி சிக்கிரமத்துக்குச் சலவை பண்ணச் சொல்லி சொன்னார். நல்லதென்று சொன்னேன். அப்பால் திருவிதி பேச்சென்னவென்று கேட்டார்.

காலத்தாலேபிடிச்ச பீரங்கிவெடிகள் கேக்கப்படயில்லே அதுக்கு நேத்துராத்திரி யெட்டுமணி துவக்கி வூரிலே சொல்லிக்கொள்ளுகிற கபுறுகள் குமாரமங்கலத்திலேவந்து யெதிர்பாளையம் போட்டுக் கொண்டு சண்டை கொடுத்த மமுதல்லிகான் ஓடிப்போய் திருவிதிக் கோட்டை சேர்ந்தானென்றும் சொல்லிக்கொள்ளுகிறார்கள். அதுக்குப் பீறங்கிசத்தம் கேளாமலிருக்கிறதுக்கு தாக்கலாசரியா யிருக்குதென்று சொன்னேன் அப்படிதானாகவேணும் அப்படி யானால் யிந்தமட்டுக்கும் கபுறு வராதாவென்று கேட்டார். பொழுது விடிந்ததும் நாலஞ்சு நாழிகை தானே ஆச்சுது. யின்னம் ரெண்டு மூன்று நாழிகையிலே கபுறு வருமென்று சொன்னேன் இதிலே மூசே பெடுத்தலேன் சதிறங்கப்பட்டணத்துக்குப்போனவன் வந்து துரையவர்களுக்கு ஆசாரம்பண்ணி அவன் போன காரியம் பேசத்துவக்கினவுடனே நாமிருக்கிற தல்லவென்று பிடவை பாற்குற சாலையேவந்து உளுக்காந்து பேசிக்கொண்டிருந்தேன்.

அப்பால் மூசே பெடுத்தலேன் பிடவை பார்க்குற சாலையே வந்து யென்னுடனே உன்னுடைய லம்பாசு சிட்டியும் சென்னப்பட்ட ணத்திலிருந்ததை மூசே தொறமியுசுக்-(Mr. Dormieux) கொண்டு வந்து சதிறங்கப்பட்டணத்தில் சேத்துவைத்துக்கொண்டிருந்ததை நான் போய் பார்த்தவிடத்திலே சிலவென்றும் சென்னபட்டணத்து விலையென்றும் சென்னப்பட்டணத்துக்குப்போன சிலவென்றும் யெழுதிவிச்சு தொந்தரைகள் பண்ணினார்கள் அதின்பேரிலே நீர் கொடுக்கவேண்டிய 500 அஞ்ஞூறுவிராகனும் மூசே தொறமியு சுக்குச் (Mr. Dormieux) சொல்லிக்கொண்டு அந்தப்பிட்டையைக் கட்டுப்போட்டு யென்சரக்குடனே கூடசலுப்பிலே யேத்திவிச்சேன் அது வந்தவுடனே நீரும் நாமும் பேசிக்கொள்வோம் உமக்கு ராசி யாயிருந்தால் சரக்கு குடு யில்லாவிட்டால் நான் சொல்லிக் கொண்ட விராகனை கொடுத்துவிடென்று சொன்னான். நல்ல தென்று சொன்னேன். அந்தமட்டுக்கும் அவன் வீட்டே போனான். நான் யென் காசாக் கச்சேரியே வந்தேன்.

பனிரெண்டுமணிக்கு முருகிருயன் சாறணி சுவார் வந்து மமுதல்லிக் கான் குமாரமங்கலம் விட்டு திருவிதிகோட்டையே ஓடிப்போய் விட்டானென்று அந்தவிடத்தில் நாங்கள் கொடிபோட்டு யிறங் கிறோமென்றும் சொல்லியனுப்பினான் யென்று வாய்விசேஷமும் சொல்லி முருகிருயன் காகிதமும் துரையவர்களுக்குக் கொடுத்து துரையவர்கள் சந்தோஷப்பட்டு வெகுமானம் ஒட்டகைக்கா றனுக்கு நூறுருபாயும் குடுத்து ரெண்டுகெசம் சிகப்பு சகலாத்தும் கொடுத்து மமுதல்லிக்கான் செத்த கபுறு சொன்னால் ஆயிரம் விராகனும் ஒரு ஆனையும் வெகுமானம் குடுக்கிறோமென்றும் துரை யவர்கள் சொன்னதாய் வந்து சொல்லி கேழ்வியான சேதியை யெழுதிவைத்தேன்.

## 1753ஆ அபிரேல்மீ 10உ ஸ்ரீமுகஆ சித்திரைமீ 2உ அங்காரகவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போன விடத்திலே கபுறு சொல்லியான பீர்ப்பாடு பாசிராயன் கிஷ்னை நதிதாண்டி போறானென்கிற கபுறு மெய்தானா வென்று கேட்டார். ம்பிசூர் மொகத்துமா தீத்துக்கொண்ட பீர்ப்பாடு பிதனூர் மொகத்துமாவும் தீத்துக்கொண்டு சத்தாராவுக்குப் போனதாயும் குசிராத்தி தேசத்தின் பேரிலே அவன் தம்பி சண்டைக்குப் போயிருக்கிறானும் அவனைக் குசிராத்தி சமேதாரன் சுத்திக் கொண்டானென்கிற சேதியெழுதி வந்ததாயும் அதின் பேரிலே நான் சுறுக்காய்ப் போறதாயும் சேதி சொல்லிக் கொண்டாரென்று இந்த மட்டுக்கும் கிஷ்னைநதி தாண்டிப் போய் சத்தாராபோய் சேந்திருப்பானென்று துரையவர்கள் சொன்னார்கள் உங்களுக்கு காகிதம் வந்தப்படியினாலே மெய்யாயிருக்கும் யென்று சொன்னேன். அப்பால் வெளிதானிய முள்ளதுக்குள்ளே வரத்து வருகுதேயென்று கேட்டார். நல்லவரத்து கரையிலேயும் வருது சமுத்திரத்தின் பேரிலேயும் வருதென்று சொல்லி பின்னையும் லோகாப்பிறமமாய் பேசியிருந்து அனுப்பிவிச்சுக் கொண்டுயென் கச்சேரியே வந்தேன்.

## 1753ஆ அப்றீல்மீ 12உ ஸ்ரீமுகஆ சித்திரைமீ 4உ குருவாரம்

இத்தனாள் காலத்தாலே யேழு யேழரை மணிக்கு துரையவர்களண்டைக்குப் போய் கபுறு சொல்லி ஆனவுடனே யினிசுக்கான் (Mr. Ilyas Khan) முகுந்தாயன் வகையிருக்கள் பேச வந்தார்கள். அந்தச் சாடை பார்த்துக்கொண்டு யென்கச்சேரியே வந்தேன்.

இத்தனாள் பதினொன்றேமுக்கால் மணிவேளை அழைப்பிச்சார். நான் போய் துரை அவர்கள் மேல் வீட்டின் பேரிலே யிருக்கச்சே யினிசுக்கான் வகையிராக்களுடனே அல்லிக்கான் கூடயிருந்து பேசிப்போட்டு தாழயிறங்கி—சாப்பிட வேணுமென்று வரச்சே நான்போய் ஆசாரம் பண்ணினேன். அல்லிக்கானை தண்டுக்குப் போகவேண்டாமென்று வீட்டிலே தானே யிருக்கச் சொன்னேன் யிதை நயினாருக்குச் சொல்லி அல்லிக்கான் தண்டுக்குப்போக வேண்டாமென்றும் போகவொட்டாமல் படிக்கி மனுஷரை வைத்துப் பார்க்கச் சொல்லென்று சொன்னார். அந்தப்படிக்கி பெரியண்ண நயினார் துரைக்கிட்ட நின்றவனுடனே துரைச் சொன்ன சேச்சாம்படியே சொன்னதுக்கு நயினார் பத்திரமாய்ப் பார்க்கிறேனென்று சொல்லி சலாம் பண்ணிக்கொண்டு போனான். அப்பால் துரை சாப்பிடத் தாழயிறங்கினார். நானும் ஆசாரம் பண்ணிக்கொண்டு வீட்டுக்குப்போனேன்.

1753ஆ அப்றீல்மீ 16வ ஸ்ரீமுகஆ சித்திரைமீ 8வ
சோமவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப்போய் காண்பிச்சுக்கொண்டு கபுறுகள் சொல்லுகிறதானவுடனே பறங்கிப்பேட்டைக்கி யெழுதி அனுப்பிகிட்டாக் கப்பலிலே வந்த வெள்ளியமெல்லாம் வாங்கிப் போடவேணுமென்றுனபடியினாலே அதுக்கேத்த பேருக்கு யெழுதி அனுப்பிவிச்சு மூப்பத்திரெண்டு முப்பத்திமூணு மட்டுக்கும் வந்தாலும் வாங்கிப்போடச்சொல்லி அங்கேயிருக்கிறபேர்களுக்கு யெழுதி அனுப்புயென்று சொன்னார் நல்லதென்று சொன்னேன். அப்பால் குதிரைகள் போடுகிறார்களா யென்று கேட்டார். இருவத்திநாலு மணிலா குதிரைகள் வந்திருக்குது. மூசே றபேக்கு (Mr. Ribec) முதலான மணிலா – அறம் சாம காறர்கள் வரயில்லை - யென்று சொன்னேன். அதிலே – யேலம் போடுகிறார்கள் யென்று கபுறு வந்துது. நீயேலத்துக்குப்போ - நான் வாறேனென்று சொன்னார். நல்லதென்று நான் போனேன். யேலம் போட துவக்கினார்கள். முன்ரெண்டு குதிரை சோடாய்ப் பொறுக்கி வண்டிக்கித்தாமாய் வைத்துப் போட்டார்கள்.

மூசே தெலார்சு அறுநூத்திப்பத்து ரூபாயாய் வாங்கினான். அப்பால் பின்னை ஒரு குதிரை மூன்னூத்திமூணு ரூபாயாய் வாங்கினான். யிதுமெத்த ஒசந்த விலையென்று நான் கேளாமல் விட்டுவிட்டேன். அப்பால் ஒரு குதிரை அன்னூறு ரூபாய் மட்டுக்கும் அன்னூறுக்கு மேலும் வாங்கினார்கள். மூன்னூறுக்குத் தாழ்ந்தில்லை அறுநூறுக்கு ஒசந்ததில்லை. யிந்த மட்டுக்கும் அவரவர் வாங்கினார்கள். முன் யிறநூறு ரூபாய் ஒசந்தவிலை வாங்கிறது துலுக்கர்களுக்கு காப்பாத்தி விக்கிறது – நாலூறு விராகன் அப்படிப்பட்ட குதிரைகள் மெத்தவிலை. ஒசந்து றெட்டிச்சு முதிச்சுப்போச்சுது. ஆனபடியினாலே நான் வாங்கவில்லை ஆனால் தமிழரிலே நாகண்ண நாயக்கர் – குண்டூர் வெங்கிடாசலசெட்டி வகையிரா நாலஞ்சு திதிரையும் மீரஷம் ஒரு குதிரை துரையவர்கள் வந்து கேட்டு வாங்கிக் குடுக்க வாங்கினதுமல்லாமல் மத்ததெல்லாம் வெள்ளைக்காறர்கள் வாங்கினார்கள் ஈசுவரன் கடாஷ்ஷிச்சு - நாசறுசங்கு வந்து இம்மத்து பாகதூர்கான் கையிலே (Himayat - Bahadurkhan) ஈமமவும் பிறூன்சுக்காறர்களுக்கும் கத்தாகிய அயிசுவரியம் வரவும் யிருந்தபடியினாலே அவர்களுக்கு லக்ஷலக்ஷ கணக்காய் ஆஸ்திகளிருக்கச்சே யிந்த குதிரைகள் விலை ஒசத்தி வாங்குறது ஆச்சரியமல்லவென்று செனங்கள் பேசிக்கொண்டார்கள்.

1753ஆ அப்றீல்மீ 19வ ஸ்ரீமுகஆ சித்திரைமீ 11வ
குருவாரம்

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்கிப்போய் துரையவர்கள் நோயிலுக்குப்போய் பூசை கேட்டு கொவறனமா–தாமுவந்து றே-கப்பே-சமஸ்தமான பேர்களும் குடிச்சான பிர்ப்பாடு துரையவர்களுக்கு நான்போய் கபுறு சொல்லி ஆனவுடனே யித்தனை

நாளும் யென்ன சேதி யென்றும் கேழ்ப்பார்-அதுக்கு உத்திரஞ் சொல்லுகிறதுண்டு அது யின்றைக்கி ஆவாகனம் விசற்சனமே யில்லாமல் மொகமெல்லாம் காந்தி ரொம்பவும் விசாரமாயிருக்கிற தாய்க் கண்டுதுயில்லாமல் முராரிராயன் மனுஷன் முகுந்தருய னென்கிறவன் தங்களுக்கு-மாதம் நேத்து-10உ யுடனே ஆச்சுது மாதச் சம்பளம் லக்ஷத்து யிருபதினாயிரம் ரூபா கொடுக்கச் சொல்லி அவன் வந்து கோயிலுக்குப் போய் வரச்சே வந்து உளுக்கார்ந்துகொண்டான். அவன் பார்த்த உடனேயும் நாளுவித காரியங்களும் மனதுக்கு அனேகம் தோத்தம் கொடுத்துதாங்காட்டும். காரியங்கட்டாமல் போறவிடமல்லாம் முறிஞ்சுவாறதும் சீமைகளெல்லம் சத்துருக்கள் ஆக்கிரமிச்சுக் கொண்டிருக்கிறதுமல்லாமல் கொஞ்சம் நஞ்சம் யிவர்கள் கட்டினதுகள்கூட அவர்கள் மனுஷர் வந்து ஆக்கிறமிச்சு யிவர்கள் மனுஷர்களை தெறத்திவிடுகிற கபுறுகள் வருகிறதுனாலேயும் பணம் ரத்து யென்கிறது யில்லாமல்படிக்கும் மாசாமாசம் முனுலக்ஷம் ரூபாமட்டுக்கும் பெட்டியிலிருந்து குடுக்கிறதும் யிதுகளை யெல்லாம் நினைத்தமாத்திரத்திலே மனதுக்கு யென்னமாய்த்தோத்திச்சோத்திவெகு கிலேசத்தை அடைஞ்சு யிருந்த சாடையைப் பாத்து பிடவைபார்க்கிற சாலேயே வந்து அவ்விடத்திலே சின்னதுரை மைத்தப்பேர் யிருந்தவர் களுடனே சத்துநேரம் கண்டு பேசி அப்பால் வெள்ளைக்காறர்களுக்கு மூன்று முதல் சனிக்கிழமை வரைக்கும் சுவாமிகஸ்தி படுகிற நாளான படியினாலேயும் வெள்ளைக்காறர்துக்க சட்டை போட்டுக்கொண்டு கோயிலுக்குப் போறவர்களானபடியினாலே அவரவர்கள் வீட்டே போய்விட்டார்கள். அந்த சாடையைப் பார்த்துக்கொண்டு நானும் கும்பினீர் வர்த்தகர்களுடனே பேசியிருந்து அப்பால் யென்கச்சேரியே வந்தேன்.

## 1753௵ அப்றீல்மீ 20உ ஸ்ரீமுக௵ சித்திரைமீ ;12உ சுக்கிரவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் அண்டைக்குப்போன விடத்திலே அவர்கோயிலுக்குப் போனவர் வரபத்துமணி அடிக்கிற மட்டுக்கும் சென்றது. அந்தமட்டுக்கும் யிருந்து கபுறு சொன்ன உடனே கேட்டுக் கொண்டு சும்மாய்ப் பிறப்பட்டு மேலே போய் விட்டார் யின்றையத்தினம் கோசாயிடுகிறதும் சக்கிறமேந்து வாங்கிக் கொள்ளுகிறனுளானபடியினாலே சுவாமி நெத்தியைப் பிடிச்சு பாடுகிற படியினாலே அந்ததுக்கத்திலே மவுனமாய்ப் போனதாய் யெண்ணிக் கொண்டுபோனேன். இதல்லாமல் யின்றையதினம் துக்கக்கொடி அரைக்கொடி போட்டுது. நகரம் வெகுசாய் கொண்டாடுகிற சாடையாய்க் கண்டுது. யிந்த ஊருக்கு நான் வந்து முப்பத்திமூனு வருஷம் ஆச்சுது. வியாழம் வெள்ளி சனி மூனு நாளும் மணியடிக்குற தில்லே. கொடி போடுகிறதில்லே. தானதற்மம் அவர்களுக்குள்ளே குடுக்கிற பிட்சைக்காறர்களுக்கு சாப்பாடு போடுகிறதும் பெரிய துரைத்தனம் பண்ணுகிறவர்கள் பிட்சைக்காறர்களுக்கு ரெண்டு மூனு விராகன் பணம் குடுத்தால் மெத்தப்பெரியது. அப்படி யிவர் துரைத்தனத்துக்கு வந்து பதினொரு வருஷமாய் நடந்து வந்தது

யிவ்வருஷம் பிட்சைக்காறர்களுக்கு நூறு விராகன் பணமும் ரூபாயும் குடுத்து அதிசயமும் அரைக்கோடி போட்டு துக்கங்கொண்டாடுகிறது ஒரு அதிசெயமும் யிந்த ரெண்டு மூணு நாளும் கோப மில்லாமலும் மனுஷர்களுக்கு உத்த அடி உதாசினமில்லாமல் யிருக்கிறது ஒரு அதிசெயமுமாய் கோட்டையிலே துரைவீட்டிலே யிருக்கிறதுபாசிகள்—வேலைக்காரர்கள் வகையிராக்கள் பேசிக்கொண்டார்கள். முசே லனுவார் (Mr. Lenoir) பிட்சைக்காறர்களுக்கு குடுக்கிறது ஒரு வருஷத்துக்குள்ளே கப்புசுக்கோயிலுக்கு கூட———— நூத்தன்பது இரநூறு விராகனுக்குள்ளே யிருக்கும்—முசே தும்மா ஆயிரம் விராகன் மட்டுக்கும் யிருக்கும். டெண்டராயிரம் விராகன் மட்டுக்கும் சொல்லலாம் முசே துப்ளேயிக்குசு (Mr. Dupley) முப்பது விராகன் மெத்தவாயிருக்கும். அப்படிப்பட்டவர் நேத்துகாசு பெருநாலையிலே தானே மலையாளத்திலே யிருந்து வந்த கிறிஸ்துவ பிட்சைக்காறர் களுக்கு-நூறு ரூபாயும்—நூறுரூபாய்காசுபணமும் பின்னையும் கோயிலுக்குப் பிட்சைக்காறர்களுக்கு கொடுக்கச் சொல்லி கோயிலுக்கு நூறு ரூபாய் விழுக்காடு ரெண்டு கோயிலுக்கும் யிறநூறுரூபாயும் ஆகநாநூறு ரூபாய் சிலவழிச்சதாய் துரையவர்கள் வீட்டிலே யிருந்தவர்கள் ஆச்சரியப்பட்டதாய்ச் சேதி கேழ்க்கப்பட்டது. அதை யெழுதி வைத்தேன். இத்தனை பத்தி வருவானேனென்றால் பெண்சாதி போதிச்சிருப்பாள் யிந்த சுவாமி யிருக்கப்பட்ட நாளையிலே சத்தே விசுவாசமாய் யிருந்து பக்தி பூருவீகமாயிருந்து தானத்தருமம் பண்ணி கோம்பேசாரிட்டு–சக்கிறமேந்து (Sacrement) வாங்கிக் கொண்டால் சத்துருக்கள் விறுத்தியாயிருக்கிறதும் பொன்னைப் பிடிச்சாலும் மண்ணாய்ப்போகுதே அதுபலிக்கும் யென்று யென்ன சொன்னளோ அதின்பேரிலே யிதைச் செய்யுறதாய் அவர்வீட்டு வேலைக்காறர்கள் சொல்லிக் கொண்டார்கள் இதிலே யென்னயிருக்குது செனங்களுக்குப் பொல்லாப்பு பண்ணுமலும் பூத்த தயவும் யெங்கே யிருக்குதோ அங்கே சுவாமி அனுகூலமாயிருப்பாரே அல்லாமல் யிப்படி சனங்களை பெண்சாதியும் புருஷனனும் போட்டு வதைக்கச்சே யிவர்களுக்கு யெந்த காரியம் செயமாம் யென்று சகலசனங்களும் சொல்லிக்கொள்ளுகிற சேதியை யெழுதிவைத்தேன். திருவோத்தூர் மதுறாந்தகம் உத்திரமல்லூர் சாலப்பாக்கத்திலே யிருந்த அமுல்தாறர்கள் வாங்கிவந்ததாயும் யிங்கிறேசுக்காறர்கள் மனுஷர்கள் வந்து கட்டிக்கொண்டார்கள் யென்றும் சொல்லிக்சொண்டார்கள்.

## 1753ஞ அப்றீல்மீ 21உ ஸ்ரீமுகஞ சித்திரைமீ 13உ சனிவாரம்

இத்தனாள் காலத்தாலே கோயில் சடங்கு முடிஞ்சு துரையவர்கள் முதலான பேர்கள் கோவற்ணமாவுக்கு வர பத்துமணி அடிச்சுது அப்பால் தேகுடிச்சானவுடனே மயிசூர் வக்கீல் வந்தான். அவனைக் கண்டமாத்திரத்திலே துரையவர்கள் யெழுந்திருந்து மேல்வீட்டே போய்விட்டார். யினிமேல் கபுறுகளாக மாட்டாது. யென்று நான் யென்கச்சேரியே வந்தேன். அப்போ சின்னிய செட்டி வெங்கிடாசல செட்டி குருவப்ப செட்டி கூடவந்தார்கள். மயிசூர் வக்கீலுக்கு யெழுதி வந்த சேதி யிவர்கள் யெழுதின உடம்படிக்கைக்கி அவர்கள் வொருகாரியம் தவிர மத்தத்துகள் சம்மதியாய் யெழுதி வந்ததாயும் அதுக்கு வொருமார்க்கமாய் சரிக்கட்டி சீக்கிறமத்துக்கு யெழுதி

யனுப்பிவிட்டால் நர்லஞ்சு லக்ஷம் ரூபாய் முன்னுதாய் வந்தால் ரெண்டுமாச சிப்பந்தி சிலவுக்கு ஆமே—அப்பாலே பார்த்துக் கொள்ளுவோ மென்கிற தமியினுலே சீக்கிரமத்துக்கு ஒரு வெள்ளைக் காறர்களுடனே கூடபேசாமல் பிறப்பட்டு மேலே போய் விட்டா ரென்று சொன்னுர்கள். அங்கே யிருந்து வந்த உடம்படிக்கையும் யிவர்கள் யிங்கே ஒடம்படிக்கையும் விபரமாய்த் தெரிந்து நாளை நாளைநன்றையிலே யெழுதுகிற தினசரியிலே யெழுதிவைத்தேன்.

## 1753ஸு அப்றீல்மீ 22உ ஸ்ரீமுகஸு சித்திரைமீ 14உ ஆதிவாரம்

இத்தனுள் வெடிய காலத்தாலே துரைகளுக்கு சுவாமி மூணு நாளாய் கஸ்திப்பட்டு மறணத்தை அடைந்தவர் யித்தனுள் பொழுது விடிய அஞ்சு நாழிகை யென்ற உயிர்த்தெழுந்தா ரென்று சகல பேர்களுட னேயும் கோயிலுக்குப் போய் வந்து மறுபடி யேழரை மணிக்குப் போய் பூசைக்கேட்டுப் போட்டு யெட்டுமணி வேளைக்கு சகலமான பேர்களுடனேயும் வந்து கொவற்ணமாம்-தாழகபே குடிச்சான வுடனே அவரவாகளை அனுப்பிவிச்ச பிற்பாடு நான் போய் ஆசாரம் பண்ணி கபுறு சொல்லியான பிற்பாடு திருவீதிவிட்டு மமுதல்லிக்கான் போய் நேத்து சாயங்காலம் தேவனும்பட்டணம் போய்சேர்ந்தான். அப்பால் திரிச்சிராப்பள்ளிக்குப் போருனென்கிற கபுறு வொன்று ரெண்டாவது அவனண்டையிலிருக்கிற சிப்பாயிகளுக்கும் வெள்ளைக் காறர்களுக்கும் குடுக்கிறதுக்கு நிறுவாகமில்லாமல் தேவனும்பட்டணம் போய் சிலவுக்கும் வாங்கிக் கொண்டு ரஸ்தும் பிடிச்சுக்கொண்டு வருவோமென்று பிறப்பட்டான் யெனகிற கபுறு வொன்று யென்று துரையவர்கள் சொன்னுர்கள். திருச்சிராப்பள்ளிப் பேச்சிலே நிறுவாகமில்லே. ஆனபடியினுலேயும் திரிச்சிராப்பள்ளிக்குத்தான் போகாமல் தீராது. அல்லது அதுக்குத்தக்க பெலனுகிலும் அனுப்ப வேணுமென்றும் சிலவுக்குமா ரஸ்துக்கும் கூடப்பணம் கேட்டு வாங்கவேணுமென்றும் யினிமேல் யிங்கேதானே யிருந்தால்— நிறுவாகத்துக்கு வராதென்றும் பிறப்பட்டு தேவனும்பட்டணம் நேத்து சாயங்காலம் ஆறு மணிக்குப் போய்ச் சேர்ந்தான் யென்றும் சொல்லுகிறுர்கள் யிது ஆக்கா பாசியாயென்ற வேண்டிய தென்றும் சொல்லுகிறுர்கள் இது ஆக்காப் பாசியா என்றவேண்டிய தென்றும் சனங்கள் சொல்லிக்கொள்ளுகிறுர்கள் யென்று சொன்னேன். யிதைக்கொண்டு வந்த முராரிராயன் ஒட்டகைக்காறனை மறுபடி காகித மெழுதிக் குடுத்துப் பயணம் பண்ணி அனுப்பவேணுமென்கிற பிக்கரின் பேரிலே மேல் வீட்டின் பேரிலே யேரிப்போனுர். நான் யென்கச்சேரியே வந்தேன்.

## 1753ஸு அப்றீல்மீ 23உ ஸ்ரீமுகஸு சித்திரைமீ 15உ சோமவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போனவிடத் திலே மனது தாபந்தியத்தினுல்யோ அல்லது வியாதியினுலேயோ கோயிலுக்கு பூசைக்குக் கூடப் போகாமல் மேல்வீட்டின் பேரிலே

ஒன்டியாய் ஆலோசனை பண்ணிக் கொண்டிருக்கச்சே நான் போனேன்-மமுதல்லிக்கான் தேவனும்பட்டணம் போய்ச்சேர்ந்தானும் யென்று சொன்னுர் மெய்தான் அப்பால் திரிச்சிராப்பள்ளிக்கிப் போறதாயி முஸ்திப்பாயி நாளையத்தினம் போருனென்று சொன்னுர்கள். யென்று சொன்னதுக்கு யெப்படி திரிச்சிராப்பள்ளிக்கிப் போவான் வழிச் சிலவுக்குப் பணம் வாணுமா—சிப்பாயிகள்—குதிரைக்காறர்கள் தங்கா பண்ணுகிறுர்களே. அவர்களுக்கு என்னத்தைக் குடுப்பான் அவர்கள் யெப்படி போகப்பண்ணுவார்கள் என்று சொன்னுர் கூடலூரிலிருந்து ஒரு செட்டிவந்தவன் திரிச்சிராப்பள்ளி கோட்டைலே நிறுவாகமில்லை யென்றும் கோட்டைக்குள்ளே யிருக்கிறவர்கள் பிதுவாய்ப்பண்ணிக் கொண்டு மயிசூராருக்கு உளவாயிருக்கிறபடியினுலே சிலவுக்கும் ரஸ்துவுக்கும் யிக்கட்டாயிருக்கிறபடியினுலேயும் நீங்கள் வருதே போனுல் கோட்டை நிறுவாகத்துக்கு வாருதென்றும் சத்துருக்கள் வசமாய்ப்போம் யென்றும் யினிமேல் காகிதங்கள் வரமாட்டா தென்றும் கடசிக்காகிதமாயிதை யென்னிக்கொள்ளச் சொல்லியும் கண்டிப்பிலே யெழுதி வந்தபடியினுலே திரிச்சிராப்பள்ளிக்கு மமுதல்லிக்கான் பயணம் போறது நிச்சயமென்றும் யின்றையதினம் போவானென்றும் சொன்னுனென்றும் சொன்லேன். அதுமெய்யல்ல வென்று சொன்னுர் அந்தமட்டுக்கும் நான் ஆசாரம்பண்ணிக் கொண்டு பிறப்பட்டு யென்கச்சேரியே வந்தேன்.

கேழ்விப்பட்ட சேதி மமுதல்லிக்கான் திரிச்சிராப்பள்ளிக்கிப் போருனென்று முராரிராயன் காகிதம் கொண்டு வந்து சாரணி வார் குடுத்தான் அந்தக்காகிதம் வந்தபிற்பாடு துரையவர்கள் சந்தோஷமாயிருக்கிருனென்றும் வந்து சொன்னுர்கள். அதன்பேரிலே முருரிருயனுக்கும் முசே மெசன் (Mr. Missin) கொம்மாந்தமாவுக்கும் காகிதமெழுதி மறிக்கச்சொல்லி அனுப்பிவிச்சதாய்ச் சென்னுர்ள்.

## 1753ஸு அப்றீல்மீ 24வ ஸ்ரீமுகஸு சித்திரைமீ 16வ அங்காரகவாரம்

இத்தனுள் காலத்தாலேயும் பெரியநாளானபடியினுலே கோயிலுக்குப் பத்துமணிக்குப் போய் பூசை கேட்டு வந்தவுடனே— — முறுத்தசல்லிக்கான் அனுப்பினுனென்று சாறனிசுவார் காகிதம் கொண்டு வந்து குடுத்துச் சொன்னசேதி ரெண்டு நாளைக்கி முன்பாக அப்துல்லாயிக்கானுக்கு ஆயிரம் பேர் பாறுக்காறர்களும் ஒரு சொலுதாதுக்கப்பித்தானும்—நூறு வெள்ளைக்காறர்களும் யிற நூறு முன்னூறு குதிரைக்காறர்களும் பிறப்பட்டு வேலூரின் பேரிலே சண்டைக்கு வாறதாய் பிறப்பட்டு வந்து குப்பத்திலே யிறங்கியிருக்கிற யிடத்திலே தன் பவுன்சு பிறப்பட்டுப் போயவர்கள் பேரிலே சண்டைக்குப் போய் சண்டை பண்ணினவிடத்திலே அப்துல்வாபுக்கான் (Abdul-Wahab Khan) முறிஞ்சு ஓடிப்போய் விட்டானென்றும் ரெண்டு பீரங்கியும் ஒரு ஒட்டகத்தின் பேரிலே நகாராவும் யிங்கிரேசு சொலுதாது கப்பித்தானும் பின்னையும் அஞ்சு ஆறு வெள்ளைக்காறருகளும் நூறு துப்பாக்கிகள் கையில் வசமானுர்களென்றும் நூறுபேர்களுக்கு குண்டு சாவுயென்றும் மத்தப்பேர்கள் யெதாயெதாலா ஓடிப்போனுர்களென்றும் யிப்படிக்கெல்லாம் யெழுதி வந்தது. துரையவர்களுக்கு படிச்சு சொன்னுர்கள்.

ஒட்டகக்காறனும் சொன்னான். ஒட்டகக்காறனுக்கு அம்பது ரூபாயும் ரெண்டு கெஜமும் சகலாத்தும் வெகுமானம் குடுத்து பதில் காகிதமும் கொடுத்து மூபார்க்கு பாதி யெழுதி ஆற்காட்டுக் கோட்டை திருவண்ணாமலை கைபிரா வெடித்தனங்களும் வாங்கி சத்துருக்களை அடிச்சுத் துரத்திவிடச் சொல்லி யெழுதியனுப்பி விச்சதாய் சொல்லிக்கொண்டார்கள். துரையவர்களும் வெகு உச்சாகத்துடனே யென்னுடனே சொன்னார் நானும் அவருக்கு மோபாறக்குச் சொன்னேன்.

## 1753௵ அபிறேல்மீ 25௳ ஸ்ரீமுக௵ சித்திரைமீ 17௳ புதவாரம்

இத்தனாள் காலத்தாலே யேனத்துச் சலவைப் பிடவைப் பாருவையானபடியினாலே யேழுமணிக்கு கோட்டைக்குப்போய் முப்பத்தெட்டு கட்டுப்போட்ட சேதியும் சொல்லி கபுறுகளும் சொல்லியானவுடனே - மமுதல்லிக்கான் சிதம்பரம் போய்ச் சேர்ந்தானும் நம்முட முறாரிராயன் சுவார்களை ரெண்டாயிரம் சுவார்கள் மட்டுக்கும் போய் அவனை அப்பாலே போகவொட்டாமல் மடக்கிக்கொண்டிருக்கிறதாய் சேதி சொன்னார்கள் மெய்தானா வென்று துரையவர்கள் கேட்டார்கள் மெய்தானென்று சொல்லி தீவுக்கோட்டைக்கி கூலியாட்கள் நிமித்தியம் மனுஷர் போயிருக்கிறதாயும் சொன்னார்கள் யென்று சொன்னதுக்கு மெய்தானென்று துரையவர்கள் சொல்லி பின்னையும் சொன்னதென்னவென்றால் மமுதல்லிக்கான் திரிச்சிராப்பள்ளிக்குப் போற செலவுக்கு மேஸ்தர் யிட்டார்க்குவை (Mr. Starke)க் கேட்டதற்க்கு ரெண்டாயிரம் விராகனைக் குடுத்துப்போகச் சொன்னானும் யிதிலே யென்ன கிறுவாகத்துக்கு வரப்போகுது யென்று சொன்னார் யினிமேல் யிவர்களுக்கெல்லாம் போயின காலமானபடியினாலே பினி நசிச்சுக் கொண்டு வருவார்கள் யென்று சொல்லிப்போட்டு அனுப்பிவிச்சுக் கொண்டுயென் காசாக்கச்சேரியே வந்தேன்.

## 1753௵ அப்றீல்மீ 27௳ ஸ்ரீமுக௵ சித்திரைமீ 19௳ சுக்கிறவாரம்

இத்தனாள் காலத்தாலே யெட்டுமணி வேளைக்கி துரையவர்களண்டைக்குப் போய் கபுறு சொல்லியானவுடனே தோஸ்து மகம்மதும் கூடயிருக்கச்சே தோஸ்துமகம்மதைப்பார்த்து துரையவர்கள் மமுதல்லிக்கான் ஓடிப்போனானே யிவனும் யிங்கிலீசுக்காறர்களும் போனார்களே யிதுக்குள்ளே திரிச்சிராப்பள்ளியை நந்திராசா வாங்கிக் கொள்ளுவான் யிவனையும் துரத்துவான் யிதிலே நம்முட பவுன்சு கூடப்போய் நெருக்கினால் மத்தியே அகப்பட்டுக்கொண்டு சாகுறானோ யில்லையோ -- யென்றால் தஞ்சாவூரார் அனுகூலமானபடியினாலே தஞ்சாவூரிலேபோயி பூந்துக்கொள்ளுகிறானோ தெரியாதென்று சொன்னதுக்கு மமுதல்லிக்கானுக்கு கஷ்டகாலம் வந்தும் பதினஞ்சு நாளாச்சுது அதினாலே திருவதிக்கோட்டையிலே யிருந்தவன் ஓடினான் ஓடினப்பேரிலே -- வருந்தால் பொல்லாத காலமானபடியினாலே பத்துப் பதினஞ்சு நாளைக்குள்ளாக அவன் பேச்சு-சரிப்பட்டுப்போ

மென்றும் சொன்னதுக்கு யிப்படி கெட்டுப்போற காரியத்துக்கு மேஸ்தர் சாந்தரசுக்கு மேஸ்தர் - லோரென்சு (Mr. Saunders-Mr-Lawrence) தப்புந்தாறுமாய்ச் சொல்லி அவன் பேச்சைக் கேட்டுக்கொண்டு மேஸ்தர் சாந்தரசு கெட்டுப்போனான். யிந்த மேஸ்தர் லாரென்சு - மேஸ்தர் சாந்தரசுக்கு யிந்த யோசனை சொல்லி நடப்பிக்காவிட்டால் போனவரு - அவர்கள் சீமைகப்பல் வந்தபோது சண்டை பண்ணக்கூடவயில்லை யென்று யெழுதி வந்தபோதே மறுபடி யிந்த சேலிக்கே வராமல் விட்டு விடுவார்கள் மகுதல்லிக்கானும் ஓடிப்போயாகிலும் செத்தாகிலும் ஒரு வருஷமாய்ப்போம் அப்போயிந்த லொரென்சுவைத்தொட்டு நடந்தபடியினாலே யிந்தமட்டுக்கும் சென்றதுயென்றும் மேஸ்தர் சாந்தரசு ஒரு நாய்த்திருடன் சின்னமனுஷன் யினிமேல் தலையை ஒடைச்சுக் கொண்டு சாகவேணுமே யென்று மெத்த - நிந்திச்சுக் கோபமாய்ச் சொன்னார்.

அதுக்கு நான் சொன்னது முன்பின் ஆலோசனை பண்ணாமல் துடுக்காய் தப்புக்கெழுப்பு செலியூரமாய் தன்புத்திக்கு சும்மாய்த் தோணினபடிக்கெல்லாம் காரியாக்காரியம் செய்கிறகாரியம் தவிழ்க் காரியம் அறியாமல் நடத்துறவர்களுக்கெல்லாம் ஆக்கிரக்கு தன் தலையைத்தான் தானே ஒடிச்சுக் கொண்டு சாகத்தக்கதாக வருமென்று சொன்னதுமல்லாமல் அந்தப்படி அனேகம் யிடத்திலே யிதுவரைக்கும் நடந்திருக்குது யினிமேல் அனேகம் யிடத்திலே நடக்கத்தக்கதாக யிருக்குது யென்றுசொல்லி யிந்த மகுதல்லிக் கானும் சாந்தரசும் (Mr. Saunders.) தான் திருஷ்டாந்திரமா யிருக்கிறார்கள். இதுக்கெல்லாம் பெரிய திருஷ்டாந்தரம் நாசறு சங்குதான் யென்று சொன்னேன். மெய்தானென்று ஒத்துக் கொண்டு பறங்கிப்பேட்டையிலே யிருக்கிற வெள்ளைக்காறர் களுடனே உம்முட மனுஷன் ஒருத்தன யிருக்குறானே அவன் யிந்தச் சேதியொன்றும் யெழுதியனுப்பயில்லையா வென்று கேட்டார். யென் மனுஷன் அங்கேயேது பின் அமுல்காறனை வாங்கிப் போட்டு நீங்கள் வேறே அமுல் காறனை வைத்தீர்கள். அப்பால் மகுதல்லிக்கான் மனுஷர்களும் யிங்கிறேசுக்காறர் மனுஷர்களும் அமுல் பண்ணுகிறார்கள் யென் மனுஷனை வாங்கிப்போட்டு பதினெட்டு மாசமாச்சுதே யென்று சொன்னதின்பேரிலே மறு உத்தாரஞ் சொல்லாமல் யெழுந்திருந்து மேல் வீட்டின் பேரிலே போனார்கள். பிடவை பார்க்கிற சாலையிலே வந்தேன். தோஸ்து மகம்மது யென்கையில் அனுப்பிவிச்சுக்கொண்டு வீட்டுக்குப் போனான்.

இத்தனாள் பகலைக்கு மேலாக துரையவர்களழைப்பிச்சு திரிச்சிராப்பள்ளியை மயிசூரார் வாங்கிக்கொண்ட சேதி மகுதல்லிக்கான் சிதம்பரம் விட்டு அப்பால் கொள்ளிடத்தண்டை போகச்சே வந்தாப்போலேயும் அதைக்கேட்டு திரும்பவேணு மென்றும் மகுதல்லிக்கான் கூடலூர் பாரிசமாய் திரும்பினவுடனே முராரிராயன் சுவார்கள் ரெண்டாயிரம் குதிரை சுவார்களும்—கோணப்பறங்கி வகையிராவும் நம்முட பவுன்சும் போய் விழுந்து சின்னாபின்னமாயடிச்சார்கள். அதின் பேரிலே மகுதல்லிக் கான் பவுன்சு முறிஞ்சு சின்னாபின்னமாய் ஓடிப்போனார்கள்

மமுதல்லிக்கானும் ஒண்டிக் குதிரையுடனே ஓடிப்போய்விட்டான். பிறங்கிகள் சிறிது துப்பாக்கிகள் முதலானதுகள் நம்முடவர்கள் கையிலகப்பட்டது யென்று கூடலூரிலிருந்து யெழுதி வந்தது. நீர் ஏதாகிலுங்கேட்டதுண்டாயென்று கேட்டார். அது நானிந்த மட்டுக்கும் கேழ்விபட்டதில்லை யென்று சொன்னதுக்கு யிது மெத்த மெயி கூடலூரிலிருந்து வந்த சேதியானபடியினாலே யிது பொய்யல்ல வென்று துரையவர்கள் சொன்னார். அதுக்கு நான் சொன்னது கூடலூரிலிருந்து வந்த சேதியானபடியினாலே பொய் அல்லவென்று சொன்ன மாத்திரத்திலே துரையவர்கள் உச்சாகத்தின் பேரிலே மயிசூர் வைக்கில் முதலான பேர்களுக்கு யெல்லாம் மேலே யெழுதின சேதியைச் சொல்லி அனுப்பிவிச்சார். நானும் அனுப்பிவிச்சுக் கொண்டு பிறப்பட்டு யென் காசாக் கச்சேரியே வந்தேன்.

மதாம் அறுக்காறு வாயக்குட்டியென்கிற பாப்பான் மேலே யெழுதப்பட்ட தப்பு கபுறு கூடலூரிலிருந்து யெழுதி வந்துது யென்று சொல்லி துரை பெண்சாதிக்கும் துரைக்கும் சொல்லி நூறு ரூபாய் சுத்திக்கொண்டு போனானென்று அங்கேயிருக்கிற வர்கள் யெல்லாருஞ்சொல்விக்கொண்டார்கள் யென்று வந்து சென்னார்கள்.

## 1753ஹு அவ்றில்மீ 28உ ஸ்ரீமுகஹு சித்திரைமீ 20உ சனிவாரம்

அசனுதிகான் (Hasan-ud-din-Khan) வந்து சேர்ந்தான் இத்தனாள் நடந்த பூருவோத்திரமென்னவென்றால் போனஹு ஆனிமீ த்தையிலே திரிச்சிராப்பள்ளி சண்டையிலே மமுதல்லிக்கான் யிங்கிறேசுக்காறர் கையில் அகப்பட்டுக்கொண்ட நம்முட தாலூக்கு அசனுதிக்கானை அவர்கள் பிடிச்சுக்கொண்டுபோய் தேவனாம் பட்டணம் கோட்டையிலே காவல் பண்ணியிருந்தபடியினாலே யித்தனை நாளும் காவலிலேயிருந்து தப்பிச்சுக்கொண்டு நேத்து ராத்திரி சாமத்துக்குமேல் பிறப்பட்டு யிருபது நாழிகைக்கு அரியாங்குப்பம் வந்து சேர்ந்து யித்தனாள் சூரிய உதய வேளைக்கி குண்டு தாழைக்குள்ளேயிருக்கிற மேலு கிரிபண்டிதர் சாவடியே வந்து சேர்ந்து துரையவர்களுக்கு சொல்லி அனுப்பிவிச்சான். அந்தட்சணம் துரையவர்கள் யென்னை அழைச்சனுப்பிவிக்க நான் போனவிடத்திலே அசனுதிக்கான் தேவனாம்பட்டணத்துக் கோட்டையிலே காவலிலே யிருந்தவன் தப்பிச்சுக் கொண்டு வந்து மேலுகிரி பண்டிதன் சாவடியிலே யிருக்கிறானும் நீ போய் அழைத்து வாயென்று சொல்லி தந்தப்பல்லக்கு ஒன்று அசனுதிக்கானை யேறி வரச்சொல்லி குடுத்து யென்னை அனுப்பிவிச்சார். அந்தப்படிக்கு நான் பிறப்பட்டுப் போய் மேலுகிரி பண்டிதன் சாவடியிலிருந்த அசனுதிக்கானண்டைக்குப் போனேன். அவரும் எதிராக வந்து சலாம் பண்ணி ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு கண்ணீர் விட்டுக் கொண்டு தாபந்தப்பட்டார். அதுக்கு நான் நீர் கஷ்டப்படவேண்டி யிருந்தபடியினாலே கஷ்டப்பட்டீர். நல்ல காலம் வந்தபடியினாலே வந்து சேர்ந்தீர்யென்று உபசரணையாய் சொல்லி உளுக்காந்தோம்.

அப்பால் அசனுதிக்கான் யென்னுடனே நீங்கள் யெங்களுக்கு துரைகள்கும்பினீருக்குபெரிய துபாசி அதிகாரஸ்தர் ஆனபடியினலே நான் தப்பிச்சுக்கொண்டு வந்த பூருவோத்திரம் உங்களுடனே சொல்லுகிறேன் கேளுங்கோள் யென்று சொன்னதென்ன வென்றால் நான் தேவனம்பட்டணத்துக் கோட்டையிலே காவலிலே யிருக்கச்சே யெனக்கு சாப்பாடு கொண்டு வருகிறதற்கு ஒரு சின்னப் பெட்டி ஒன்று செய்விச்சு அந்தப்பெட்டியிலே யிப்போ ஒரு மாசமாய் சாப்பாடு கொண்டு வரவும் மறுபடியும் அந்தப் பெட்டியை வெளியே கொண்டு போயும் யிப்படியாக வாடிக்கை பண்ணிக் கொண்டு சந்திரேர் காற்குறவர்களும் யிந்த வாடிக்கை அறிஞ்சு சும்மாயிருக்கத்தக்கதாக அவர்களுக்கு நூறும் யிற நூறும் அன்பதும் நாற்பதும் முப்பதும் யிருபதுமாக ஏழாயிரம் ரூபா மட்டுக்கும் குடுத்து சாப்பாடு கொண்டு வருகிற பெட்டிக்கு போக வரத் தடையில்லாமல்திட்டப்படுத்தி அப்பால் அஞ்சாறு நாளாய் தலே நோவுதென்று சொல்லி நாலிருக்கிற கொட்டடிக்கு விட்டிருக்கிற சன்னலுகளையெல்லாம் சாத்தச் சொல்லி நானும் நாலைந்து நாளாய் நன்றாய் சாப்பிடாமல் சரீரத்தை ஒடுக்கி அப்பால் நேத்து ராத்திரி சாமத்துக்கு அந்தக் கொட்டடியிலே என்னண்டை வாடிக்கையாயிருக்கிற கிசுமத்துக்காறனை நான் படுத்துக் கொள்ளுகிற கட்டிலின் பேரிலேயிருந்து யெனக்கு கால் குத்துகிறாப் போலேயும் நான் அவ்விடததிலே படுத்துக்கொண் டிருககிறாப் போலேயும் மாய பாவனை பண்ணி அந்தக் கிசுமத்துக்காறனைமாத்திரம் வைத்துப்போட்டு நான் அந்தப் பெட்டியிலே உளுக்கார்ந்துக்கொண்டு யெப்போதையும் போலே அந்தப்பெட்டியைக் கொண்டுவருகிறவனை யெடுத்துக்கொண்டு வெளியே போகச்சொன்னேன் அப்போ பீறங்கி போட்டார்கள் சகுனம் நன்றாயிருக்குதென்று பெட்டியை யெடுக்கச் சொன்னேன். அவனந்தப்படிக்கித்தானே பெட்டியை யெடுத்துக் கொண்டு காவல் கூடம் விட்டு வெளியே வந்தான். அவ்விடத்திலே யிருக்கிற சந்திரேர் உள்ளே கிசமத்துக்காறன் கட்டிலின் பேரிலே கிசுமத் துக்காறன் கால்குத்திக்கொண்டிருக்கிற சாடை பார்த்து கதவைச் சாத்தி சாவிப்போட்டுக் கொண்டான். அப்பால் பெட்டியை எடுத்துக்கொண்டு வரச்சே கோட்டைவாசற்படியண்டையிலிருக்கிற சந்திரேர்கண்டு யேதுடா பெட்டி யென்று கேட்டான். அசனுதிக் கானுக்கு நித்தியம் சாப்பாடு கொண்டுபோறவனல்லவாயென்று சொல்லிப் போட்டுக் கொண்டு வந்து விட்டான் அதின்பேரிலே கால்நாழிகை வழி வந்தாப்போலே பெட்டியை யிறக்கி அவிழ்க்கச் சொல்லி நான் வெளியே வந்து நானும் அவனுமாய் பிறப்பட்டு சமுத்திரக்கரைவழியாய்வந்து ராத்திரி யிருபது நாழிகைக்கி அரியாங்குப்பம் வந்துசேர்ந்து பொழுதுவிடிஞ்சவுடனே யிவ்விடத் துக்கு சேர்ந்து சேதிசொல்லி அனுப்பிவிச்சேன்யென்று சொன் னன். அவனுக்கு நான் சொன்னது யெந்தப்படிக்காகிலும் நீர் தப்பிவந்துசேர்ந்தீரே அது பிறதானமே அல்லாமல் மத்தப்படி யென்னயிருக்குது யென்று சிறிது உபசார வார்த்தைகளையும் சொல்லி வெளியே பிறப்பட்டு வர யெழுந்திருந்தவுடனே ராப்பய்யபிள்ளை மதனந்தபண்டிதன் வகையிராக்கள் மதாம் உத் தாரத்தின் பேரிலே வந்தார்கள். அப்பால் அவர்களுடனேயும் சன ஷேபமாய்ப் பேசினப்போலே அசனுதிகானுடனே பாப்பய்ய பிள்ளை சொன்னது சீமைபூமி காறு பாறு சமஸ்தமும் யிறக்குது

யிதெல்லாம் உம்முது. நான் நீரெப்படி சொன்னால் அப்படிக் கேட்டுக் கொண்டு நடந்து கொள்ளுகிறவனென்று சொன்னதுமல்லாமல் மதனூர்தபண்டிதனுடனே மதாம் சொல்லி அனுப்பிவிச்சபடிக்கி அவன்ரகசியமாய் உம்மை துரையவர்களுடனே மயிசூரார் திரிச்சிராப்பள்ளியை வாங்கிக் கொண்டார்களென்றும் மமுதல்லி கான் ஓடிப்போய் விட்டானென்றும் தேவனாம்பட்டணத்திலே சொல்லிக்கொள்ளுகிறதாய் சொல்லச்சொன்னபடிக்குச் சொன்னான் அப்பால் அனைவரும் பிறப்பட்டு வந்தோம் பத்தரை மணிக்குத் துரை அவர்கள் பேட்டி ஆச்சுது இருபத்தொரு ரூபாய் நதிரும் வைத்தான். அப்பால் தன்னுடைய பூருவோத்திரமெல்லாம் மேலே யெழுதியிருக்கிறபடிக்குச் சொல்லிக்கொண்டான். அதுக்குத் துரையவர்கள் "சிறிது உபசாரமான வாற்த்தையாய்ச் சொல்லி தப்பித்துக்கொண்டு வந்ததுக்கு மெத்தவுஞ் சந்தோஷப்பட்டு ஒரு சிறோப்பாவும் வெகுமானம் பண்ணினார். அப்போ யெழு பிறங்கி போட்டார்கள். அப்பால் தேவனாம்பட்டணத்திலே யென்ன சேதியென்று கேட்டார். மயிசூரார் திரிச்சராப்பள்ளிக் கோட்டை கட்டிக் கொண்டுவிட்டார்களென்றும் மமுதல்லிக்கான் தெற்கே கொள்ளிடத்துக்கரையிலே நம்முடவர்களுடனே சண்டை போட்டு நறுவாகமில்லாமல் ஓடிப்போய்விட்டானென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள் யென்று சொன்னான். அதின்பேரிலே சந்தோஷப்பட்டு மதாமண்டைக்குப்போகச் சொன்னார். அப்பால் மதாமண்டைக்கு அசனுதிக்கான் போய் பேட்டி பண்ணிக்கொண்டு நதிர் வைத்தான். அங்கேயும் சிறிதுநேரம் பேசியிருந்துப்போட்டு அனுப்பிவிச்சுக் கொண்டு சந்தாசாயபு மகன் ரசாசாயபு வீட்டுக்குப் போய் அவரை மாத்தம் புரிசி விசாரிச்சுப்போட்டு தன் வீட்டுக்குப் போனான்.

அப்பால் துரையவர்கள் யென்னை அழைப்பிச்சு பிசுப்பு கூடயிருக்கச்சே அசனுதிக்கான் யிங்கிறேசுக்காறரை மோசம்பண்ணிப் போட்டு வந்தானேயென்று சொன்னார். யிவன் வந்தது ஆச்சரியமல்ல ஆனாலிப்போ மேஸ்தர் சாந்தரசு சென்னப்பட்டணம் கோவர்னதோருக்கும் மேஸ்தர் யிஷ்ட்டார்க்கு (Mr. Stark) தேவனாம்பட்டணத்து கோவற்னதோருக்கும் ஒவ்வாமல் யிருக்குது. அப்படியிருக்கிற வேளையிலே யிவின் வந்துவிட்டபடியினாலே மேஸ்தர் சாந்தரசு மனதிலே மேஸ்தர் யிஷ்ட்டார்க்கு (Mr. Stark) லக்ஷாந்திரங்கள் வாங்கிக்கொண்டு விட்டுவிட்டானென்று தோணும் அதினாலே இருவருக்கும் பிறபலதிவேஷம் வரும் இதல்லாமல் மமுதல்லிக்கான் மனதிலேயும் லக்ஷாந்த்ரங்கள் நபுரை நான் ஒப்பித்திருந்தால் தன்னை வஞ்சனைப்பண்ணி விட்டுவிட்டார்களென்று தோணும்.

அதினாலே இங்கிறேசுக்காறருக்கும் மமுதல்லிக்கானுக்கும் யிட்டோட்டு வரும் யித்தனைக்கெல்லாம் வைத்துப்போட்டு வந்தானென்றும் யிதல்லாமல் உங்களுடைய யோகாதிசெயமென்றும் சொன்னேன். அதுக்கு துரையவர்கள் சந்தோஷப்பட்டு றங்கப்புல்லே சொல்லுகிறது மெய்யென்று பிசுப்புடனே சொன்னார் அவரும் மெய்தானென்று சொன்னார்.

இத்தனாள் தேவனாம்பட்டணம் கோட்டையிலிருந்து கோன்சேல்க் காகிதம் துரையவர்களுக்கு வந்தது. அந்தக் காகிதத்திலே திருவீதிக் கோட்டையையும் மமுதல்லிக்கான் யெங்களுக்கு யெழுதி கொடுத்திருக்கிறான். கோட்டை யெங்களுது யெங்கள் ராசாவுடைய நிசான் போட்டிருக்குது. அப்படி யிருக்கச்சே உங்கள் பவுன்சு வந்து கோட்டையின் பேரிலே யெப்படி சண்டை பண்ணுவார்கள் என்று முன்னாலே யெழுதின துக்கு துரையவர்கள் அந்தக் கோட்டை யெங்கள் வசமாய் யெங்கள் ராசாவுடைய கொடி போட்டிருக்கச்சேயும் மமுதல்லிக் கானும் நீங்களும் பலவந்தமாய் கட்டிக்கொண்டு யெங்கள் கோட்டையை வாங்கிப்போட்டு உங்கள் கோட்டையைப் போட்டுக் கொண்டீர்களே அல்லாமல் மத்தப்படி அல்லவே. அப்படி யிருக்க கோட்டை யெங்களுதென்று நீங்கள் யெழுதக்கவை யென்ன யென்றும் அது ஞாயமல்லவென்றும் மறுபடி துரையவர்கள் யெழுதினதுக்கு மறுபடியும் அவர்கள் யென்ன யென்ன யெழுதி னார்களோ தெரியாது அந்தக் காகிதத்தைப் பார்த்துக்கொண்டு காகிதங்கொண்டு வந்த சோபுதாரனை குண்டு தாளைக்கு வெளியே கொண்டு போய் விட்டுவிடச் சொன்னார் அந்தப்படிக்குக் கொண்டு போய் விட்டு விட்டார்கள்.

இத்தனாள் சாயங்காலம் மயிசூர் வைக்கீல் வெங்கிட்ட நாறணப்பய்யன் துரையவர்களண்டைக்கு வந்து மமுதல்லிக்கான் தஞ்சாவூரார் ஆசராவின் பேரிலே சோழமண்டலத்து வழியாய் பந்தாநல்லூர் போய்ச் சேர்ந்தான். அப்பால் திரிச்சிராப்பளிக்கும் போவான் யெங்களவர்களும் திரிச்சிராப்பள்ளிக் கோட்டையை சுத்திக்கொண்டுதான் யிருக்கிறார்கள். யிங்கே யிருந்து நம்முடைய பவுன்சும் துடந்துகொண்டு போறார்கள் யென்று சொன்னான். அதின் பேரிலே துரையவர்கள் மனது சமாதானமில்லாமலிருந்தார். பெண்சாதி சொல்லியிருக்கிற கபுறு திரிச்சிராப்பள்ளி கோட்டை மயிசூரார் கட்டிக்கொண்டார்களென்று மமுதல்லிக்கான் ஓடிப்போனானென்றும் சொல்லியிருக்கிறது பொய்யென்று போனபடியினாலே விசாரமாயிருந்தார்.

இத்தனாள் சாயங்காலமான ஆறரை மணிக்கு மழையும் பெருங் காத்தும் யெடுத்து ரெண்டு நாழிகை நேரம் காத்து நன்றாயடித்துது அப்பால் மழை தூத்தலாயிருந்தது. அங்கங்கே ரெண்டு மூன்று யிடியும் விழுந்தது.

## 1753௵ அப்ரீல்மீ 29௨ ஸ்ரீமுக௵ சித்திரைமீ 21௨ ஆதிவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போயி கபுறுகள் சொல்லி ஆன பிற்பாடு திரிச்சிராப்பள்ளி சேதி யென்ன வென்று கேட்டார். மயிசூரார் கோட்டையை வாங்கிக்கொண் டார்களென்கிறது பொய்யாய்ச் சொல்லுகிறார்கள் யென்று சொன்னேன் அப்படித்தானிருக்கும் யென்று சொன்னார். அப்பால் அசனுதிக்கான் வந்த சேதியும் யிங்கிரேசுக்காறர்களுக்கும் மமுதல் லிக்கானுக்கும் யிட்டோட்டு வருமென்கிறதுமாகப் பேசியிருந்து யென் கச்சேரியே வந்தேன்.

இத்தனாள் முன் கொச்சிம் சினத்து பிஷப்புவைக் கொண்டு போய் சினத்திலே விட்டுப்போட்டு வந்தால் யேத்திக்கொண்டு போன சுலுப்பு கப்பித்தானுக்கு கப்பல் கப்பித்தான் உத்தியோகம் குடுக்கிறோமென்று துரையவர்கள் சொல்லியிருந்தார அவனுமப் படியே பாதிரிமாரை யேத்திக்கொண்டு போய் சினத்திலே விட்டு வந்தானே அந்த சுலுப்புக்காறனை மறுமடியும் சினா-மெக்காவுக்குப் போகச்சொன்னார். அதுக்கு அவன் யெனக்கு கப்பல் கப்பித்தானிடம் குடுக்கிறோமென்றும் சொன்னீர்களேயென்று கேட்டதாகவும் நல்லது யிந்த சபுறு போனபிறகு அப்பாலாகுது யென்று சொன்னாராம் அதுக்கு நீங்கள் சொல்லுகிறதேயில்லை சொன்னால் அந்தப்படி நடப்பிச்சுத் தரவேணுமென்று கேட்டதாகவும். அதுக்குத் துரையவர்களுக்கு கோபம் வந்து நாயே நான் சொன்னபடி கேழ்க்க வேணுமேயல்லாமல் யெதுத்துப் பேசுகிறாயாவென்று கோபம் பண்ணி அப்பாலே போகச்சொன்னதாகவும் சேதி சொன்னார்கள்.

இத்தனாள் துரையவர்கள் சட்டளையிட்டது கும்பினீர் உத்தியோகஸ்தராயிருக்கிற வெள்ளைக்காறர் சோபன்ஷாம்காறர் மாத்திரம் கத்தி கட்டுகிறதே அல்லாமல் மத்தப்பேர் கட்டத் தேவையில்லையென்று தீத்ததாய்ச் சொன்னார்கள்.

இத்தனாள் அசனுதிக்கான் துரையவர்களுடனே நீங்கள் ஆற்காட்டு சுபாவை முறுத்துசல்லிக்கானுக்கு குடுத்ததென்ன அந்த சுபை யெங்கள் வசம் பண்ணினால் அந்தப்பணம் நாங்கள் கொடுக்க மாட்டமா வேலூருக்கில்லா யென்பேருக்கு சலாபத்துசங்கு-பர்மானாவும் யிதாயித்து மொகதின்கான் பர்மானாவும் யிருக்குது யென்றும் சொன்னதுக்கு துரையவர்கள் நல்லது உனக்கு விட்டிருக்கிற சேத்துப் பேட்டுக் கோட்டையும் சாகீரையும் யிந்த வேலைக்கி உன்மனுஷரை யனுப்பி சபித்திபண்ணச் சொல்லி உத்தாரம் கொடுத்தார் அப்பால் பிற்பாடு போனான். துரையவர்கள் தோஸ்துமகம்மது மாரிபத்திலே அசனுதிக்கானண்டைக்கு . ருசவட்டம் விட்டார். அந்தசாடை பார்த்தால் சிறிது பணங்காசு கேழ்க்கச் சொன்னதாய் தோததிச்சுது.

## 1753௵ அப்றீல்மீ 30௳ ஸ்ரீமுக௵ சித்திரைமீ 22௳ சோமவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போய் சுபுறு சொல்லி ஆனவுடனே மமுதல்லிக்கான் கொள்ளிடங் கடந்து போன சேதி மெயிதானா வென்று கேட்டார். மெய்தான் என்று சொன்னேன். திரிச்சிராப்பள்ளியும் மயிசூரார் வசம் ஆனதில்லையாம் யென்று கேட்டார். மெயிதானென்று சொன்னேன். யெத்தனைப் பொய்யைச் சொன்னார்களென்று சொன்னார். மராட்டியர்களைத் தொட்டு வழிகள் போக்குவரத்து யில்லாததைத்தொட்டு சனங்கள் சொன்ன பேச்சுக்களை கேட்டு அவனவன் சரிப்போன படிக்கெல்லாம் சொல்லுகிற படியினாலே ஆக்கீர் ஊர்ச்சிதமாய் கேழ்க்கிற பேச்சுக்கும் அதுக்குமுன் கடைத்தெரு சேதியாயி கேழ்க்கிற பேச்சுக்கும். வித்தியாசமிருக்குமென்று சொன்னேன் யிதிலே தெற்கே கப்பல்காணுதென்று

சொன்னார்கள் மேலே பார்க்கப் போனார்—நான் பிடவைபார்க்கிற சாலையே வந்து முசே மீராவும் நானும் அலங்கத்தின் பேரிலே போய் பார்த்த விடத்திலே சீமைக்கப்பலென்று சொன்னான். அதிலே ரெண்டொரு வெள்ளைக்காறர் சீமைகப்பல் சீனத்துக்குப்போயிருந்து வந்தும் யெக்கிப் போச்சுதே—லவிலிபிறிஷி (La Villeflist) யென்கிற கப்பல் யெதிர்காற்றினாலே மயே பிடிக்க (Mahe) மாட்டாமல் மறுபடி வந்துவிட்டு தென்று சொன்னார்கள். யிதிலே துரையவர்கள் அழைச்சனுப்பிவிக்கப் போனவிடத்திலே வெள்ளியத்துக்குப் பறங்கி பேட்டைக்கி யெழுதி அனுப்பிவிச்ச சேதி வந்ததா வென்று கேட்டார். வந்தது நாற்பத்திரெண்டு விராகன் போன வருஷம் வித்தார்களாம். யிந்தவருஷம் நாற்பத்தஞ்சு விராகன் சொல்லுகிறார்களாம் யென்று சொன்னதுக்கு மெத்த உசத்தி முப்பத்தஞ்சு முப்பத்தாறு மட்டுக்கும் யெழுதியனுப்பு யென்று சொன்னார் நல்லதென்று சொன்னவுடனே யிப்பவருகிறது லவில்பீஷ் (La Vill flix) என்கிற கப்பலானபடியினாலே வெள்ளியஞ்சுறுக்கிலே வரவேணும் யென்றும் சொன்னார். அப்பால் அனுப்பிவிச்சுக்கொண்டு யென்கச்சேரியே வந்தேன். லவில்பீஷி (La Villeflix) யென்கிற கப்பல் பதினொரு மணிக்கு வைத்துப் பிடித்து பதினொரு பீரங்கிப்போட்டான்.

## 1753௵ மாயிமீ 2௨ ஸ்ரீமுக௵ சித்திரைமீ 24௨ புதவாரம்

இந்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போய் கபுறு சொல்லியானவுடனே துரையவர்கள் மழுதல்லிகான் தீவுக்கோட்டை யிலிருக்கிறானென்று சொல்லுகிறார்கள் மெய்தானாவென்று கேட்டார். சிறிது பேர்கள் அப்படியும் சொல்லுகிறார்கள் சிறிது பேர்கள் தஞ்சாவூரண்டையிலே திருவீதி தங்காசாலையென்று கிறுமம் யிருக்குதாம் அங்கே போயி யிறங்கி யிருக்கிறானென்றும் சொன்ன துக்கு ஒருத்தரும் நிஷக்கறுதையாய்ச் சொல்லுவாரில்லை, யென்று சொல்லிக்கொண்டு வேசடையாய் மேல் வீட்டின் பேரிலே போனார். அங்கே கிட்ட நிற்கிற பேர்கள் சொன்னது சம்பளங்கொடுக்கிற தல்லவா பணம் விஸ்தாரமாய் பிறப்படுகிறதாச்சுதே—அதினாலே நேத்தயப்பிடிச்சு வெகு விசனத்துடனே யிருக்கிறாரென்று சோபுதாரர் மைத்தப்பேர் கிட்டயிருக்கிற பேர்கள் சொன்னார்கள். அதைக் கேட்டுக்கொண்டு அப்பால் பிடவை பாற்குறசாலையே வந்தேன் மசுக்கரைக்கும் (Mascareigne) பத்துக்கட்டு மாத்திரம் காங்கு சதிரங்கப்பட்டணமிருந்து வந்தது. கட்டுப்போடுகிறார்கள் அதைப்பார்த்து சின்னதுரையுடனே யிதுவும் சுறுக்கிலே கஞ்சி போட்டு யிருக்குது. அரைச்சாயம் காணுது பிடவை அகலக்கட்டை முழக்கட்டை யிழை வெகு சித்திழையின் பேரிலே வெலுத்தி யிதை யெப்படி கட்டுப்போட்டுக் கொள்ளுகிறீர்கள் யென்று கேட்டதுக்கு பெரியதுரை அவர்களுக்கு யிந்த சேதியைச் சொன்னதுக்கு கட்டுப்போட்டுக் கொள்ளச் சொல்லி சொன்ன படியினாலே யென்ன செய்கிறது. போட்டுக் கொள்ளுகிறேனென்று சொன்னார். நல்லதாச்சுதென்று சொல்லிப்போட்டு யென்கச்சேயே வந்தேன். சேக்கசேன் முராரிராயன் தண்டுக்குப் போனான்.

இத்தனள் காலத்தாலே உதிச்சு அஞ்சுநாழிகைக்கு திருவீதிக் கோட்டையிலே யிருக்கிற யெண்ணூறு பேரிலே இங்கிரேசு சொலுதாதுகள் யிறுநூறுபேரும் முன்னூறுபேர் சிப்பாயிகளும் பஞ்சலோகம் வாத்த பீரங்கி வொன்று யிழுத்துக்கொண்டு நம்முடைய பிரான்சுக்காறர் தளத்தின்பேரிலே சண்டை பண்ண வந்த விடத்திலே நம்மடவர்கள் நன்றாய் சண்டைக்கி வந்த சத்துருக்களை தம்பி பொஞ்சாபிச்சு அடிச்சவிடத்திலே சத்துருக்கள் பறு செய்யப்பட்டு நூறுபேர் இங்கிரேசுக்காறர் சொலுதாதுகள் நம்மடவர்கள் கையில் அகப்படடுக் கொண்டார்கள் மத்த நூறு பேரிலேயும் சிறிது பேர் செத்தார்கள் சிறிது பேர் காயப்பட்டவர்களும் ஓடிப்போனவர்களும் சிப்பாயிகளிலே செத்தவர்களும் காயப்பட்டவர்களும் ஓடிப்போனவர்களும் போக யிருபது முப்பது பேர் அகப்பட்டவர்களைக் கைகளை வெட்டி அவர்களுடைய கழுத்திலே கட்டிப்போகச் சொன்னதாகவும் அவர்கள் கொண்டு வந்த பீறங்கியை பிடிச்சுக் கொண்டுவிட்டதாகவும் அப்போ தானே திருவீதிக் கோட்டை லக்ஷைப்பிடிப்போமென்றால் யேணிகள் ஆசராயில்லாததைத் தொட்டு மோகுப்பு ஆச்சுதென்றும் இப்படியாகச் செயமான சமாச்சாரம் – முராரிராயன் துரையவர்களுக்கு காகிதம் யெழுதி சத்துருக்கள் கையிலே பிடிச்சுக்கொண்ட பீறங்கியும் தனக்குக் கொடுக்கவேணுமென்றும் யெழுதி சுவார் நிசுவாரையும் பயணம் பண்ணி அனுப்பினதைப் பகல் நாலரை மணிக்கு வந்து சேர்ந்து துரையவாகளுக்கு காகிதமும் கொடுத்தான். அந்தக் காகிதம் துரையவர்கள் பார்த்துக்கொண்டு வெகு சந்தோஷப்பட்டு முராரிராயனுக்கு பதில் காகிதமும் யெழுதி பீறங்கியும் யெடுத்துக்கொள்ளச் சொல்லி யெழுதி வந்த சுவார் நிசுவாருக்கு முப்பது ரூபாயும் ஒரு சாலுவையும் ஒரு பாகையும் வெகுமானம் கொடுத்துபோகச் சொன்னதாய் அந்த சுவார்நிசுவார் யென்னண்டைக்கு வந்து சேதி சொன்னன். அவனுக்கு நான் ரெண்டு கிசம் பச்சை சகலாத்து வெகுமானம் குடுத்துபபோகச் சொன்னேன்.

இத்தனள் சவாபாசிராயன் துரையவர்களுக்கு முசபர்க்கான் காகிதம் அவர் வீட்டுக்கும் வந்துதென்றும் யிப்போ பாசிராயன் ஹேலலன்னூறு (Halehouru) யென்கிற இடத்திலே யிருக்கிறது யென்றும் அப்பால் சத்தாராவுக்கும் சிலிதாம்சிலியாய்ப் போறார்கள் யென்றும் யெழுதி வந்ததாய்ச் சொன்னர்கள்.

இத்தனள் காலத்தாலே திருவீதி சண்டையிலே பிடிச்ச யிங்கிரேசு சொலுதாதுகள் யிருபத்தாறு பேர்களையும் மூணுபேர் ஒபிசியால்மார்களையும் காவல் பண்ணி யிவ்வடத்துக்கு அனுப்பிவிச்சார்கள் சாயங்காலமான ஒரு நாழிகைக்கு வந்து சேர்ந்தார்கள் காவலிலே வைக்கச்சொல்லி உத்தாரமாச்சுது.

### 1753ஹு மாயுமீ 3உ ஸ்ரீமுருகஹு சித்திரைமீ 25உ குருவாரம்

இத்தனள் காலத்தாலே துரையவர்கள் கோயிலுக்குப்போய் வந்து கபுறு சொல்லியானவுடனே திருவீதிக் கோட்டைகளில் யிருந்தவர்கள் நூறு வெள்ளைக்காறர்களும் நானூறு சிப்பாயிகளும்

ஒரு பீறங்கியுடனே பிறப்பட்டவர்களை நம்முடவர்கள் பிடிச்சுக் கொண்டு வெள்ளைக்காறர்களில் அன்பது பேரை வெட்டிப்போட்டு விட்டார்கள். சிப்பாயிகளையும் யிறநூறு பேர்களையும் வெட்டிப் போட்டார்கள் யிருபத்தஞ்சு பேர் வெள்ளைக்காறர்களை ஒப்பிசியால் வகையிராக்களைப் பிடிச்சு விட்டார்கள் யிதல்லாமல் பீரங்கிகளும் நானூறு சிப்பாயிகளுடைய துப்பாகிகளும் நம்முடயவர்கள் கைவசம் ஆச்சுது. திருவீதிக் கோட்டையிலே வெள்ளைக்காறர்கள் அன்பது பேர்களும் சிப்பாயிகள் யிறநூறு முன்னூறுபேர் யிருக்கிறார்கள். அவர்களையும் பிடிச்சுக்கொண்டு கோட்டையையும் பிடிச்சுக் கொள்ளுவார்கள். அந்தச் சேதி யிப்போ வருமென்று சொன்னார். அப்படிக்கித்தான் நானும் கேழ்விப்பட்டேன் யென்று சொல்லி பேசிக்கொண்டிருக்கச்சே சீர்மைக்கப்பல் சீனத்துக்குப்போய் வந்த லில்பீஷி (La-Villeflix) யென்கிற கப்பல் கப்பித்தான் முசேசெல் (Mr. Selle) யென்கிறவன் வந்து துரையவர்களுடனே தன்னுடைய பத்துப்பாரம் படிக்காறமும் முப்பது நாற்பது பாரம் பறங்கிசக் கையும் கொஞ்சம் பிங்கானும் இருக்குது ஆறும் கொள்ளுவாரில்லை யென்று சோனனதின்பேரிலே யென்னைப்பார்த்து கும்பினீர் வர்த்தகருடனே சொல்லி யெடுத்துக்கொள்ளச் சொல்லென்று சொன்னார். அப்படியே சொல்லி யெடுத்துக்கொள்ளச் சொல்லு கிறேனென்று சொன்னேன். அப்பால் அவர்கள் பேசியிருந்தார்கள் நான் யென் காசாக்கச்சேரியே வந்தேன்.

மமுதல்லிக்கான் நல்லூர் சமாச்சாரம் இத்தனை கேழிவிப்பட்ட சேதியாவது யென்னவென்றால் மமுதல்லிக்கான் கும்பகோணத்தி லிருந்து ஆயிரம் இங்கிரீசு சொலுதாதுகளும் அய்யாயிரம் பேர் பாறுக்காறுகளும் பதினெட்டுப் பீறங்கியுடனே பிறப்பட்டுப்போய் திரிச்சிராப்பள்ளிக் கோட்டை ஓரத்திலே யிறங்கியிருந்த மயிசூரார் ட்டாணுவின்பேரிலே போய் விழுந்து சண்டை பண்ண விடத்திலே அவர்களுக்கும் மமுதல்லிக்கானுக்கும் அஞ்சு நாழிகை நேரம் நல்ல சண்டையாய் அப்பால் மயிசூரார் பின்வாங்கி சீரங்கம் போய் சேர்ந்தார்கள் யென்றும் அப்பால் மமுதல்லிக்கான் தன் பவுன் சுடனே கோட்டையோரமாயிறங்கி யிருக்கிறானென்றும் யிவ்விடத்தி லிருந்து மமுதல்லிக்கானை துரத்திக்கொண்டுபோன நம்முட தானூக்கு முராரிராயன் பவுன்சு ஆயிரத்தன்னூறு குதிரையும் சறுதார் பாளாசிகொறபடானும் மானோசி கொறபடானும் பின் துடந்துக்கொண்டுபோய் மயிசூரார் நல்லூர் சேர்ந்தார்கள். யென்றும் பின்னையும் யிவ்விடத்திலிருந்துபோன கோணப்பறங்கி யும் யிறநூறுபேர் வெள்ளைக்காறரர்களும் ஆயிரம்பேர் பாறுக் காறர்களும் (Foot-Soldiers) ஆறு பீரங்கியுடனே கொள்ளிடக் கரையிலேதானே யிறங்கியிருந்து கொண்டு சிதம்பரத்தின் பேரிலே சண்டை போடுகிறார்கள் யென்று சேதி கேழ்க்கப்பட்டுது. திருவீதிக் கோட்டையின்பேரிலே முராரிராயன் பவுன்சு தமாமும் பிறான்சுக் காறர் பவுன்சு தமாமும் அசனுதிகான் கூடப்பிறப்பட்டு கோட்டை நேராக யிறங்கி நல்ல சண்டை பண்ணுகிறார்கள் யென்றும் ஒரு நாழிகை அளவிலே கோட்டையை வாங்கிகொள்ளு வார்கள் யென்று சேதிகேழ்க்கப்பட்டுது. ராத்திரி யெட்டுமணிக்கு பாப்பய்யபிள்ளை தண்டிலேயிருந்து வந்துசேர்ந்தான்.

1753௵ மாயுமீ 5௳ ஸ்ரீமுகௗ௵ சித்திரைமீ 27௳ சனிவாரம்

இத்தனாள் சாயங்காலம் அசனுதிக்கான் முராரிராயனண்டைக்குப்போயிருந்தவன் வந்து துரையவர்களைக்கண்டு பேசி வீட்டுக்குப்போனான்.

முராரிராயன் அசனுதிக்கானுக்கு ஒரு சின்ன ஆனையும் சிரோப்பாவும் வெகுமானம் கொடுத்து காரியசந்தற்பங்களும் சொல்லி அனுப்பினானென்று சொன்னார்கள்.

இத்தனாள் ராத்திரி திருவீதிக் கோட்டையின் பேரிலே சண்டை பண்ணுகிற நம்முட பவுன்சுக்கு அனுப்புறதுக்கு நூத்தம்பது ராத்தல் போம்பும் யிருபது ராத்தல் குண்டும் பதினெட்டு ராத்தல் குண்டு ஆளுந்தலையிலே அனுப்புறது போதாமல் துரையவர்கள் தம்முடைய காசா பெரிய ஆனையுள்பட உள்ள ஆனைகள் றசாசாயபுவினுடைய ஆனைகள் பேரிலேயும் பின்னையும் ஊரிலே உண்டானவர்களுடைய ஆனைகள் பேரிலேயும் யெல்லாம் குண்டுகள் போட்டு இத்தனாள் ராத்திரி ஒன்பது மணிக்கு தண்டுக்கு அனுப்பிவிச்சார்கள்.

1753௵ மாயுமீ 6௳ ஸ்ரீமுகௗ௵ சித்திரைமீ 28௳ ஆதிவாரம்

ஆள்கள் பிடிக்கிறதும் மருந்துகுண்டுகள் போம்புகள் வகையிரா சாமானுகள் தணக்கு அனுப்புறவேலை ஒன்று தவிர மத்தபடி ஊரிலே பின்னை வொரு வேலையில்லை யெல்லாரும் தூங்குகிறார்கள் என்று சனங்கள் சொல்லிக்கொள்ளுகிறார்கள்.

1753௵ மாயுமீ 7௳ ஸ்ரீமுகௗ௵ சித்திரைமீ 29௳ சோமவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப்போய் யேமுறைமணி வேலைக்கு கபுறு சொல்லி ஆனபிற்பாடு கொச்சிம் சீனுவுக்கு சிகப்பு சாயம் போடச்சொல்லிச்சொன்ன ஒர்கண்டியும் செல்லாவும் ஆச்சுதாவென்று கேட்டார்.

இன்னம் ஒருமாசம் செல்லும் யென்று சொன்னதுக்கு யிதுக்குள்ளே கப்பல் போயிவிடும் கவையில்லை யென்று சொன்னார். சேலத்துப்பிடவை வரயில்லையோ யென்று கேட்டார். மமுதல்லிக்கான் திருவீதி விட்டு ஓடிப்போன பிற்பாடு யெழுதியனுப்பினது வழியிலே மராட்டியர்கள் மனுஷர்களை பிறப்பட ஒட்டுகிறதில்லை கண்டவனைப் பரிச் சேதமாய் வெட்டிப் போடுகிறார்களானபடியினாலே போக்குவரத்து மனுஷர் போறதும் வாரதும் வெகு பிரயாசையின் பேரிலே பிராணன் போய்விட்டுதென்று நீத்துக்கொண்டு பே ரபடியினாலே

சிறிது தூரம் போய் ஒரு போக்கைச் சொல்லிப் போட்டு ஊரே வந்து விடுகிறார்கள் அப்படி அவர்களும் வரச்சே நாங்களும் கூப்பிட்டு அனுப்பச்சே போய்ச் சேர்ந்து சேதி வருகிறதுக்கு ஒரு மாசம் பிடிக்குது அதைத் தொட்டு காரியங்கள் தாமதத்தில் வருதென்று சொன்னதுக்கு யிப்படி சொல்லலாமாயென்று கோபமாய் மமுதல்லிக்கான் போய் பதினேழு பதினெட்டு நாளாச்சுதே யென்று சொல்லி கோபிச்சுக்கொண்டார். மமுதல்லிக்கான் போனாப் போலே மராட்டியர்கள் போகயில்லே அப்பாலும் சேலம் உடையார்பாளையம் பொதிகள் வருகிற வழி கள்ளக்குறிச்சி விறுத்தாசலம் முதலான யிடங்களெல்லாம் யிங்கிரேசுக்காறர் மனுஷர் அமுல் பண்ணுகிறார்கள் அவர்கள் நம்முட மனுஷரென்றால் வெட்டிப்போடச்சே பொதிகளின் பேரிலே வருகிற சரக்கை விட்டு விடுவார்களாவென்று சொன்னதுக்கு ரொம்ப கோபிச்சுக்கொண்டு பதிலுத்தாரம் சொல்லாமல் மேல் வீட்டின் பேரிலே போனார். கான் பிடவை பார்க்குற சாலையே வந்து மசுக்கரைக்கு வற்த்தகருது கட்டுப்போட்டார்கள் அங்கேயிருந்து கட்டுப்போட்டான பிற்பாடு யென் கச்சேரியே வந்திருந்து வீட்டுக்குப் போனேன்.

இத்தனாள் ருத்திரி பத்தரை மணிக்கி திருவீதியின் பேரிலே யிறங்கி யிருக்கிற நம்முட ஊரிலேயிருந்து ஒரு வெள்ளைக்காறன் துவாருது குதிரை சுவார் வந்து வழுதாவூர் வாசற்படி மூடி யிருந்த படியினாலே அடுத்தாப்போல ஓரமாயிருந்து ஒரு துப்பாக்கி வெடி சுட்டான். அந்த சபுத்தம வாசற்படியிலிருக்கிற கொற்பறால் கேட்டு ஆர்யென்று யெச்சரித்த பிற்பாடு திருவீதிக் கோட்டை பத்தே ஆச்சுது அந்த கபுறு துரையவர்களுக்குச் சொல்ல வந்தேன் என்று குவாடுது குதிரை சுவார் சொன்னாலும் அப்பால் வாசற்படி திறந்து அந்தக்கொற்பறால் அவனை அழைச்சுக்கொண்டு துரையவர்களண்டைக்குப் போனவுடனே அவர் நித்திரை போயிருக்கச்சே போய் எழுப்பி அந்தக் குவாடுது குதிரை சுவார் துரையவர்களுடனே திருவீதிக்கோட்டை நம்முடவர்கள் யித்தனாள் சாயங்காலம் பத்தே பண்ணின சமாச்சாரம் சொன்ன மாத்திரத்திலே துரையவர்கள் மகா சந்தோஷப்பட்டு அவனுக்கு அன்னேரத்திலேதானே சாப்பாடு அழைப்பிச்சுக் குடுத்து சாப்பிடச் சொல்லி தம்முட கைப்பெட்டியிலேயிருந்த விராகனிலே நூறு விராகன் யெடுத்து அவனுக்கு யினாம் கொடுத்து மூனு போட்டிலும் சாறுயம் கொடுத்து மறு காகிதமும் யெழுதி அவனுடனே ரெண்டு பேர் அறுக்காறுகளையும் பயணம் பண்ணி பதினொண்ணரை மணிக்கு அனுப்பிவிச்சார்.

ஆனாலிந்த திருவீதிக்கோட்டை பத்தே பண்ண சமாச்சாரம் அவரவர் சொல்லிக்கொண்டதென்னவென்றால் நேத்து ஆதிவாரம் ராத்திரிதானே திருவீதிக்கோட்டையிலிருந்த யிங்கிரேசுக்காறர் தாலுக்கு சொலுதாதுகள் சிப்பாயிகள் வகையிராக்கள் அவரவர்கள் தட்டுமுட்டெல்லாம் வெளியே தேவனாம்பட்டணம் கோட்டைக்கு அனுப்பிப்போட்டு அவர்களும் ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு சமஸ்தான பேரும் பிறப்படுப் போனார்களென்றும் அந்தச் சேதி நம்முடவாகளுக்கு தெரியாமல் யித்தனாள் மத்தியானம் மட்டுக்கும் பிறங்கிகளும் மொருத்தியேயும் கோட்டையின் பேரிலே சுட்டார்கள்.

கோட்டையிலே யாரும் யில்லாததினுல் சபாபு யில்லாமல் போச்சுது அவர்கள் சுடாமல் சும்மாயிருந்தது யென்னமோ மோசம் பண்ணியிருக்குருர்கள் யென்று நம்முடவர்கள் ஆலோசனே பண்ணி சிறிதுபேர் கூலிக்காறரை அனுப்பிப்பார்த்து வரச் சொன்ஞர்கள். அவர்கள் போய்ப் பார்த்து கோட்டையிலே யாருமில்லே யென்று வந்து சொன்ஞர்கள் அப்பால் நூறு சுவார்களே யும் சிறிது பேர் சிப்பாய்களேயும் சேவுகரையும் போய்ப்பார்த்து வரச்சொன்ஞர்கள் அவர்களும் போய்ப்பார்த்து வந்து யாருமில்லே யென்று சொன்ஞர்கள். அதன் பிற்பாடு நம்முட பிறுன்சுக்காறர் தாலூக்கு பவுன்சும் முராரிராயன் வகைரா விராக்களும் கோட்டை அண்டைக்கிப் போய் உள்ளே போய் நாலுபக்கமும் பாத்து அப்பால் கோட்டையின் பேரிலே வெள்ளேக்கொடியைப் போட்டுக் கொண்டார்கள் யென்றும் கோட்டையிலே முன் யிங்கிரேசுக் காறர் காலம் பண்ணியிருந்த பிறுன்சு சொலுதாதுகள் யிருபத் தொன்பது-(29) பேரும் பனிரெண்டு ஒபிசியால் மாரும் யிருந் தார்கள். அவர்களுடனே இங்கிரேசு ஒபிசியால் ஒருத்தனும் சொலுதாது ஒருத்தனும் யிருந்தார்கள் யென்றும் யிப்படியாக அவரவர் சொல்லக்கேழ்வியானேன்.

1753ஸு மாயுமீ 8உ ஸ்ரீமுகஸு சித்திரைமீ 30உ

அங்காரகவாரம்

இத்தனுள் காலத்தாலே நான் துரையவர்களண்டைக்கிப்போய் நேத்து திருவீதிக்கோட்டை பத்தேயானதுக்கு மோபாற்குபாதி (Congratulation) சொல்லி நதிர்வைத்தது நான்-விராகன்-21-இருபத்தொன்று—கும்பினீர் வந்த தகர் வீ—70 எழுபது இந்தப் படிக்கி நதிர் வைத்து யிந்த வருஷம் முதல் உமக்குச் சகல சேகரமும் உண்டாயி மொகுலாய் தவுலத்தும் உமக்குக் கிடைக்கும் யென்று சொன்னதுக்கு துரையவர்கள் சந்தோஷப்பட்டு உமக்கு வேறே ஒரு ரூச்சியாதிபத்தியமும் யிந்த வற்த்தகருக்கு ஒவ்வொரு சீமையும் குடுப்பேனென்றும். சொன்ஞர் காரைக்கால் பாதிரியார் சம்பாவுலு கோயிலிலே யிருக்கிற சுப்பிறீயோர் வந்து தெலுங்குப் பேச்சிலே யிதென்ன செயம் சுவாமியை நன்ருய் அறிய வேணும் என்று சொன்ஞர் அதுக்கு நான் சொன்னது லவிக்கீகம் யெல்லாம் அறிஞ்சல்லோ சுவாமியை அறிய வேண்டியது யென்று சொன்ன துக்கு அவர் சொன்னது அதென்ன சுவாமியைத்தான் முன்னே அறியவேண்டியதென்று சொன்ஞர்.

அதுக்கு நான் மறுபடியும் பிறபஞ்சத்திலே யிந்த லவிக்கீகம் யெல்லாம் நன்ருய் அறிஞ்ச பிற்பாடுதான் சுவாமியை அறியப் போறதுயென்று சொன்னதுக்கு அவர் சொன்னது - நீர்மகா சமத்துக்காறமாய்ப் பேசுவீர். உம்மைப் போலே ஆரும் வெள்ளேக் காறரிலேயாவது துலுக்கரிலேயாவது ஆரும் பேசுவாரில்லே. யிப்படிப்பட்ட சாமார்த்தியம் யிருக்கிறபடியினுலே நீர் சுவாமியை அறிய வேண்டியதென்று சொன்ஞர் அதுக்கு நான் சொன்னது யின்னம் யிந்த லவிக்கீகம் யெல்லாம் நன்ருய்க் குலங்கவுமாய் அறிஞ்சுக்கொண்டு சுவாமியை பசனேபண்ணியிருக்கவேணுமென்று

தான் பிரார்த்திக்கிறேனென்று சொன்னேன். யிதிலே துரையவர்கள் சுப்பிரீயேரைப்பார்த்து நீர்பேசுற தெலுங்கு தமிழ் கலந்த தெலுங்காயிருக்குதென்று சொன்னார் அதிலே நான் சொன்னது தமிழ் ராச்சியத்திலே பேசுகிற தெலுங்கானபடியினாலே அப்படித்தானிருக்குமென்று சொன்னேன். அப்பால் ரசாசாயபும் அல்லிக்கிம் சாயபும் திருவீதிக்கோட்டை பத்தேயான சேதிக்கு துரையவர்களண்டைக்கு வந்து மொபாற்கு பாதி சொல்லி நதிர் வைத்துப்பேட்டி கண்டார்கள். அப்பால் நான் காசாக்கச்சேரியே வந்தேன்.

அப்பால் பாப்பய்யபிள்ளை துரையவர்களுக்கு நதிர்–விராகன்–50-அன்பது ஷெ மதாமுக்கு நதிர்வைத்தது விராகன்–50-அன்பது மதனாந்தபண்டிதன் துரையவர்களுக்கு ரூபாய் அஞ்சு – பெரியண்ண நயினார் - நதிர் – ரூபாய்-11–பிள்ளையுமொரு – முராரிராயன் வைக்கில் முகந்தராயனும் மயிசூர் ராசா வைக்கில் வெங்கிட்டநாரணப்பய்யனும் – மீர் – அஷம்–முதலானவர்களும் போய் மொபாற்கு பாதி சொல்லி நதிர்வைத்தார்கள்.

அப்பால் முராரிராயனுக்கும் காகிதமெழுதி திருவீதிபுவனகிரி பறங்கிப்பேட்டை தீர்த்தநகரி வகையிரா பஞ்சமால் சீர்மையெல்லாம் சபத்திபண்ணச்சொல்லி யெழுதி பாய்பய்யபிள்ளை சொன்னதாய்ச் சொன்னார்கள்,

தில்லைமேஸ்திரியை அழைப்பிச்சுக்கொண்டு கொலுத்துக்காறரையும் மேஸ்திரிகளையும் காமாட்டியர்களையும் திருவீதிக்கு அனுப்பி கோட்டையை யிடிச்சுப்போடச்சொல்லி உத்தாரம் கொடுத்ததாய்ச் சேதி கேழ்க்கப்பட்டுது.

பனிரெண்டடிச்சு ரெண்டு மணிக்கு நான் ஸ்னானம் பண்ணி சாப்பிட்டுப்போற வேளையிலே சலாபத்துசங்கு ஊரிலே யிருந்து சலாபத்துசங்குவினுடைய காகிதமும் முசே குப்பிவகையிராக்களுடைய காகிதமும் துரையவர்களுக்கு ஒரு காகிதமும் பதினொரு மணிக்கு கொண்டுவந்து கொடுத்தோமென்று முசேகுப்பி— உங்களுக்கு ஒரு காகிதம் கொடுத்தானென்று ஒரு வருக்காகிதம் ஒன்றும் (Shinning paper) மகாராஷ்ட்டர் காகிதமொன்றும் ரெண்டு காகிதமும் கொண்டுவந்து குடுத்தார்கள். அந்தக் காகிதங்களைக் கொண்டுவந்து அந்த அறுக்காறுகளை நீங்கள் சலாபத்துசங்கு லவூர்விட்டு யெத்தனை நாளாச்சுதென்று கேட்டதுக்கு யிருபத்தோருநாளாச்சுதென்று சொன்னார்கள் நல்லூர் எங்கே யிருக்குதென்று கேட்டதுக்கு அபறங்காபாத்துவுக்கு யிப்பறம் அயிதராபாத்துக்கு அப்பிறம் யெண்பது கோசிலே கோதாவரி நதி வருகுது அதன் ஓரத்திலே பேர் விளங்கன் பட்டணம் யிருக்குது. அந்தச் சின்னப்பட்டணத்தண்டையிலே யிருக்குது. யின்னம் அங்கே ஒருமாசமிருந்து மழைக்காலத்துக்கு கோல்கொண்டையிலே வந்து சாவணி பண்ணுவார்களென்றும் துரையவர்களுக்கு யிந்த கற்னாட்டக சுபாவுக்கு பற்மானக் கொண்டுவந்தோம் அங்கே

யானால் சலாபத்துசங்கு பணம் யிருந்ததெல்லாம் சிலவழிஞ்சு போச்சுது. யிப்போ வெள்ளைக்காறர் அங்கே யிருக்கிறவர்களுக்கு நாலு மாதத்திய சம்பளம் குடுக்கவேணும் அவ்விடத்துக்கு குதிரைக்காறர் சிப்பாயிகள் வகையிராக்களுக்கு யெட்டு மாதத்திய பணம் குடுக்கவேணும் யிதைத்தொட்டு குதிரை சுவார் சிப்பாயிகள் முதலான பேர்கள் பண்ணுகிற லச்சையைத்தொட்டு லஹூர் முழுகிப்போறாப்போலே யிருக்குது. அதைத் தொட்டுப் பணங்காசு யிவ்விடத்திலே யிருந்துவந்து அவ்விடத்துக்காரியம் நிறுவாகமாக வேணும் ஆனபடியினாலே பணம் சுறுக்கிலே அனுப்பச்சொல்லி சலாபத்துசங்கு துரையவர்களுக்கு காகிதம் யெழுதினார் பூசே குப்பியும் அவ்விடத்திலே யிருக்கிற பருவம் யெழுதியிருப்பானோ பணத்துக்குகூட யெழுதினாரோதெரியாது. யிவ்விடத்திலேயிருந்து பணம் கப்பலின் பேரிலே போட்டு மச்சலிபந்தரிலே யெறக்கி அங்கே யிருந்து அயிதராபாத்துக்கு அனுப்புகிறார்களோ சாவுகார் களுடைய உண்டிகை வாங்கி அனுப்புறார்களோ தெரியாது. அவர்கள் பதில் காகிதங்கள் எப்போ கொடுப்பார்களோ அந்தட்சினம் உங்களண்டைக்கு வருகிறோம். நீங்களுங்கள் காகிதங்களெழுதி வைத்துக்கொளுங்கோளென்று சொன்னார்கள். நல்லது நிசாம அல்லிக்கும் சலாபத்துசங்குவுக்கும் சமாதானமா யிருக்குதாவென்று கேட்டதுக்கு சயிதல்லிக்கானும் ராசா ராமச் சந்திரராயனும் சமாதானம் பண்ணினார்கள். சமாதானம் ஆன பிற்பாடு அரேலிலே நிசாம் அல்லி-போனார் சயிது லசுக்கர்க்கான் திவான்கிரி பேருக்கு ஒருத்தனை வைத்துப்போட்டு சகலகாறுபாறும் அவனை பண்ணிக்கொண்டு போறான் சலாபத்துசங்கு சிறுப் பிள்ளையானபடியினாலே காரியம் பார்க்கிறதுக்கு சாவகாசமில்லை. சாப்பிடுகுறதும் குடிக்கிறதும் ரூபாய் - போலனுமாயிருக்கிற- வேலையே - அல்லாமல் மத்தக்காரியம் ஒன்றும் தெரியாதுயென்று லஹூரிலே யிருக்கிற சனங்களெல்லாம் சொல்லிக்கொள்ளுகிறார்கள் என்று சொன்னார்கள். நல்லது துரையவர்கள் காகிதங்கள் வாங்கிக் கொண்டு போகச்சே வாருங்கோளென்று சொல்லி அனுப்பிப் போட்டு சாப்பிட்ட பிற்பாடு தெலுங்கு காகிதமும் மகாராஷ்ட்ட காகிதங்களும் பாற்ப்போமென்று காகிதங்களை மேசைமேலே வைத்துப்போட்டு நான் சாப்பிடப்போனேன்.

இத்தனாள் சம்பாவிலுக்கோவிலிலே யிருக்கிற காரைக்கால் பாதிரியார் யென்னுடனே கன்னரைக்காளிக்காதேவிக்கி பண்ணித் தேர் திருநாள் பண்ணுகிறது அஞ்சாறு வருஷமாய் நடவாமல் நின்று போனதை மறுபடி நடத்திக்கொள்ளச்சொல்லி நீர் உத்தாரங் கொடுத்திராம். அப்படி வெகுநாளாய் நடவாதமட்டுக்கும் நடத் தவர்மாயிந்தசேதி துரையவர்களுடனே சொல்லுகிறேனென்று சொன்னார். இங்கிறேசுக்காறர் கலாபம் வந்தது முதல் கோயி லுகளுக்கு திருநாளும் நடத்தயில்லை உச்சவங்களும் நடத்தயில்லை. அந்தவிசேஷம் துரையவர்களைக் கேட்டு மறுபடியும் அந்தந்த கோயில்களுக்கு நடக்கிற சடங்காம்படியே நடத்திக்கொள்ளச் சொல்லி துரையவர்களுத் தாரமாயிருக்கிறபடியினாலே நடத்திக் கொள்ளுகிறார்கள் யென்று சொன்னேன். அதுக்கு அப்படி நடக்கலா காது யென்று சொல்லி போய்விட்டார். நேத்து சிர்மையிலே இருந்து ராசா அவர்கள் துரையவர்களுக்கு மறக்கி (Marguis)என்கிற பேர்

குடுத்தனுப்பி பண்டிகை கொண்டாட்ச்சே கன்னுரவகையிராக்கள் போய் துரையவர்களுடனே அய்யாயெங்கள் தேவதை உச்சவம் நடத்த உத்திரவு குடுக்க கொடுக்க வேணுமென்று கேட்டுக் கொண்டபடியினாலே நடத்திக் கொள்ளச் சொல்லி உத்தாரங் கொடுத்தார் என்று நான் சம்பாவுலுங்கோயிலிலே படிப்புச் சொல்லுகிற வாத்தியாருடனே சொல்லச் சொல்லி அனுப்பிவிச் சேன் தயங்கம்பாடியிலிருந்து மூணுபேர் தென்மார்க்கு (Denmark) வெள்ளைக்காறர் பெரியமனுஷர் சுலுப்பும் பேரிலே போய் பங்கா ளத்தில் யிறங்கி அவ்விடத்திலே அவர்களுக்கு புதுக்கோந்துவார் கட்டிக்கொள்கிறவர்கள் யிவ்விடத்தில் யிறங்கி துரையவர்களுடனே கண்டு பேசிக்கொண்டு மத்தியான மனுப்பிவிச்சுக்கொண்டு சுலுப்பின் பேரிலே யேறினார்கள். அப்போ கோட்டையிலே பதினொரு பிறங்கி போட்டார்கள்

## 1753௵ மாயுமீ 12௳ ஸ்ரீமுக௵ வையாசிமீ ௨௳ சனிவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போய்க் கபுறு சொல்லிப்போனவிடத்திலே துரையவர்கள் கபுறுகள் யிருக் கட்டும் என்று அமத்தி யென் அதிருஷ்டத்தினுடைய பெலனைப் பார்த்தியா. யெனக்கு மறக்கி (Marquis) பட்டம் வந்துதே யிது யென் சரீரத்துடனே மாத்திரமேயல்லாமல் அப்பிறம் யெனக்குப் பிள்ளை யில்லாததைத்தொட்டு யித்தனை பிறயாசத்தின் பேரிலே கிடைச்ச வலுவு கிடைத்தும் வீறுதாவாய்ப்போச்சுதேன்று யெண் ணினதுக்கு ராசா அவர்கள் யெனக்கு யினிமேலும் பிள்ளைக்கு யிடம்பாடில்லாமலிருக்கிறதைத்தொட்டு அதையறிந்து யென் தமயனார் குமாரர் யெனக்குப்பிறம் யாருயிந்த மறக்கிப்பட்டம் அனுபவிக்க யெங்கள் வமுசத்துக்கு கூட யெழுதித்தீத்துப்போட்டார் யிப்படி யிந்தமட்டுக்கும் பிறான்சு ராச்சியத்திலே வெள்ளைக் காறர் களுக்கும் நடந்ததில்லை அப்படியொருத்தருக்கும் நடவாதகாரியம் யெனக்கு நடக்க கிடைச்சபடியினாலே யென் அதிருஷ்டத்துக்கு சமானமான அதிருஷ்டவான் லோகத்திலே ஒருத்தருமில்லையென்று சொன்னார். அதுக்கு நான் சொன்னது யிதென்ன ஆச்சரியம் யெந்தப் பிறான்சுக்காறன் தக்கனசுபா நாசறுசங்குவைத் தலையை வெட்டி தக்கனசபைகூட ஆண்டான். அப்படிப்பட்ட காரியமும் டில்லி தகுத்திலே யிருக்கிற அகம்மதிசா பாதுசா கூட பயந்து உம்முட சினேகர் கோரி உம்முட பெலனை யிச்சிச்சான் யிப்படிப் பட்ட காரியம் லோகத்துக்குள்ளே ஆருக்கு சம்பவிங்சுது. உமக்கு ஒருத்தருக்குமே அல்லாமல் யிப்படிப்பட்ட மகத்தாகிய காரியங்கள் வந்து அடைஞ்ச உமக்கு யிந்த மறக்கி (Marquis) பட்டம் உமக்குப் பிள்ளையில்லாதத்தினாலே உன்னுட அண்ணன் மகனை சேருகிறதும் அப்பாலும் வமுசத்தை அனுசரித்து நடக்கிற தென்ன ஆச்சரியமென்று சொன்னதுக்கு குல்லாவைக் கழட்டி ஆசாரம் பண்ணினார். அதுக்கு நானும் ஆசாரம்பண்ணி யினிசீர் யென்று அழைக்கத்தக்கதாக சுவாமி தயவு பண்ணுகிறதற்கு யேஷியமேயல்லாமல் மத்தபடி வேறேயென்னக்கவையில்லை யென்று

சொன்னதுக்கும் ஆசாரம் பண்ணினார் அப்பால் மூசேதெலார்சு மூசே பொசேத்து—மூசே பெடுத்தராம்—மூசே துரையவர்கள் வெள்ளைக்காறர்களுடனே சொன்னார்கள். எல்லாரும் வெகு உல்லாசத்துடனே யிருந்து மேல்விட்டின் பேரிலே யேறிப்போனார். அப்போ மூசே. பெடுத்தராம் யென்னுடனே சொன்னது யிவருக்கு ஒரு சுபமும் பெலத்த சுபமாய்வருது. ஒரு பொல்லாப்பம் உடனே பெலத்து வருகுது யிந்தப்படி வந்த சுபமும் அசுபமும் நாளுக்கு நாள் ஒவ்வொன்றும் உசந்து கொண்டே வந்துது யிப்போ ஒரு சுபம் வந்து அனுபவிச்சாரே யினிஒரு பொல்லாப்பும யிப்படிதான் பெலத்து வந்து அனுபவிக்கப் போறாரென்று நிஷ்கருஷை பண்ணிக்கோயென்று சொன்னான். அப்படியா யென்று நான் அறியாது போலே உத்திரஞ்சொன்னதுக்கு நீ யெழுதிவையி சரிப்படுமென்று மெத்த நிஷ்கருஷையாய்ச் சொல்லி யிதுவரைக்கும் ஒரு சுபமும் அசுபமும் நடந்ததையும் சொன்னான். அப்பால் பிடவை பார்க்கிற சாலையே வந்து மூசே சேம்போல் (St. Paul) கும்பினிருடைய வர்த்தகர்கள் காங்குப்பிடவை வகையிரா மசுக்கரைக்கிப்போட்டுருந்தார்கள் அங்கேயும் பிறஸ்தாபம் மறக்கிப் பட்டத்துக்கு ராசா அவர்கள் துரையவர்களுக்கு வமுசத்துக்குக்கூட மறக்கி பட்டம் நடக்கத்தக்கதாக பத்தேந்திலே யெழுதினதைப் பிறஸ்தாபம் பண்ணினதுக்கு மூசே சேம்போல் சொன்னது துரை அவர்களுக்கு சீர்மையிலே ராசாவிடத்திலே சிபாரிசு பண்ணி யிந்த மறக்கி பட்டம் வாங்கிட்டார்கள். அதை துரையவர்களுக்கு கொடுத்தார்கள். வந்து பெகு பேலனை வசிலா அவன் பேரிலே ராசா மோகமானபடியினாலே அந்த மதாம் தம் பொம்பதூா (Madame Pombadur) யென்கிறவளை ராசா வைப்பு ஆக வைத்திருக்கிறபடி யினாலே யிவருக்கு வாச்சுது யில்லாவிட்டால் வாய்க்காதென்று சொல்லி யிப்படி அனேகம் பேருக்கு சிமையிலே மூன்றும் ராசா குடுத்திருக்குறாரென்று நாலு ரெண்டு பெரிய மனுஷருடைய பேர் சொல்லி பேசிக்கொண்டிருந்தார். அப்பால் யென் காசாக் கச்சேரியே வந்தேன்.

இத்தனாள் சாயங்காலம் ஆறரை மணிக்கு துரையவர்கள் அழைப்பிச்சு நான் போனவிடத்திலே யென்னைப்பார்த்து துரையவர்கள் நகைச்சுக்கொண்டு நீ சொன்னபடிக்கி 1752ஆம் யெல்லாம்பொல்லாப்பே கண்டுது 1753ஆம் யிந்த வருஷம் சுபப்பலம் கண்டுது. நீ சொன்ன பேச்சுப்படிக்கி சரிப்பட்டுது. இனி உன் மனதிலே யெப்போ யென்ன நினைத்து யிருக்கிறாயோ அந்தப்படிக்கு நான் நடைப்பிக்கிறேனென்று உச்சாகத்தின் பேரிலே அவர் சொன்னதையெல்லாம் யெழுதினால் மெய்யாய்க் காணுது கும்பினீர் காரியங்களுடனே சேந்ததெல்லாம் உன்காற்கு ஆனபடியினாலே நீ பத்திரமாய் விசாரித்துக் கொள்ளு. நீ ரெந்தக்காரியம் யெப்படி நடப்பிக்கச் சொல்லுகிறீர் அப்படி நடத்துகிறேனென்று சொன்னதுக்கு நான் ஆசாரம் பண்ணி நீர் யெனக்கு சகல யெக்குத்தியாரும் கொடுத்து நடப்பிக்க யில்லையா டில்லி பரியந்திரம் யென் பேரேயல்லாமல் பின்னை ஒருத்தர் பேருண்டா யென்னுடைய பொல்லாத வேளையினுடைய குணம் உங்கள் சிந்தத்திற்கு விகல்பமாய் தோத்திச்சுது யிப்போ நல்லகாலம் வந்தது. யினி யெனக்கு சரியாய் டில்லி பாதுசாவைக்கூட சொல்லப்போகாது யென்று

சொல்லி நீங்கள் டில்லி தக்குத்தேருவீர்கள். அதுபோனெல்ருல் நான் ஒசறுகிறபோது உங்களுக்கு உசத்திலாயனபடியினாலே உங்களுக்கு பாதுசா பட்டமும்வரும். நானும் வாசீரயிருப்பேனென்று சொன்னதுக்கு அவர் ஆசாரம் பண்ணினுர். நானும் ஆசாரம் பண்ணின வுடனே கும்பினியார் அன்பதினுயிரம் விராகனுக்கு யிந்தவருஷ காங்கு பிடவை வேணுமென்று கேட்டார்கள் நாளைக்கி வா பணந் தாரேன் என்று சொன்னுர் நல்லதென்று சொன்னதுக்கு சின்ன துரை யிருந்துகொண்டு யெல்லாம் நீர் கூட்டுகிறீரா வென்று கேட்டார் துரையிருந்துகொண்டு யெல்லாம் அவன் கூட்டுகிறே அல்லாமல் பின்னை ஒருத்தர் பிறையாகிலும் கூட்டக்கவையில்லை யென்று சொல்லி அன்னூறு கட்டு ஆச்சுதே பாதி சிலம்புரியும் பாதி கிழிவும் ஆக கூட்டென்று சொல்லி நாளைமன்றைக்கு திங்கட்கிழமை யத்தன்று ஒரு திணுசு பண்ணி கொடுக்கிறேன் யென்று சொன்னுர். யிந்தப் பேச்சுக்களெல்லாம் முசே சேம்போலும் (Mr. St. Paul) முசே தெபொசேத்தும் கூடயிருந்துகொண்டிருந் தார்கள். அப்பால் கையிலே போட்டிருக்கிற செம்பு மோதிரம் நெருப்பு போலேயிருக்குது. யிந்த விளக்கு வெளிச்சமானதினாலே பாத்தியாவென்று விரலைக் காண்பிச்சார்.

மெயிதான் சூரியஉதையம் போலேயிருக்குது. யென்று சொன்னேன் மெயிதானென்று தலையை வளைச்சு ஆசாரம் பண்ணினு - யினிபோகவேணுமென்று நானும் அனுப்பிவிச்சுக்கொண்டு யென் காசாக்கச்சேரியே வந்தேன்

இத்தனாள் ராத்திரி கிண்ணித்தேரிலே காளியம்மனை யெழுந் தருளப்பண்ணினுர்.

1753ஸு மாயுமீ 14வ ஸ்ரீமுகஸு வைகாசிமீ 5வ
சோமவாரம்

இத்தனாள் யெனக்கு சரீரம் சொஸ்தமில்லாதபடியினாலே வெளியே பிறப்படயில்லை. துரையவர்களுக்கு நேத்து ராத்திரி முதல் கொண்டு சரீரஞ் சொஸ்தமில்தாத படியினாலே அவுஷதங்களை சாப்பிட்டுக்கொண்டு யிருந்தாரானபடியினாலே தறுவாசாமன்று பண்ணினுர்கள். யென்று சொன்னுர்கள் போக்குவரத்து மனுஷர் களையும் விடயில்லைவென்றும் சேதி கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் சேதி கேழ்விப்பட்ட தென்னவென்ருல் சதிரங்க பட்டணத்திலே ஒலாந்தா சோந்துவாரிலே முப்பத்தாறு வருஷமாய் கொமாந்தாமாயிருந்த சுவானிசு (Mr. Johannes Spity) யென்கிறவன் ஒன்றரை மாதமாய் முதுகிலே றணம் பிறந்து அவஸ்த்தைப்பட்டு நாளது வைகாசிமீ 2உக்கி மாயுமீ 11வ (1753) சுக்கிறவாரம் நாள் பகல் பனிரெண்டு மணிவேளையிலே செத்துப்போனுனென்கிற சேதி கேழ்க்கப்பட்டுது. யிந்த சுவானிசு பேசு (Mr. Johannes Spitz) யென்கிறவன் சதிரங்கப்பட்டணத்து கோந்துவாருக்கு கோமாந்தா மாயி (Chief of the Factory) வந்த போது அந்த ஊரிலே சாதி வழக்குப்பட்டு திராமலிருந்த போது சாதிக்கு ரெண்டு பேரைப் பிடிச்சு - காபிரிக்கு யேத்திவிட்டான். அப்பால் அந்த சேதி

ஆற்காட்டிலே சாப்பாண்ணியை சாதுல்லாக்கான் கேட்டு சதிரங்கப் பட்டணம் ஊர் சர்க்காருக்கு. ஒலாந்துக்காறர் வர்த்தகம் பண்ணிக் கொண்டிருக்கிறவரையிலே பண்ணாமல் சர்க்காரு ருசுக்களை பிடித்துக் கப்பலிலே போந்திசேரி யென்கிற கோபத்தினாலே கபுறுகளைக் கொண்டுவந்து ஒப்பிக்கச் சொல்லியும் சறுக்காறுக்கு குணைக்கார்- குடுக்கச்சொல்லியும் தாக்கீது அனுப்பினதின்பேரிலே சர்க்காருக்கு சிறிது பணங்கூட குடுக்க . சாயிபுசால் நடப்பிச்சு அந்தப்படிக்கு பணமும் குடுத்து ராசிபண்ணிக்கொண்டு அந்தச்சேதி நாகப் பட்டணத்துக்கு யெழுதிக் கொண்டதுக்கு அவ்விடத்துக் கொவர்ணதோர் யிந்த சேதி நமக்கு யெழுதத்தேவையில்லை. சறுக்காறுக்கு சிலவிட்ட பணத்தை கும்பனீரிலே சிலவு யெழுதி கும்பனியாருக்குத்தானே சமுதாயிச்சுக் கொள்ளுமென்று யெழுதப் போட்டதாயும் அப்பால் பத்தாவிக்கு (Batavia) யெழுதிக் கொண்டதுக்கு நீ சதுறங்கப்பட்டணத்து கோந்துவாரிலே தானே யிருந்து சறுக்காறுக்கு சிலவு பண்ணின பணம் கும்பனிருக்கு சேருகிற மட்டுக்கும் உன்சம்பளத்திலே சம்மதிப் பண்ணிப்போட் டென்று யெழுதிப்போட்டதாயும் அந்தப் படிக்குத்தானே முப்பத் தோருவாருஷமாயிருந்தவன் யிவன் சாகச்சே யிவனுடைய ஆஸ்தி தட்டு முட்டு பிடவை சீலை ரொக்கம் உட்பட ஆயிரத்தன்னூறு விராகன் மட்டுக்கும் யிருந்ததென்று சொன்னார்கள். மைத்தப்படி வேறே சேதி கேட்கப்படயில்லை.

## 1753ஸ்ரு மாயுமீ 22உ ஸ்ரீமுகஸ்ரு வைகாசிமீ 13உ அங்காரகவாரம்

இத்தனாள் காலத்தாலே கோட்டையிலே யேனத்துப்பிடவைப் பாருவையிட்டு முப்பத்துநாலு கட்டுப்போட்டார்கள் அந்தச் சேதியும் மத்தசேதிகளும் துரையவர்களண்டைக்குப்போய் கபுறு சொல்லி அனவுடனே திருவிதிக்கோட்டையிலே அகப்பட்ட யிங்கிறேசுக்காறருடனே பிறான்சு சொலுதாதுகள் ரெண்டுபேர் களிருந்து நம்முடைய பிறான்சுக்காறர்களுடனே சண்டைபண்ணினார் களென்று சாறியின் பேரிலே சண்டைபண்ணபடியினாலே யித்தனாள் சின்ன துரையும் ஒபிசியால்மார்களையும் கோன்சேல் கூட்டி அவர்கள் ரெண்டுபேர்களையும் தூக்கிலிடகித்து அதிலொருத்தனை திருவிதியி லிறங்கியிருக்கிற தண்டிலே கொண்டுபோய் தூக்கிப்போடச் சொல்லி அனுப்பினார்கள். ஒருத்தனை காவலிலே விலங்குபோட்டு வைத்தார்கள். யினிமேல் யென்ன செய்வார்களோ அறிய வேண்டியது.

இத்தனாள் சாயங்காலம் அருணாசலப்பிள்ளை யென்கிறவன் பாப்பய்யபிள்ளை மனுஷன் சிதம்பரத்தின் பேரிலே சண்டை போடுகிற நம்முடைய தண்டிலே யிருந்த பிறமணன் கோட்டை யிலே யிருக்கிறவர்களுக்கு உளவாயிருந்து காகிதயெழுதி யனுப்பினதை அருணாசலபிள்ளை மனுஷன் பிடிச்சு அங்கே யிருக்கிற வெள்ளைக்காறன் கையிலே ஒப்பிச்சுக்கொடுத்தான் அவனை துரையவர்களுக்கு அனுப்பிவிக்கச்செய்தான். அப்போ பாப்பய்யபிள்ளை உதைச்சு அடிச்சு உன் மனுஷன் அப்படி செய்யலாமாவென்று கோபிச்சுக் கொண்டார்.

அப்பால் மதாமுடனே பாப்பய்யபிள்ளை தாறுமாறுமாய்ச் சொல்லி அந்த அருணாசலப்பிள்ளை கோட்டையானுக்கு உளவாயிருந்து வந்ததென்பிச்சு துரை காகிதம் அனுப்பி அருணாசலப் பிள்ளையை பிடிச்சு வந்து கோட்டையிலே யித்தனாள் சாயங்காலம் ஆறு மணிக்கு காவல் வைத்தார்கள். யிவன் அண்ணன் மகனை நாலு நாளைக்கி முன்னேதானே நயினார் வீட்டிலே காவல் வைத்தார்கள. அபத்தம் நடக்கிற காலமானபடியினாலே பாப்பய்யபிள்ளைக்கு நடக்குது. வறதராசபெருமாளுக்கு ரத உச்சவம் — பிள்ளை அவர்களுக்குத் திதி.

### 1753௵ மாயுமீ 23௳ ஸ்ரீமுக௵ வைகாசிமீ 14௳ புதவாரம்

இத்தனாள் பிள்ளையவர்களுடைய திதியானபடியினாலே சூரிய உதயத்திற்கு ஸ்னானம் பண்ணி அப்பால் பிறாமணாளுக்கு அரிசி மத்ததுகள் கொடுத்து அப்பால் வறதராசப் பெருமாளுடைய ஒன்பதாம் நாள் றத உச்சவமானபடியினாலே அண்ணாசாமி அப்பாவு முதலான பேர்களை சிங்காரிச்சுக்கொண்டு பல்லக்கு குதிரைகள் முதலான மெயி வரிசைகளுடன் நாகசுர வாத்தியத்துடன் ரத உத்சவம் பார்த்து வரச்சொல்லிப்போட்டு நான் கோட்டைக்குப் போய் யெட்டு மணிக்கு துரையவர்களுக்கு யெட்டு நாளாய் தலை நோவு பிடிச்சு வெகு சங்கடப்படுகிறபடியினாலே ஒத்தடம் போடுகிறதைத் தொட்டுத் செத்தியெல்லாம் யோக்கியப் போய் யிப்படி யெத்தனை நோவு யிருந்தாலும் உடுத்திக்கொண்டு தாழ வந்து தே குடிச்சுவிட்டு அப்பால் நான் போய் கபுறு சொன்னேன் அப்போ மமுதல்லிக்கான் உபாயமாய் திரிச்சிராப்பள்ளிக் கோட்டையே போய் சேர்ந்து மயிசூர் நந்தி ராசாவையும் அவர்கள் பவுன்சையும் முறியடிச்சு கசானாவையும் எடுத்துக்கொண்டு போனான். நம்முட முசே வலோந்தை (Mon La Volonte) யென்கிற கோணப் பறங்கி யிதிலே நம்முட பவுன்சுடனே போய் ஒத்தாசை பண்ணினபடியினாலே நந்தி ராசா தப்பினான். யினிமேல் நம்முட பவுன்சு அங்கேயிருக்கிறதும் அல்லாமல் திருவீதி அண்டையிலே யிறங்கி யிருக்கிற பவுன்சு முராரிராயனும் போனாலே அல்லாமல் நந்தி ராசாவுக்கு பெலமில்லை அந்தப்படிக்கி அனுப்பிவிக்கிறேன் என்று சொன்னார் அப்படித்தான் செய்யவேண்டியதென்று சொன்னேன். யிதிலே தலை நோவு அதனமானபடியினாலே மேலே போனார். நான் தெரிசனம் பண்ணிவிட்டு விட்டுக்குப் போனேன்.

### 1753௵ மாயுமீ 24௳ ஸ்ரீமுக௵ வையாசிமீ 15௳ குருவாரம்

இத்தனாள் காலத்தாலே யேழு மணிக்கி துரையவர்களண்டைக்குப் போய் கபுறு மத்ததுகள் சொல்லியானவுடனே துரையவர்கள் சொன்னது நாளது வையாசிமீ முதல் தேதி சீனாவுக்குப் போற லெக்குலு (Hercule) யென்கிற சீமைக்கப்பல் வந்து சேர்ந்துதே அந்தக்கப்பல் சீமையிலிருந்து பிறப்படுகிறதுக்கு முன்னுதாக பதிமூணு நாளைக்குப் முன் லீசு ((Lys) என்கிற கப்பல்

பிறப்பட்டு வருகுது அந்தக் கப்பலும் யின்னம் யிரண்டு மூனு நாளையிலே வந்து சேருமென்று சொன்னேமே அந்தக் கப்பல் காலி கொளம்பு (Colombo or Galle) பிடிச்சு வராமல் காத்திறுலே சகிறங்கப்பட்டணம் மூலைக்குப் போய் அவ்விடத்திலிருந்து வருது யின்னம் நாலு நாழிகைக்கு வந்து துறை பிடிக்குமென்றும் யிந்தக் கப்பலிலே ஒபிசியால்மார் உள்பட மூன்னூறு பேர் வெள்ளைக் காறரும் விஸ்தாரமான சரக்குகளும் அனுப்பிவிச்சார்களென்றும் சீர்மையிலே கும்பினியார் மகா சந்தோஷமாயிருக்கிறார்களென்றும் யிதுமுதலான சந்தோஷ வார்த்தைகளாக அவர் சொல்ல நான் அதுக்குத்தக்க உபசாரமாய்ச் சொல்லி யிப்படியாக பேசிக்கொண் டிருக்கிறோம் இதத்துள் பனிரெண்டடிக்கிற வேளைக்கு துரையவர்கள் அழைக்கிறார்கள் யென்று சேவகன் வந்து அழைச்சான்.

நான் போன விடத்திலே நடந்த சமாச்சாரம் வந்ததுக்கு சேலத்து உடையார் பாளையத்து பிடவை வராமல் போச்சுதே யென்று கேட்டார். முராரிராயனுடைய அறுக்காறுகள் போயிருக் கிறார்களே அவர்கள் அவ்விடம் போய்ச்சேர்ந்தவுடனே பொதிகளை யெடுப்பிச்சுக் கொண்டு பிறப்படுவார்களென்று சொன்னேன் அப்பால் போனவுடு யிவ்விடத்திலிருந்து போன தோபேன் (Dauphin) யென்கிற கப்பல் சரக்கேத்திக்கொண்டுபோனது போய்ச்சேர்ந்தது அப்போ அவ்விடத்திலே சரக்கில்லாத வேளையானபடியினாலே நல்ல விலைவித்தது. அதனாலே கும்பினியார் மகாசந்தோஷப்பட்டு யெழுதினார்கள். அந்த சந்தோஷத்தை நான் யென்னவென்று யெழுதப்போறன். என்று யிவ்வருஷமும் விஸ்தாரமானசரக்கு அனுப்பச் சொல்லி யெழுதினார்கள் யென்றும் ஆனால் கும்பினியார் கப்பல்கள் அனுப்பிவிக்கிறோம் என்றும் அனுப்பாமல்போனார்கள். யென்றும் யென்னைத்தொட்டு அட்டியில்லை அவர்கள் கப்பல்களை அனுப்பா மலிருந்தாலும் நான் லான்சோம் (Anson) .இந்தியக்கப்பலிலே விஸ்தாரமானசரக்கை அனுப்பிவிச்சேன். அந்தக்கப்பல் போய் சேர்ந்தால் கும்பினியார் பின்னையும் அத்தியந்தமான சந்தோஷப் படுவார்கள் யென்று சொன்னார். அதுக்கு நான் சொன்னது பிறிஸ்தோல் (Bristol) யென்கிற கப்பலின் பேரிலே யெழுநூத்துச் சிலுவானம் கட்டுயேத்தி அனுப்பிவிச்சார்கள் அது மறந்து போனீர்களோ யென்னமோ வென்றும் அந்தக்கப்பலும் போய் சேர்ந்தால் பின்னையுங் கும்பினியார் .வெகு சந்தோஷப்படுவார் களென்றும் சொல்லி நேரமெல்லாங்கும்பினியார் பேரிலேதான் யென்றும் ஆனால் கும்பினியார் பேரிலே ஒரு நேரமும் உங்கள் பேரிலே ஒரு நேரமும் யிருக்கு தென்றும் சொன்னேன். அது யென்ன யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது கும்பினியார் கப்பல்களை அனுப்பிவிக்குறோமென்றும் அனுப்பாமல் போனது அவர்கள் பேரிலே ஒரு நேரமும் (Blame) மூனுவருஷமட்டுக்கும் கும்பனியார் வியாபார சாபாரம் பண்ணிக்கொண்டிருந்ததுக்கு நீங்கள் வெகு ராச்சியங் கட்டிக்கொண்டு சகல திக்குவிசயமும் பண்ணபடியினாலேயிந்த தோஷத்தினாலே அவர்கள் வியாபார சிந்தனையே மனதிலே வைக்காமலும் அதனாலே கப்பல்கள் அனுப்பாமல்' போனார்கள். அதனாலே அந்த நேரம் உங்கள் பேரிலேயு மென்று சொன்னேன். அப்போ துரைகளண்டையிலே முசே புசேத்தும் முசே பெடுத்தாமும் பின்னையும் ரெண்டொரு கப்பல்க் கப்பித்தான்மாரும் இருந்தார்கள் துரையவர்கள் நகைச்

கிட்டயிருந்த வெள்ளைக்காறர்களுடனே றங்கப்புல்லே மகாபுத்திசாலி யிவனைப் போலே சமயயோசிதமாய் காரியாக்காரியம் அறிஞ்சு யெப்படிப்பட்ட காரியங்களிலேயும் மகா நிறுவாக சக்குத்தியுடனே சபாரஞ்சிதமாய் பேசுரபேரை யேரோப்பாவிலேயும் யில்லே யிந்த இந்தியாவிலேயும் யில்லே யென்று வெகுசாய் சந்தோஷமாய்ச் சொன்னார். அப்பால் நான் பின்னையும் சொன்னது முன் அவுறங்பாதுசா-லூயிசு கத்தோர்சு (Aurangazib-Louis XIV) முதலான ராசாக்கள் ஒவ்வொரு தமஸ்தானங்களை சாதிக்க வேணுமென்று என்ணால் பெகுதனமும் பெலமும் வைத்துக்கொண்டு வருஷக்கணக்காய் சண்டைபண்ணியும் சாதிக்கிறது பிறயாசம் யென்றும் ஒரு விசை யாபுரத்தை (Bizappur) அவுரங்கசீபுபாதுஷா பணிரெண்டு வருஷம் சண்டைபோட்டு வாங்கினார். செஞ்சிக்கோட்டையின் பேரிலே சூல்பக்கார்க்கான் (Zulfaquir khan) விஸ்தாரமாய் பெலத்த பவுல்சுடனே வந்து பணிரெண்டுவருஷம் சண்டைபண்ணி வாங்கினார். அப்படிப்பட்ட செஞ்சிக்கோட்டையை நீர் ஆயிரம் பேர் வெள்ளைக் காறர்களையும் ரெண்டாயிரம்பேர் சிப்பாய்களையும் அனுப்பி மூணே முக்கால் நாழிகையிலே வாங்கிப்போட்டீர். நாசறுசங்கு தக்கன பாதுசா (Deccan Badsha) வாயிருக்கப்பட்டவன் லட்சங்குதிரையும் பத்துலட்சம் வெடுத்தாமத்துடனே (Holmnes) வந்திறங்கினவனை மூணே முக்கால் நாழிகையிலே தலையை வெட்டிவிச்சீர். அப்படிப்பட்ட யோகம் உம்முறது. உம்முடைய சாபத்திலே யிருக்கப்பட்ட பாதரேனுவுக்கு சமானமானதாய் மைத்தராசாக்களை சொல்லப்போகாது யென்று சொன்னதுக்கு துரையவர்கள் யித்தனை பெரியவிசேஷத்துக்கு நான் பாத்திரமல்ல. நல்லதென்று தம்மைச் சொல்லிக் கொண்டு கிட்டயிருக்கிற வெள்ளைக்காறருடனே யிதுவே பிறஸ்தாபமாய்ப் பேசிக்கொண்டிருந்தார். அப்பால் யென்னைப் பார்த்து நீ வீட்டுககுப் போய் சாப்பிட்டுப் போட்டு வறத்தகரையும் அழைத்துக் கொண்டு நீயும் வா—உனக்கும் கோந்திராத்துக்குப் பணத்துக்கு ஒரு தஞைசுப் பண்ணித்தாறேன் யென்றும் கடப்பை நபாபுக்கு வெகுமானம் வைத்திருக்குது. அது சுசாயித்துக்கான் (Shuja-a-Khan) கையில் குடுத்து உன் அண்டைக்கு அனுப்பிவிக்குறேன். அந்தபடிக்கி சாஞ்சாபி பண்ணி பதில் காகிதமும் யெழுதிக்கொடுத்து அனுப்பென்று சொன்னார். நல்லதென்று சலாம் பண்ணி அனுப்பிவிச்சுக்கொண்டு வீட்டுக்குப் போனேன் இத்தனாள் பனிரெண்டுமணி வேளைக்கு முன் 1752 ஆடு செப்தெம்பர் மீ முதல் தேதி சீமை விட்டுப்பிறப்பட்டுது லீசுயென்கிற கப்பல் (Lys) வைத்துப் பிடிந்து பதிஞேரு பீரங்கிப் போட்டான். கோட்டையிலேயும் பதிஞேரு பீரங்கிப் போட்டார்கள். இந்தக் கப்பலிலே யிருபதிணையிரம் மாற்கு வெள்ளி வந்தது. சகலாத்தும் குமல்யெத்தோப்பு தோர் துப்பாக்கி வகையிரா தினிசுகள் யெப்போதும் வருகிறதுக்கும் ரெட்டியாய் யிறங்கி வெள்ளிமாத்திரம் கொஞ்சமாய வந்துதே யென்ன யென்றால் முன்னலே நாசறுசங்கைக் கொன்ற சந்தோஷத்திலே சீமையிரிலயிருந்து கோந்திராத்துக்கு கூட பணம் அனுப்பத்தேவையில்லே யென்றும் நாமே சரக்கு கூட்டி அனுப்பி விக்கிறோமென்றும் கப்பல்களை மாத்திரம் அட்டியில்லாமல் அனுப்பச் சொல்லியும் யிவர் யெழுதி யிருக்கிறபடியினாலே வெள்ளி கொஞ்சமாய் அனுப்பிவிச்சார்கள் யிந்த கப்பலின் பேரிலே துரையவர்களுக்கு யிருபத்திநாலுபேர் குவாடுது வெள்ளைக்காறர்களும் துரும்பேத்தி லூதுகிறதுக்கும் வேலே வெங்களம் செய்யறதுக்கும் யிருபத்திணுலு பேர் வந்தார்கள்.

## 1753ௌ மாயுமீ 27 ஸ்ரீமுகஹு வையாசிமீ 18உ ஆதிவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் தலைநோவு அசௌக்கியமாயிருந்தபடியினாலே கோயிலுக்குப் போகவில்லை. ஒன்பது மணிக்கு கோன்சேலியோரை அழைத்து மைத்துமுள்ள வெள்ளைக்காறர்கள் கோயிலுக்குப் போய்வந்தவுடனே துரையவர்கள் குஸ்துமாஸ்துப்படிக்கு தருவந்து தேகுடிச்சார்கள். அப்பால் துரையவர்களுக்கு கபுறு சொல்லியானவுடனே நான் பிறப்பட்டு யென் காசாக்கச்சேரியிலே வந்தேன்

இத்தனாள் ராத்திரி பத்துமணிக்கு கேழ்விபட்ட கபுறு சிதம்பரம் கோட்டை கவில்மேலே வெள்ளைக் கொடி போட்டுக்கொண்டதாயும் முதாமியா வசமாய்த்தானே கடப்பை நபாவுக்கு குத்தகையாய் சிதம்பரம் சிமையும் மன்னார் கோவில் சிர்மையும் யிருக்கவும் யெப்போதும் குத்தகைக்கி குடுக்கிறபடிக்குப் பணம் நம்முட துரையவர்களுக்கு குடுக்கவும். போனஹு யிவ வருஷம் குத்தகைக்கும் மமுதல்லிக்கான் இங்கிரேசுக்காறர்களுக்கு செல்லுபோக மைத்துப்பணம் குடுக்கவும் சப்தியாய் லட்சம் ரூபாய் குடுக்கவும் யிந்தப்படிக்கி ஒடம்படிக்கை பேரிலே கவுல் வாங்கிக்கொண்டு கோட்டையிலே பிறான்சுக்கொடி போட்டுக்கொண்டதாய் மூசே-மோசேன் காகிதமும் முதாமியா காகிதமும் துரையவர்களுக்கு வந்ததாய் சேதி சொன்னார்கள்.

## 1753ௌ மாயுமீ 28உ ஸ்ரீமுகஹு வையாசிமீ 19உ சோமவாரம்

இதுமுன் நாலாருதரம் துரையவர்களுக்கு நஸ்றிராசா எழுதின காகிதத்திலே அசனுத்தீன்கானை அனுப்பச்சொல்லி யெழுதினதுக்கு யெங்கள் வெள்ளைக்காறர் சறுதாராயிருந்தபடியினாலே அசனுத்திகானுக்குப் பேருண்டாச்சுது யில்லாவிட்டால் அசனுத்திக்கானைப் போலே கையிலே ஆகாதவனில்லை யென்று யிறுமாப்பாயெண்ண மாட்டேனென்று ரொம்பவும் அவனை சின்னப்படுத்தி யெழுதினதாகவும் துரையவர்கள் யென்ன யெழுதியும் நஸ்றிராசா யெங்கள் பவுன்சுக்கு யெசமானில்லாததைக் கேட்டு அவனை யெப்படியும் அனுப்பவேணுமென்று யெழுதினதின் பேரிலே இத்தனாள் துரையவர்கள் அசனுத்திக்கானை அழைப்பிச்சு நஸ்றிராசா அண்டைக்கு பவுன்சு கூட்டிக்கொண்டு போகச்சொல்லி உத்தாரங் கொடுத்ததாய்ச் சொன்னார்கள்.

இத்தனாள் முசேலாசை கொறாக்தாமாக்கி நாத்தன்பது சொலுதாதுகளையும் கூட்டி சிதம்பரத்து அண்டையிலே யிறங்கியிருக்கிற பவுன்சு அண்டையிலே போய் அவ்விடத்துக் காரியங்கள் பந்து பஸ்து பண்ணச் சொல்லி சொல்லி அனுப்பினதாய்ச் சொன்னார்கள்.

## 1753ஆம் மாயுமீ 30உ ஸ்ரீமுக௵ வையாசியீ 21உ புதவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போனவி டத்திலே துரையவர்கள் உச்சாகமாய்ப் பேசியிருந்தார். அப்போ அல்லியு சாயபு (Aulia Sahib) தன்னை அழைப்பிச்சீர்கள் அதனால் தான் வந்து ஒருஉத்யோகமுமில்லாமல் காத்துக்கொண்டிருக்கிறேன் சாகிர் ஆயிரத்தன்னூறு ரூபாய் ரெண்டாயிரம் யிதென்று யெழுதிக் கொடுத்ததுக்கு நல்லது அப்படியே உத்தாரங்குடுக்கிறோம் என்று பதிலுத்தாரஞ் சொன்னார். அப்பால் சயிது சாயிபு வந்து தன் குதிரைக்கு குடுக்கிற சம்பளம் தாலமெதென்கிற கணக்கன் (d' Almeide) நான் மூசே தெ ஒலாந்தோவு (Mr. de Volonte) க்கு குடுக்கவேண்டிய யெழுநூறுரூபாய் கடனுக்குப் பிடிச்சுக்கொண்டு போறான். ஆனபடியினாலே விஞாகப்பிள்ளை பேரிலே மாசாமாசம் வாங்கிக்கொள்ளச் சொல்லி தனக்கா பண்ணி விட்டால் வெகு சகாயம் ஆகயிருக்குமென்று சொல்லிக் கொண்டதுக்கு சந்துதகரூறு பண்ணி அப்பால் அரும்பாத்தை பேரிலே சொல்லிவிடுகுறேன் என்று சொன்னார். அப்பால் அல்லிகான் பித்திசாம் கொண்டுவந்து குடுத்தான். மூசேபுரி தன்னைக் காவலிலே வைத்தும் மயெக்கு அனுப்பிவிச்சபோது யென்-ஆனை குதிரை பவுன்சு-பணங்காசு செத்தவர்கள் பெண்டுகளுக்கு குடுக்கிற சம்பளம் வகையிராசகலமும் மூசேபுரி வசம் பண்ணிபபோட்டு நான் போனேன். திரிச்சிராப் பள்ளியிலே சந்தாசாயபு மழுகிப் போனபோது குதிரைகள் வகையி ராக்கள் முழுகிப்போச்சுதென்றும் மத்ததும் சிலவு சித்தாயமாய்ப் போச்சுதென்றும் யிந்தப்படிக்கிச் சிலவு சொல்லி தீத்துப்போட் டான் யென்று எழுதியிதுகள் மூசே திலார்சுவுக்கு உத்தாரங்கொ டுத்தால் அவரை அழைப்பிச்சுத் தீத்துப்போடுவார் யென்று யெழுதி யிருந்ததைப் பார்த்து மூசே திலார்ஷ். பேர் யெழுதியிருந்ததைப் பார்த்து அவன்பேர் யெழுதினது யென்ன யென்று கோபமாய்ச் சொன்னார். அறுபது பேர் செத்த பேர்களுடைய பெண்டுகள் சம்பளம் குடுக்கயில்லையே அது நிமித்தியம் யெழுதச் சொன்னதை பிரான்சிலே எழுதி வெள்ளைக்காறன் சம்மதி பிசகா யெழுதிப் போட்டான். யென்று மறைத்துச் சொன்னதின்பேரிலே அறுபது பேர்களுக்கு செத்துப் போனவர்களுக்கு நான் சம்பளம் குடுக்க காரியமென்ன மெய்தான் செத்துப் போனவர்கள் பெண்டுகள் யிருக்கிறவர்களுக்கு பாதி சம்பளம் குடுக்கிறது அவனும் செத்தால் அப்பால் குடுக்க கவையில்லை அப்படியிருக்க எந்தப்பெண்டுகள் மயெயிலே யிருக்கிறவர்கள் அவர்கள் செத்தார்களோ யிருக்கிறார் களோ தெரியாது இதுக்கே இருக்கிறவர்களை பெட்டியிலே போட்டுக் கொள்ளுகிறார்கள். யிதல்லாமல் லோதிசும் (Mr. Lotiz) சிறிது நாள் பெட்டியிலே போட்டுக் கொண்டான். அதினாலேதான் பத்துமாய் குடுக்க வாண்டாமென்று தள்ளிப் போட்டேன்யென்றும் சொன் னார். அதுக்கு லோதீசு மெத்தப் பரிசுத்தம் போலேதான் ஒரு ஒரு காசு அறியேன் யென்று சொன்னான். அல்லிக்கானிருந்துகொண்டு யிதுநிமித்தியம் தான் அல்லோ மயெயிலேயிருந்து மறுபடிவந்தே னென்றும் உங்கள் தவுலத்திலே யெல்லாரும் சுகப்பட்டார்கள் நான் மாத்திரம் கெட்டுப்போனேன் யென்று சொன்னான். அதன்பேரிலே துரையவர்கள் முகம் மெத்த சுருங்கி கண்டுது. அந்த சாடை

நான் பார்த்து உடனே அவன் தோத்தாமல் சொல்லிக்கொண்டிருக்கிறான யிவன முன் மயேயிலே யிருந்து வரச்சே யிவனுக்கு யெசமானாக வந்தவனுக்குகூட மேலே போட்டுக்கொள்ள சட்டைககுங்கூட அவகாசமில்லாமல் வந்தவர்களோ யிவனையே தானிலும் உண்டோ அப்படியிருக்க கோடி கோடி ரூபாய் மட்டுககும் கையிருப்பு தனமும் அபுத்த ஆசாரி மகாசுபாவமுமாயி மறுத்தபும் - யிருபது முப்பது லக்ஷத்துக்கு - சாகீர்களும் யெங்கே யிருந்து வந்தது. யிவர் யிப்போ போக்கடிச்சுக் கொண்டது யிங்கே சம்பாதிச்சதா அல்ல வென்று யிவர் முன் மயேயிலே யிருந்து கொண்டு வந்தாரோ போட்டுக்கொள்ளுகிறதுக்கு சட்டை யில்லாமல் வந்தவர் தான் என்று சொன்னதுக்கு துரையவர்கள் சொன்னது மயல்லார் முன்னேயும் நான் பாத்ததுக்குள்ளே வெள்ளைககாறர். துலுக்கர் தமிழர்கள் கோடானகோடி பேருண்டு யிந்த மோனசியேயர் றங்கப்புல்லே போலே புத்திசாலியும் மேல் வருங்கால காரியம் . அறிந்து சொல்லுகிறதும் நடக்கிறதும் காரியத்திலே நிறுவாகமும் ராசாக்களுடைய சாஸ்தானங்கள் நிறுத்தவும் அழிக்கவும் யிருக்கிற சக்தி ஒருத்தரையும் கண்டதில்லை யென்று சொன்னதுக்கு நான் ஆசாரம பண்ணி அருமை பெருமையைப பத்திச்சொல்லுகிறீர்கள் உங்கள் அதிருஷ்டடம் வந்து உங்களுடைய பாதமேளுஞ்சு சேர்ங்கினவர்கள் பாதுசா பட்டம் பண்ணுவார்கள் அப்படிப்பட்ட அதிருஷ்டசாலி யுனுடைய அருமை யெண்பிச்சுக்கொண்டவனக்கு சகலப்பிறதாப கீர்த்திப் பிறதிஷ்டை வருகிறதுக்கு ஆச்சரியமல்லயென்று சொன்னதின் பேரிலே வெகு சந்தோஷமாய் அல்லிக்கானைப்பார்த்து செத்தவர்களுடைய சம்பளமுங்குடுக்கச் சொல்லுகிறேன் உன்னையும் வெகு அயிசுவரியவந்தனாக்கிப் போடுகிறேன் என்று சொல்லு மூசே புரியையும் போய் உன்னுடைமையைக் கேட்டு வாங்கிக் கொள்ளு அவன் குடாவிட்டால் நான் தாக்கீது பண்ணுகிறேன். யென்று சொன்னார். அப்பால் யென்னைப்பார்த்து சென்னப் பட்டணம் கோவறுணோர் மேஸ்தர் சாண்டரசு செத்துப்போனானும் அது நிமித்தியம் தானும் மேஸ்தர் யிட்டார்க்கு (Mr. Stark வை சென்னப்பட்டணத்துக்கு அழைப்பிச்சுது. மெய்தானோ வென்று கேட்டார். லோதீசு யென்கிற தோஸ்து மகம்மது சொன்னான் மெய்தான் மயிலாப்பூரிலேயிருந்து ஒருத்தன் வந்தவன் சொன்னானென்று சொன்னான் அதுக்கு மனுஷன் சாகாமலிருக்கிறது ஆச்சரியமேயல்லாமல் சாகுறது ஆச்சரியமல்லயிப்போ பிறக்கிற குழந்தை செத்துப்போகச்சே அன்பது வயது சென்றவன் செத்துப் போறதுயென்ன ஆச்சரியம் ஆனால் நான் கேழ்விப்பட்டது வியாதி யுடனே யிருக்கிறேனென்று கேழ்விப்பட்டதுண்டு மேஸ்தர் யிட்டார்க்கு (Mr. Stark)வை அழைப்பிச்சதாய்ச் சொன்னார்களென்று சொன்னேன். அதிலே மூன் நாகப்பட்டணத்திலே சிறிது வற்த்தகர் கையிலே பதக்கம் றத்தினங்கள் நத்துவை வைக்குறோமென்று காண்பிச்சு அப்பால் அந்தச் சிமிளிலே கல்லுகளை வைத்துப் போட்டு வறட்டுப்பண்ணி ஓடிவந்து காரைக்காலிலே இருந்த சவரி பிள்ளை யென்கிற கிறிஸ்துவனொருத்தன் யிவ்விடத்துக்கு வந்து திருச்செல்வருபபுராணம் சொல்லிக்கொண்டு யிருந்தான் எவன்பேரிலே முன்யிவன் மோசம் பண்ணவற்தகர்கள் வந்து காரைக்காலிலே மூசே ரிஷித்துக்குச் (Mr Richie) சொல்லி அவன் காகிதம் வாங்கிக் கொண்டு வந்து - யிந்தவூரிலே துரையவர்கள் சின்னதுரை

அவர்களுடனே சொல்லிக் கொள்ள முசே பெருத்தல்மி (M. Barthelemy) காரைக்காலுக்கு முன் மார்கழிமீ வெகுளித்தை யிலே போகச்சே அவரை அந்த சம்பந்தி அவ்விடத்திலே நடந்த படியினாலே அங்கேதானே விடங்கி நித்துப்போடச் சொல்லி அந்த நாகப்பட்டணத்து வற்த்தகர்களை முசே பெடுத்தல்மி பிறகே போகச் சொன்னார்கள் யிவனைப்போகச் சொன்னதுக்கு யிவன் போகாமல் கிறிஸ்துவனானபடியினாலே பாதிரிமார் அம்மாள ஆசாரவிலே யிருந்து அந்த வற்த்தகர்களை யிவ்விடத்துக்கு அழைப் பிச்சுக்கொண்டு தான் மோசம்போய் சீட்டெழுதிக்கொடுத்தேன் வைத்தவன் தஞ்சாவூரிலிருந்து ஒரு கம்மனச்சி வந்து யெங்கள் வீட்டிலே யிருந்து மோசம் பண்ணிப்போன காரியம யென்றும அதுக்கு அந்த வற்த்தகாள் கையால் யிருக்கிற சீட்டை வாங்கிக் கொள்ளத்தக்கதாக பிறயத்தனம் பண்ணி பாதிரிகளைக்கொண்டும் மதாமைக் கொண்டும் துரைக்கும் சின்னதுரைக்கும் சொல்லி விச்சு யிந்தனாள் துரையவர்களுக்கு ஒரு பித்தி சாமெழுதி முசே பெடுத்தல்மிக்கும் யெழுதியனுப்பி அந்த வற்த்தகர்களை யிவ்விடத் துக்கு அழைப்பிச்சு தீர்ப்பிக்கவேணுமென்றும் பித்திசாமெழுதி குடுத்ததுக்கு முன்னே யிந்தக்காரியம் முசே பெடுத்தலிமி (Mr Barthalemy) அண்டைக்குப் போய் தீத்துக்கொள்ளப்போகாத அல்லது முசே செம்போலு Mr. St-Paul டனே போய் சொல்லிக் கொள்ளப் போகாதா திருடனவன் யிவனென்றும் பின்னையும் மோசம் பண்ணின சாடையைச் சொல்லி தூக்கிப்போட வேணுமென்று கோபம் பண்ணினவிடத்தில் தோஸ்து மகம்மதும் அப்புமதாம் சொல்லச் சொன்னார் யென்று சொன்னதின்பேரிலே நல்லது முசே செம்போலுக்குச் சொல்லி முசே பெடுத்தலிமிக்கு யெழுதி அனுப்பிவிக்கச்சொல்லி யெழுதியனுப்பச்சொல்லி அப்பைத்தானே போய் சொல்லச்சொல்லி அனுப்பினார். அந்த மட்டுக்கும் அப்புமுசே செம்போலு (Mr St-Paul டனே போய்ச் சொல்லப்போனான். அப்பால் துரையவர்கள் மேலே யெழுதிப்போனார்கள். நான் யென்காசாக்கச்சேரியே வந்தேன்.

## 1753ஞு ஜூன்மீ 6உ ஸ்ரீமுகஞு வையாசிமீ 28உ புதவாரம்

துரையவர்கள் சலாபத்துசங்குவுக்கு காகிதமெழுதுகிறதாகவும் கற்னாட்டகம் சாத்துல்லாக்கான் (Saadatul khan) நாளையிலே நிசாமுக்கு யென்ன கொடுத்தார்களோ அந்தப்படி கொடுக்க யிசாரா தீத்து வாங்கிக்கொள்ள காகிதம் ரெண்டு மூணுநாளாய் பிடிச்சு யெழுதுகிறதாய் சேதி சொன்னார்கள். சாதுல்லாகான் நாளையிலே யிசாராயென்ன வென்றும் மகம்மதாக்கல் (Muhamub-tavakal) முதலான பேர்கள் கேட்டதாகவும் பனிரெண்டு லக்ஷம் நிசாமுக்கும் மருட்டியருக்கும் மூணுலட்சமும் தறுபாறு கறுசு ரெண்டு லட்சம் ரூபாயும் திரிச்சிராப்பள்ளி தஞ்சாவூர் பேஷ்க்கழு அலாயிதா நிசாமுக்கு குடுத்துவிடுகுறது யிதல்லாமல் நிசாமண்டைக்கு சாதுல்லாக்கான் ரெண்டு மூணுதரம் போய் பெட்டிவாங்கிக் கொண்டு பாரிக்கத்து வாங்கிக்கொண்டு வந்தபோது கோடி ரூபாய் மட்டுக்கும்

ரிவெ நஸ்டென்று யிப்படியாக சொன்னதாயும் அப்பால் அன்வறுதி கான் முப்பந்தஞ்சுலட்சம்ருபாய் தீத்துக்கொண்டு நிசாமுக்கு கொடுத்து வந்ததாகவும் சொன்னதுக்கு யிதெல்லாம் கேட்டுக்கொண்டு சாதுல்லக்கான் நாளேயிலே குடுத்தபடிக்கு குடுக்க யெழுதுகிறதாய்ச் சேதி சொன்னார்கள். துரையவர்கள் ரெண்டு மூனுநாளாய் சலாபத்து சங்குவுக்கு முசே புசி (Mr. Busy) மறுபடி போனமேலே அவனுக்கு காகிதம் யெழுதுகிற அலுவலேத் தொட்டு யிருக்கிறதாச் சொன்னார்கள்.

## 1753வரு ரூன்மீ 8உ ஸ்ரீமுகவரு வையாசிமீ 30உ சுக்கிறவாரம்

இத்தனாள் காலந்தாலே துரையவர்கள் பேறுமணிக்கு சின்ன துரை ஓபிசியால் வகையிராக்களுடனே கோயிலுக்குப் போய் பூசைக்கேட்டு வந்து பெரியதுரை சின்னதுரையும் மைத்தப் பேர்கள் ஓபிசியால் மார்களும்கூடி கொவற்ணமாம் தாழயிருக்கிற சாப்பிடுகிற பெரிய சாலேயிலே மேசை போட்டு கோன்சேல் கூடினார்கள். அப்பால் மயே கொடுதுகுவாடுதுலே யிருக்கிற சாற்சந்துவைப் (Seargent) போய் யேழெட்டு நாளைக்குமுன்னே வடக்கு யாசற்படியிலே திருவீதிக் கோட்டையிலே அகப்பட்ட யிங்கிறேசுக்காறர்களை காவல் வைத்திருந்தவிடத்திலே அந்த வாசற்படி குவாடுதுலே யிருக்கிறவர் களில் ஒரு பிறஞ்சு சொலுதாது கையிதுலே யிருக்கிற இங்கிறேசு சொலுதாதை பேச்சுப் பேச்சாய்ப் பேசச்சே குத்திப் போட்டான். அவனே துக்கிப்போடவேணும் யென்று கேட்டு தீர்வையிட்டதாக கோட்டைக் கிட்டங்கியிலே யிருக்கிறவனே அழைத்துவரச் சொல்லி அனுப்பிவிச்சார்கள். அந்த சார் சந்து போய் அந்தச் சொலுதாதை கசோத்திலே போட்டிருந்தவனே (அழைத்து வரச்சொல்லி அனுப்பி விச்சார்கள்). விட்டு பின் கட்டாய் கட்டி வந்து கோன்சேலிடத்திலே கொண்டு வந்து விட்டார்கள். அப்பாலவனையும் கேட்டு வடக்கு வாசற்படி யண்டையிலே தூக்கநிஷ்கருஷை பண்ணி கையெழுத்துப் போட்டு அப்பால் கோட்டைக் கோயிலிலே ஆத்துமத்துக்கு அடுத்த காரியங்களே சடங்குகளே முடிச்சுக்கொள்ளச் சொல்லி கோயிலிலே கொண்டு போய்விட்டார்கள். அப்பால் துரையவர்கள் கோன்சேல் கலேந்து தேகுடிச்சு ஆன பிற்பாடு நான்போய் கபுறு சொல்லிப் போட்டு யென்காசர்க்கச்சேரியே வந்தேன்.

காலத்தாலே தீர்வையிட்ட சொலுதாதை விறுதாவாய் யிங்கரீசுக் காறர்கள் நிமித்தியம் கொல்லக் கொடுக்க வேணுமா யென்று யோசனேபண்ணி அஞ்சுமணிக்கு வடக்கு வாசற்படி யண்டையிலே தூக்கப் போருப் போலே கொண்டு போற சடங்காம்படியே வழியிலே நிறுத்தி நிறுத்திக் கொண்டு போய் இருட்டிறப்போலே தூக்கு மரத்தடியிலே கொண்டுபோய் நிறுத்தி கழுத்திலே கயற்றைப் போட்டு அப்பாலவனே விட்டு. பல்லக்கிலே போட்டு மூடி யிஸ்பத் தாலிலே (Hispital) அனுப்பிப் போட்டு தூக்கிளுமென்று காவலிலே யிருக்கிற இங்கிறேசுக்காறர்களுக்கு யெண்பிச்சார்கள்.

முந்தாம்நாள் ரூத்திரி 'மயிசூரார் நந்திராசாவண்டையிலிருந்து துரையவர்களுக்கு குடுக்குறேமென்ற நாலேந்து லக்ஷம் ரூபாயிக்கு ஆக மூணுலட்சம் ரூபாயிக்கு உண்டிக்கை வந்ததாகவும் அந்த மூணுலட்சம் ரூபாயிக்கும் ஒன்றரை மாசத்தையிலே மூணுலட்சம் ரூபாயும் குடுக்க பிக்கன்சி குமாஸ்தா ஆசாரும் தறுவாடி பேரிலே யெழுதி வந்ததாகவும் அந்த உண்டிகையைப் படிச்சுப் பார்த்து தவணை யெழுதின தென்ன வென்றும் மயிசூர் வெங்கிட்டநாறணைப் பய்யனை கோபிச்சுக்கொண்டதாகவும் அவரிருந்துக்கொண்டு நான் வைக்கல் யென்னைக் கோவிச்சுக்கொண்டதினாலே காரியமென்ன அங்கேயெசமான்கள் யிருக்கிறவர்கள் அப்படி யெழுதினால் செய்ய வேண்டியதென்ன யென்றும் உண்டிக்கை லக்ஷாந்தரத்துக்கு யெழுனதில் தவணையில்லாமலிருக்காது, யென்று சொன்துக்கு யெங்கள் பவுன்சு யிருக்குதே அதை வந்து விடச் சொல்கிறே மென்றும் உண்டிக் கையைக் கிழிச்சுப்போடுறே மென்றும் வெகுசாய் கோவிச்சுக் கொண்டதுக்கு உங்களுக்கு யெப்படி செய்து கொள்ள வேணுமோ அப்படி செய்துக்கொள்ளுங்கோ ளென்று சொன்னதின் பேரிலே துரை பெண்சாதியிருந்துக்கொண்டு நான் தெரியப்படச் சொல்லுகிறேன் நீர் போமென்றும் மயிசூர் வைக்கில் வெங்கிட்டநாறணைப்பய்யனைப் போகச் சொன்னதாகவும் அதின்பேரிலே துரையவர்களுக்கு நேத்தய தினம் மதப்புத்தமாய் அகப்பட்டதை விட்டுப்பறக்குறத்தின் பிறகே திறியுரதா வென்று வந்ததை சுத்துகிறதே காரிய மென்றும் நீத்துக்கொண்டு தவணைக்குள்ளாகத்தானே குடுத்துவிட வேணு மென்று புக்கன்சி குமாஸ்தா தாறுவாடியைக்குடுக்கச் சொல்லி கேட்டதாகவும் .அவன் · தவணைப்படிக்கே அல்லாமல் மைத்தப்படி யென்றாலே வொன்றும் செய்யப்போகாது யென்று சொன்னதுக்கு அவன் பேரிலே கோவிச்சுக்கொண்டு உண்டிக்கையை கிழிக்கப் போய் மறுமடி மனதை தப்புதம் பண்ணிக்கொண்டு போகச் சொன்னதாய் சேதி கேழ்விப்பட்டேன்.

யிதல்லாமல் முராரிராயனுக்கு லட்சத்து யிருபத்தையாயிரம் ரூபாய் கொடுக்கவேண்டியதுக்கு சம்பளம் ஆய்போய் பதினொந்து நாளாகுதென்று ரொம்ப சுறுக்காய் முராரிராயன் யெழுதிஅனுப்பின தாகவும் முகுந்தராயனும் வந்து துரையவர்களை நித்தியம் கேழ்க் கிறதாயும் றுரையவர்கள் பாப்பய்யப் பிள்ளையைக்கொண்டுவரச் சொல்லி சுறுக்குப் பண்ணுசிறதாகவும் சேதிசொன்னார்கள்,

இந்நாள் சாயங்காலம் முசே மேசேன் கொமாந்தாம் விருத்தாசலம் கோட்டை யிங்கிறேசுக்காறர் வசமாயிருந்ததை வாங்கிக்கொண்டாரனென்று துரையவர்களுக்கு யெழுதிவந்ததுக்கு மறு உத்திரம் அந்தக் கோட்டையைப் பிடிச்சுப்போடச்சொல்லி யெழுதி யனுப்பிவிட்டார்கள். அந்தக் கோட்டையிலே யிருந்த யிங்கிறேசுக்காறர்கள் சனம்—15—பதினைஞ்சு தமிழப்பாளையம் சனம் -- 200 — இறுநூறு சட்டைக்காறர் சனம்-15 — பதினைஞ்சு யிந்தமட்டுக்கும் யிருந்தார்கள்யென்று சொன்னார்கள்.

### 1753ஞ ஜூன்மீ 12௳ ஸ்ரீமுகஞ ஆனிமீ 3௳ அங்காரகவாரம்

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி இங்கிரேசுக்காறர் வசமாயிருந்த கள்ளக்குறிச்சியை நம்முடைய பிறான்சுக்காறர் மனுஷர் வாங்கிக்கொண்டதாய்ச் சேதி வந்துசொன்னார்கள்.

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி முதாமிய மனுஷர்கள் வந்து லட்சம் ரூபாய் கொடுத்து பர்காணா தங்கள் வசமாயிருக்கவும் பேசத்தக்கதாக ஒரு துலுக்கன் சிதம்பரத்திலிருந்து வந்ததாய்ச் சேதி சென்னார்கள்.

### 1753ஞ ஜூன்மீ 21௳ ஸ்ரீமுகஞ ஆனிமீ 11௳ குருவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் மத்துமுண்டான கோண்சேலியோர்கள் வகையிறாக்கள் சக்கிறமேந்து (Sacrement) பண்டிகையானபடியினாலே நற்கருணை யெழுந்தருளப்பண்ணிவிச்சுக் கொண்டு வரிசையாய் சொலுதாதுகளப்போ நேத்து துப்பாக்கிலே போட்டவாக்கிலே கூடவர யெழுந்தருளப்பண்ணிக் கோயிலுக்குப் போய் அப்பால் பூசைக் கேழ்க்க மூனுதிரம் பீறங்கிசுட்டு நாலேந் தாம் தடவை சுட்டவுடனே கோயில் பூசை முகிந்து வந்து கோவற்ணமாம் தாமுவந்து யெல்லாரும் - தே - குடிக்கிறவர்கள் தே--குடிச்சும் கப்பே குடிச்சானவுடனே துரையவர்களும் மதாமும் யெழுந்திருந்து மேல் வீட்டின்பேரிலே போனார்கள். நானும் யென்கச்சேரியே வந்தேன்.

இத்தனை சுறுக்கிலே போன தென்னவென்றால் சலாபத்துசங்கு சயிதுல்லாக்கான் வகையிறா பவுன்சுடனேகூட அபறங்காபாத்துக்குப் போனார்கள் போலேயும் நம்முடைய பிறான்சுக்காறர் தாலுக்கு முசே குப்பி வகையிறா வெள்ளைக்காறர்களும் சேக்குயிபறீம் வகையிறா துலுக்கர் பாறுக்காறர்களையும் அயிதராபாத்திலே போயிருக்கச் சொன்னதாயும் முசே புசியும் அயிதராபாத்திலே தானே யிருக்கிறதாயும் பின்னையும் யென்ன விபரீதச்சேதி யெழுதிவந்ததோ அந்த விசனத்தின்பேரிலே பதில் காகிதங்கள் அவ்விடத்துக்கு யெழுதுகிற நிமித்தியம் போனதாய்ச் சொல்லிக் கொண்டார்கள்.

### 1753ஞ ஜூன்மீ 22௳ ஸ்ரீமுகஞ ஆனிமீ 12௳ - சுக்கிறவாரம்

பதினொரு மணிக்கு துரையர்கள் அண்டைக்குப் போனவிடத்திலே துரையவர்களிருந்த அவசரம் யென்னவென்றால் திருக்கிராப் பள்ளியிலே முசே அஸ்துருக்கு (Mr. Astruc) யென்கிற வெள்ளைக் காறனும் முசே லவாலாந்தே - யென்கிற தோணப்பறங்கியும்

முன்னூறு சொலுதாதுகளும் பாறுக்காறர்கள் பீரங்கிகள் வகையிரா மயிசூர் தளவாயின் நந்திராசா திருச்சிராப்பள்ளிக் கோட்டை வாங்கவேண்டுமென்று சீரங்கத்திலே யிறங்கிலவனுக்கு மத்தத்துப்போன கோணப்பறங்கி மூசே அஸ்தருக்கு வென்சிடு கொமாந்தாமும் ரெண்டு பேர்களும் தங்கள் பவுன்சு பீறங்கிகள வகையிராக்களுடன் நந்திராசா பவுன்சு சிறிதும கூட்டிக்கொண்டு காவேரிக்கு அக்கரை சந்தைப்பேட்டைமலை யென்றிருக்கிறதாம் அங்கே யிறங்கி மோறசாபோட்டுக்கொண்டு கோட்டையின பேரிலே சண்டைப்போட்டு யிறங்கியிருந்தார்கள்மென்றும் வெட்டு நாள் தாதுபிராதுயில்லாமல் மமுதல்லிக்கான் யிங்கிரேசுக்காறர்களும் சும்மா அசரப்போட்டு யிருந்து யின்று யெட்டாம் நாள் ராத்திரி மமுதல்லிக்கான் பவுன்சும் யிங்கிலீசுக்காறர் பவுன்சும் வந்து நம்முட கோணப்பறங்கி தண்டின் பேரிலே வந்து விழுந்த விடத்திலே நிசிருத்திரியான படியினாலேயும் யேமாரியிருந்தபடியினாலேயும் யெல்லாரும் தூங்குற சமையமானபடியினாலேயும் யெதிரிகளின் பேரிலே சண்டை குடுக்கிறதுக்கு யில்லாமலிருக்கிற வாக்கிலே கண்டவாக்கிலே அசப்பட்டவர்களும் யிதுவும் அல்லாமல் அவர்கள் சுட்ட துப்பாக்கியிலே செத்தவர்களும் யிந்தபடி நாலுவிதமாய் சேதப்பட்டுப்போய் தப்பினவர்களெல்லாம் தட்டுத தடுமாறிப்போய் சிரங்கம் சேர்ந்தார்கள் அந்தச் சேதியிலே நந்திராசாக் கேட்டு கோணப்பறங்கியையும் கொமாந்தமாயிருந்த மூசே அஸ்தரு யென்கிறவனையும் அழைப்பிச்சு யேமாரியிருந்து பவுன்சுவையும் சகலசாமான் பீறங்கிகள் துப்பாக்கிகள் டேரா வகையிராக்கள் அனைத்தையும் சத்துருக்கள் கையில் ஒப்பிச்சுப் போட்டு வந்தீர்களென்று மெத்தக்கோபம்பண்ணி அப்பால் ராய கோபுரத்தண்டையிலே ஒரு நாலுகால் மண்டபம் யிருக்குதாம் அதிலே போயிருக்கச் சொல்லி உத்தாரங் கொடுத்ததாகவும் மமுதல்லிக்கான் பவுன்சும் யிங்கிரேசுக்காறர்கள் பவுல்சும் அந்த மோறசாவிலே நெருப்பைக் கொளுத்திப்போட்டு அகப்பட்ட பீறங்கிகள் துப்பாக்கிகள் ஆனைகள் குதிரைகள் கொண்டு போகத்தக்கதாக வுள்ளதைக்கொண்டு கொண்டு திரிச்சிராப் பள்ளிக் கோட்டையே போய் விட்டார்கள் யென்கிற கபுறு துரை அவர்களுக்கு வந்து அப்போ முராரிராயன் குமாஸ்தாக்கள் வகை யிராக்களை முகுந்தராயனுடன் அழைப்பிச்சு உங்கள் பவுன்சு வாங்கிவந்தபடியினாலே யல்லோ அவர்கள் வந்து விழுந்தார்கள் நீங்கள் உளவாயிருந்தீர்களென்று மெத்தவும் கோபம் பண்ணுகிற அவசரத்திலே நான்போய் கட்டுப்போட்டு முட்டை குடுத்து ஆசாரம் பண்ணி கபுறு சொன்னவுடனே சகலாத்து யெடுத்துக் கொண்டு போகயில்லை.

இத்தனாள் சாயங்காலம் புதுச்சேரிக்கு யெழுதியனுப்பச் சொல்லி சயிதுலசுக்கார்கான் சலாபத்து சங்குவை அபரங்காபாத்துக்கு அனுப்பி வெள்ளைக்காறர்களுக்கு கொடுக்க வேண்டிய சம்பளம் யெட்டு லக்ஷம் ரூபாயிருக்குது அதுக்கு கற்னூட்டக் சுபா சம்மதி அன்பது லட்சம் ரூபாவரவேணும் அதிலே வாங்கிக் கொள்ளச் சொல்லியும் மத்த ரூபாயை சீக்கிரமத்துக்கு அனுப்பச் சொல்லியும் யிதல்லாமல் — மச்சி — லீபந்தர் நிமை குண்டூர்

பற்காரனவனையிரா விஸ்தாரமான சீமையிருக்குது அந்தச் சீமைப் பணங்கள் வரவேணுமென்றும்சொல்லி வெள்ளைக்காறர்களையும் அயிதராபாத்திலே போயிருங்கோள் அல்லது மச்சிலிபந்தரிலே போயிருங்கோள் வருகுகூலமான படியினாலே வேணுமானால் அழைப்பிச்சு சொல்லுகிறோமென்று சொல்லி போகச்சொன்னதாகவும் அந்தச் சேதிக்கி முசே குப்பி துரையவர்களுக்கு யெழுதி அனுப்பினதாய் அந்தக்காகிதம் யிந்தனாள் துரை அவர்களுக்கு வந்துபடிச்சுக் கொண்டார் யென்று சொன்னதுமல்லாமல் முசே குப்பி முதலான நம்முடைய பிறஞ்சு பவுஞ்சு அயிதராபாத்துக்கு வாறதாய் ரெண்டும் மச்சிலிபந்தருக்கு யிப்பால் பட்டதாய்ச் சொன்னார்கள்.

## 1753௵ ஜூன் ௴ 23௳ ஸ்ரீமுக௵ ஆனி௴ 13௳ சனிவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போன விடத்திலே துரையவர்களுக்கு கபுறு சொல்லியானவுடனே—சென்னப் பட்டணம் யிங்கிறேசுக் கும்பினீர் சீமையிலே முறிஞ்சு போகவேணும் அதினாலே யிங்கிறேசுக்காறர்களுக்குப் பணம் வரயில்லை. முசே மெதோர்—பெண்சாதிக்கு (Madame Medeiras) யென்பதினாயிரம் விராகன் கொடுக்க வேணும் யிதல்லாமல் அரண்மனைக்காறர்கள் தமிழாள் முதலான பேர்களுக்கு வேகு திரவியம் கொடுக்கவேணும் யெல்லாருக்கும் மேஸ்தர் சாந்தரசு (Mr. Saunders) தாறேன் தாறேனென்று போக்கு சொல்லிக் கொண்டு வருகிறான் என்று துரையவர்கள் சொன்னதுக்கு மெய்தான் யென்று சொல்லி நேத்துக்காலத்தாலே இங்கிறேசுசீமைக் கப்பல்கள் யிதுவழியாய் சென்னப்பட்டணத்துக்குப் போச்சுதென்று சொன்னேன். மெய்தானிதிலே தெரியும் சென்னப்பட்டத்துக்கு வேறே துரைத்தனம் வாறதென்று தொரையவர்கள் சொன்னார்கள். யிதினாலே சீமைகப்பல் கணுது யென்று கபுறு சொன்னார்கள். மேலே போனார் நான் யென் கச்சேரியே வந்தேன். இத்தனாள் லபிறியேனு (Saint Priest) என்கிற சீமைக்கப்பல் சீமை விட்டு தெசம்பர்மீ பிறப்பட்டு யித்தனாள் பனிரெண்டுமணி வேளைக்கி கொண்டு வந்து வைத்துப் பிடிச்சான் பீரங்கிகளும் போட்டு கப்பல் கப்பித்தானும் யிறங்கினான் கப்பித்தான் பேர் முசே ஓம்மோபெரு (Mr. Haumont) பெருவயிறன், குட்டையன்.

இத்தனாள் சாயங்காலம் சாம்சுலாம் (St. John) பண்டிகையென்கிற கபுறு ஆனபடியினாலே தொரையவர்கள் மத்துமுண்டானகோன்சேலியோர்கள் பாதிரிகள் முதலான பேர்கள் படிச்சுக் கொண்டு வந்து கோட்டைக்குத் தென்னண்டையிலே—சொக்கப்பானைக் கொளுத்திற வாடிக்கைப்படிக்கி கொளுத்தி பீறங்கிகள் சுட்டு வில்ருவாயி கூப்பிட்டு (Vive le Roi) அப்பால் கொஞ்சம் வாணம் வித்தைப் பார்த்து அப்பால் கோட்டையை துரையவர்கள் போனார்கள். மைத்த கோன்சேலியோர்கள் அவரவர்கள் வீட்டேப் போனபேர்களும் உண்டு. துரையுடைய பெண்சாதி பெரிய பண்டிகையான படியினாலே அவளை மெனவப் போனவர்களுமாய்ப் போனார்கள்.

ஆனால் துரையவர்கள் சபையிலே வந்து நின்றபோதும் அப்பால் பாதிரிகள் அவர்கள் வேதபாடல்படிக்கிப் படிச்சான பிற்பாடு தீவட்டியை வாங்கிக் கொண்டுபோய் சொக்கப்பானைக்கொளுத்தி வந்து மறுபடியும் வந்து பாடலாய் பாணவித்தைப் பார்க்கிற மட்டுக்கும் ஒரு நாழிகை தேசகாலம் மட்டுக்கும் நின்றாரே அப்போது துரையைப் பார்த்தால் முகத்திலே களையென்கிற ஞமதேயமில்லாமல் அவர் வந்து நின்ற சபையும் சோபிச்சு யிராமல் பாழடஞ்சுகிடந்தது. யிதல்லாமல் தொரை அவர்களும் பத்திலே யொருபதினென்றாய் கண்டுதே அல்லாமல் முன்னையைப்போலே முகத்திலே மகாராசாக்களையும் தேஜசுமில்லாமல் லக்ஷம் பேருக்குள்ளே நின்றாலும் அந்தலஷ்ஷம் பேருக்கும் சறுதாரென்பிக்கிற லக்ஷணமும் அந்த சபைக்கு வந்து லதமிண்டவமாகுறதாக யிருந்துதே—அந்த ராசக்களை காண்பியாமல் போச்சுதே. யிதென்ன அதிசயம் யாதொரு அசுப யேஷியமில்லாமல் யிப்படி லக்ஷ்மிகரம் வாங்கிக்காண காரியமென்ன என்றும் அதிலே யும் யிந்தக் கப்டல் மத்தியானம் வந்துது. அதன்பிற்பாடுதான் விசேஷிச்சு யிப்படிகளை வாங்கிக் காணுது யிந்தக் கப்பலிலே யாதொரு மனதுக்கு கிலேசமானசேதி வந்து யிருக்க வேணுமென்று நான் யோசினைப்பண்ணிக் கொண்டு ஒரு கோன்சேல்காறர் ஒருத்தர் யிந்த நேரத்திலே நேரிட்டார். அவரை யிந்தக்கப்பலிலே யேதாகிலும் விந்தை சேதி கேழ்விப்பட்டதுண்டா வென்று சமுகியாய்க்கேட்ட துக்கு லபே- (Abbe) யென்கிற பாதிரியார் துரும்பேத்து-முதலான சங்கீதவாத்தியங்களும் ஒப்போராலாடுகிற பெண்கள் சிறிது பேர் களும் பெரியநாழிகை வட்டமுதலானது யிதுகளெல்லாம் பரீசிலே யிருந்து முஸதீதுபண்ணிக்கொண்டு கடற்கரையோரம் லோரியாம் வநது சேர்ந்து யிந்தக் கப்பலின் பேரிலே யேறப் பயணமாயிருக்கச்சே லபே-பாதிரியை அதிசீக்கிறமாய் வரச்சொல்லி பரீசுப்பட்டணத்தி லுக்கிற துரையவர்கள் அண்ணன் குமாரன் முசே பக்கான்குர் (Mr. Bacquencourt) யென்கிறவர் யெழுதியனுப்பிவிச்சதாயும் அதன் பேரிலே அங்கே யிருந்து யெழுதிவைத்த சுறுக்குசாடையினாலே வாயித்தியங்கள் முதலான சான்சாமான்களும் அதுவாசிக்குற சங்கீதக் காறர்களும் ஒப்போராவிலென்கிற நாட்டியமாடுகிற தேவடியாக் களும் தொலோசு முதலான சாமானுகளும் பெரிய ஓற்-லோசு யிவ்விடத்திலே செய்யத்தக்கதாக வருகிற மேஸ்திரி முதலான பேர்கள் வகையிராக்களேயும் தான் வருகிற மட்டுக்கும் யிந்தக் கப்பலிலே யேறவாண்டா மென்று நிறுத்திப்போட்டு பரீசு யென்ற பட்டணத்துக்கு அஞ்சல் வண்டியின் பேரிலே போறபோதுதான் மேலே யெழுதப்பட்ட சாமானுகளை யெல்லாம் முஸ்தீப்பு பண்ணிக் கொண்டு பரீசு பட்டணம் விட்டு லோறியாம் வந்து சேர்ந்த லசேம் பிரியேலு —(Saint Priest) யென்கிற கப்பலிலே யேறப் பயணமாயிருக்கிற வேளையிலே பரிசிலேயிருந்து அஞ்சலிலே குதிரைக் காறர்கள் காகிதங்கொண்டு வந்து கொடுத்து தானும் அஞ்சல் குதிரையின் பேரிலே அதித்துரிதமாய்ப் போறசேதியும் யெழுதி அனுப்பிப்போட்டு அவன் பரீசுக்குப் போன அஞ்சாறு நாளைக்குப் பிறப்பாடு பிறப்பட்ட கப்பலானபடியினாலே அவன் பரீசுக்குப் போகவும் வரவும் அங்கே ஒரு நாளிலிருந்தும் வந்தாலும் யிருபது நாள் மட்டுக்கும் செல்லுமானபடியினாலே யிந்தக் கப்பல் வந்து விட்டது அந்தக்காகிதத்திலே யெதுகாரிய நிமித்தியம் அவரை வரச் சொல்லி அங்கே யிருந்து யெழுதி வந்துதோ—அது வெளிக்கு

ஒருத்தருக்கும் தெரியாது. தான் போறவன் சாமான்களையும் மனுஷர்களையும் யித்தக் கப்பலிலே யேத்தாமல் நிறுத்திப்போட்டு போனதினாலே யென்னமோ ஒன்று அதுக்குள்ளேயிருக்கு தென்றுப் போலேயும் அந்தப் பாதிரி லபே–எழுதின காகிதம் யித்தக் கப்பலிலே வந்து துரையவர்கள் பார்த்துக் கொண்ட பிற்பாடு உச்சாகமில்லாமலிருக்கிறாரென்று காரியகூட்சமம் தொரைக்கு யெழுதி வந்துதோயில்லையோ வென்று மிப்படியாக வந்தது. அதைத்தொட்டு துரையவர்கள் பகலைக்கு மேலாக மெத்தவிசனமாக யிருக்கிறாரென்று சொன்னான். பரிசுக்கும் லோறியாமுக்கும் யெத்தனைக்காதமென்றும் கேட்டு வெள்ளைக்காறர் காதம் நூத்திருபதுக்கு தமிழ்காதம் நாறபது யென்று சொல்லி ஒரு மாசம் செல்லும் அந்த உத்திரம் லோறியாமுக்குவர சனோரிமீ த்தையிலே பிறபடுகிற கப்பலிலே யோதாகிலும் அதிசயங்கள் விபரீதங்கள் உண்டாயிருக்கிறது அந்தக்கப்பல் யிவ்விடத்துக்கு வந்தால் தெரியு மென்று சொன்னான். அப்பால் அவன் கையில் அனுப்விச்சுக் கொண்டு நான் யென் கச்சேரியே வந்தேன்.

## 1753௵ சூன்மீ 25௨ ஸ்ரீமுக௵ ஆனிமீ 15௨ சோமவாரம்

இத்தனாள் காலத்தாலே துரை அண்டைக்குப் போனவிடத்திலே சென்னப்பட்டணத்துக்கு சீமைக்கப்பல் வந்துதே அதிலே பணங்காசு வரயில்லையாம் அதுவந்தவுடனே மேதா–பெண்சாதிக்கி (Madame Medeoirs) யெண்பதினாயிரம் வராகன் குடுக்கவேணும். அவர்கள் போய் கேட்டதுக்கு பிறகாலே பணம் வரும் அதிலே வந்தால் சம்மதிப்பண்ணிவிடுகுறோ மென்று யிழுப்பிலே சொன்னாலும் மைத்தப் பேர்கள் அரன்மனைக்காறர்கள் செட்டிகள் வகையிராக் களுக்கும் அப்படிதானே சென்னானென்று சேதிவந்து தென்று சொன்னார். நானும் அப்படித்தான் கேழ்விப்பட்டேன். என்று சொன்னேன் யிப்படி—பேசிக் கொண்டிருக்கச்சே விசயராமராசா மனுஷன் சமால்மகம்மது யென்கிறவன் வந்து காண்பிச்சுக் கொண்டு தசிலிமாத்துப் பண்ணினான் யிவர்கள் வறகுலே வந்த தானியமெல்லாம் வித்துக் கொண்டு வூருக்குப் போகத்தக்கதாக யிருக்குறார்கள். ஆனபடியினாலே உங்கள் கையில் அனுப்பிவிச்சுக் கொண்டு தங்கள் விசயராமராசாவினுடைய காகிதம் முன்யிவர்கள் வரச்சே கொண்டு வந்து உங்களுக்கு கொடுத்ததுக்குப் பதில் காகிதமும் வாங்கிக்கொண்டு போக வேணுமென்று வந்து மனு பண்ணிக்கொள்ளுகிறானென்று சொன்னதுக்கு யிவர்கள் யெசமானுக்கு பதிலுத்தரம் முன் நான் யெழுதி அனுப்பி முசே மோர்சேனுக்கும் (Mr. Moracin) யெழுதி அனுப்பிவிச்சேன் ஆகிலும் யிவன் போகச்சே பதிலுத்தரம் குடுக்கவேண்டியதாமே மதனந்தபண்டிதனை அழைக்கச் சொல்லி மதனந்தபண்டிதன் வந்தான். விசயராமராசா காகிதமும் வந்துது அதுக்கு பதில் எழுதி வைக்கச்சொல்லும் யென்றும் யெழுதச் சொன்னவிபரம் முன்தாமெழுதி யனுப்பின காகிதத்துக்கு பதில் தமக்கு யெழுதி மச்சிலிபந்தர்-கொமாந்தாம் முசே மொற்சேனுக்கும் யெழுதி அனுப்பிவிச்சோமே அந்தப்படிக்கி

யிப்பவும் நீரும் மூசே மொற்சேனும்—அவ்விடத்துக்கவைக்காரியங் களுடனே கூடியதுகளுக்கு யெக்கிபவிச்சு சலாபத்து சங்குவுக்கு சத்துருவா யிருக்கிற யிங்கிறேசுக்காறர்களை நாசம்பண்ணினால் சலாபத்து சங்குவைத் தொட்டு யென்னகாரியமாக வேண்டியிருந்தாலும் ஆகச்சே யிது கொடுக்கச் சொல்லி மச்சிலிபந்தர் கொம்மாந்தம் மூசே மொறுசேன் பேருக்கு காகிதமெழுதி முன்னும் அனுப்பினோம் யிப்பவும் அனுப்பினோம் ஆனபடியினாலே நாமெழுதினபடிக்கி நீர் யெங்களுக்கு அனுகூலமாயிருந்தால் உம்முட மனோரதப்படிக்கி யெந்த யெந்த காரியங்கள் வேணுமோ அதுகளெல்லாம் ஆச்சுதென்று யெண்ணிக் கொள்ளவும் யென்றும் மத்தசேதிகள் சிறிது வாய் விசேஷமாய் தாங்கள் குமாஸ்தா சமால்மகம்மதுடனே சொல்லி அனுப்புவிச்சோம் அவர் வந்து சொல்லச்சே தெரியவருமென்று காகிதம் மதனுந்தபண்டிதனுடனே சொல்லி யெழுதிக் கொடுக்கச் சொல்லி உத்தரங்குடுத்து அப்பால் விசையராமராசா மனுஷன் சமால்மகம்மதுவை அப்பாலே அழைத்துப்போய் யேகதேசத்திலே சொல்வது உங்கள் ராசா சலாபத்துசங்குவுடனே சநேகமாயிருந்து சலாபத்துசங்குவுக்கும் யெங்களுக்கும் சத்துருவாயிருக்கப்பட்ட யிங்கிறேசுக்காறர்களுக்கு சகல மத்தத்துப்பண்ணி அவர்கள் பெத்திரி நிறுத்தி அவர் ஆசராவிலே யில்லாவிட்டால் யிந்த மட்டுக்கும் யிங்கிறேசுக்காறர்களுடைய பெத்திரிகளென்று ஸ்ரீகாக்குளம் ராசமகேந்திரபுரம் வேலூர் தாலுக்கில் ஒன்றும் நிற்கத்தக்கதில்லை. அப்பாலந்த யிங்கிறேசுக்காறர்கள் தானே உங்கள் ராசாவுக்கு ரொம்பவும் பொல்லாப்பு பண்ணினார்கள். அப்பால் மறுபடியும் உங்கள் ராசாவுக்கும் யிங்கிறேசுக்காறர்களுக்கும் சினேகமாயிருக்கிறார்கள் யென்று துரையவர்கள் சொன்னதுக்கு சமால்மகம்மது சொன்னது நீங்களும் சலாபத்துசங்கும் சாகிறல்லிக்கான் பேருக்கு பர்மானாயெழுதி அந்தப் பிறந்தியங்களிலே யிருக்கிற விசாகப்பட்டணம் முதலான யிங்கிறேசுக்காறர்கள் பந்தர்களிலே இருக்கிற கொட்டிகளெல்லாம் யிடிச்சுப்போட்டு அவர்களையும் அந்த ராச்சியத்திலே யிருக்க வொட்டாமல் தொரத்தி விடச்சொல்லி யெழுதின போது யெங்கள் ராசா யிங்கிறேசு காறர்களுக்கும் மத்தத்துபண்ணாது மெய்தான் யிப்போது வேஷமே யல்லாமல் சினேகிதமில்லை.

ஆனபடியினாலே உங்கள் ஆசிரா சேர்ந்து அவர்கள் நன்றி பாராட்டதவர்களை சிட்சிக்கவேணுமென்று யோசனை பண்ணி யெழுதிக்கொண்டதுயென்று பின்னையும் விஸதரிச்சு சொன்னதுக்கு யிந்த வயணத்துக்கும் மூசே மொர்சேனுக்கு நானெழுதி அனுப்பி னேன் அவர் உங்களுடைய ராசாவுக்கு யெழுதினபடிக்கி சத்துருக் களாகிய இங்கிறேசுக்காறர்களை நாசம் பண்ணினால் சலாபத்து சங்குவைத் தொட்டு கலைகள் ராசாவுக்கு யின்னம் அதிசெயமான மன்சுபா சாகீரும் யிப்போ நீங்கள் கேட்ட சாலா பல்லக்குகளும் பரமானா முதலான உங்கள் மனோபீஷ்டம் யென்ன உண்டோ அதுவும்நடப்பிச்சு நாங்களும் யெங்களாலேயான மத்தது யாவத் தும் சகத்திரமும் உங்கள் ராசாவுக்கு நடப்பிக்கிறோம் யென்று கெட்டி யாய்ச் சொல்லவும். மருந்து குண்டு பீறங்கி வகையிரா சாமானுகள் யென்ன உண்டோ அதுகளெல்லாம் மூசே மொர்சேன் கொடுப்பான். யென்று சொன்னதுக்கு சமால் மகமது ஏன் நீர் அவன் யிருந்து எங்கள் ராசாவினுடைய அபீஷ்டமே தாங்கள் சொன்னபடிக்கி

யிப்போ நான் போறேனே போனவுடனே யிதுகளுக்கெல்லாம் பந்தர் கப்பித்தான் பேருக்கு காகிதமெழுதி அனுப்பிவிக்கிறதிலேயும் காரியத்திலே கிறிஸ்தைய காண்பிக்கிறதிலேயும் தெரியவருமென்று சொன்னதுக்கு நாங்களும் யிப்போ பந்தர் கப்பித்தானுக்கு முன் நாம் யெழுதியிருக்குறோம் யிப்பவும் யெழுதி யின்றைய தினம் கப்பல் சுலுப்பும் போகுது. அதிலே அனுப்பிவிக்குறோமென்று சொல்லி அவனுக்கு பந்தர் சீட்டி சிறெப்பாவொன்றும் அவன் கணக்கப்பிள்ளைக்கி அபரங்காசாயி செல்லாதென்றும் ஒரு சிட்டிப் பாகை ஒன்றும் குடுத்துப் போகச் சொன்னார். அப்பால் சிம்லுசிரி பண்டிதர் குமாரன் பாப்புறயன் தம்பி லக்ஷுமணாறயன் யென்கிறவன் ஓடிவந்து துரையவர்களைக்கண்டு சந்திச்சுக்கொண்டு சலாம் பண்ணினான். யேனென்று கேட்டார். யெங்கள் டங்காசாலையார் கையில் யிருபதினாயிரம் ரூபாய் கடன் வாங்கிக்கொண்டீரே அதை கேழ்க்க வந்தேனென்றான். அதுக்கு துரையவர்கள் சொன்னது நாயே உனக்கு யெத்தனை நெஞ்சு உரப்பு என் முன்னே பயமில்லாமல் கடன் குடு யென்று கேழ்க்கிறதுக்கு யென்று சொன்னது மல்லாமல் யிப்போ உன்னை ஆக்கினை பண்ணிவிப்பேன். கேழ்க்க விட்டானென்றும் பின்னையும் உதாசின வார்த்தைச் சொல்லி கோபம் பண்ணி அப்பால் நான் விசையராமராசா மனுஷர்களுடனே பேசியிருக்கிற என்னை அழைத்து யிந்த நாய்ச் செய்த காரியத்தை கேட்டீயாவென்றும் மேலே யெழுதின சம்மதியைச் சொன்னார். அதுக்கு நீங்களாய்க் கொடுத்தால் வாங்கிக்கொள்ளவேணுமே யல்லாமல் யிவன் வந்து கேழ்க்கிறதுக்கு யோக்கியனாவென்று அதுக்குத்தக்க உத்தரம் சொன்னேன் நல்லது வெளியிலே டங்காசாலைக்கு யெசமானாயிருக்கிறவனுக்கு வருஷத்திலே பதினாயிரம் யிருபதினாயிரம் ரூபாய் சிறிது வேளை லட்ச ரூபாய் மட்டுக்கும் வாங்கினதுண்டு அப்படியிருக்க யிவர்கள் யெனக்கு யென்ன குடுத்தார்கள் யிதல்லாமல் ஆணிக்காறனுக்கு யென்ன வேலையிருக்குது ஆணியாகிறது மாத்திரம்தானே சும்மாயிருந்துக்கொண்டு ஆயிரத்துக்கு ஒண்ணரை ரூபாய் வாங்கிக்கொள்ளுகிறான் யிதுக்கு யிவனுக்கு ஒரு சிலவுமில்லை யிந்த ரூபாய் டங்கா சாலையான பிற்பாடு யிவனுக்கு பத்து லக்ஷம் ரூபாயிக்கு ஆதாயமுண்டு யெந்த சிலவு வந்தாலும் கருமார் பட்டைக்காறர் குடுத்துப்போட்டுப் போனார்கள்.

யிவன் ஒரு சிலவும் யில்லாமல் ஒரு பிறயாசமுமில்லாமல் கொண்டு போறது. யிந்தக்கணக்கு யெல்லாம் விசாரிக்க வேணும் துலுக்கர்களுக்கு அந்தந்த வருஷம் வெட்டு விழுகிறதுக்கு தக்கதாய் நசரென்றும் சிலவென்றும் வருகிற ஆதாயத்துக்கு சரியாய் வாங்கிப் போடுவார்கள். அதுகள் வொன்று மில்லையே ஆனால் ஆணிக்காறர்களை வேறேவைத்து சம்பளம் கும்பினிரிலே குடுக்க யிந்த ஆதாயம் கும்பினீரிலே சேரப்பண்ணிப்போடுறேன் என்றுயிது முதலான வார்த்தைகளைச் சொல்லி போகச்சொன்னார் யிதிலே சிறிது வார்த்தைகள் லக்ஷுமணராவுடனே நான் சொன்னதும் உண்டு அவனுக்குப்பறங்கிப்பேச்சு தெரிஞ்சபடியினாலே இவன் கேட்டுக்கொண்டு யிருக்கிருனென்றும் சொல்லியாவ தென்ன வென்று யிருந்ததும் உண்டு யிந்தடுக்கிலே சால்சாலப்பாய் மேலுகிரிபண்டிதர் மகன் லக்ஷுமணராவு நடந்து அப்பால அடுத்தாப்போலேயிருந்த

பாப்புராயன் சறவணப்பத்தனுடனே சொன்னான். அவர்களும் யிவனும் பிடவைபார்க்கிற சாலையே போயிருந்தார்கள். அப்பால் நான் விசயராமராசாவுக்கு யெழுதில காகிதம் மதனந்தபண்டிதன் சரிகைப்பையிலே போட்டுக்கொண்டு வந்து கொடுத்தான். அதை விசையராமராசா மனுஷன் கையில் கொடுத்து யெனக்கு வந்த காகிதத்துக்கு பதில் காகிதம் வீட்டிலே யெழுதிக்குடுக்கிறே மென்று சொல்லிப் போட்டுப்போகச் சொல்லி துரையவர்கள் கையில் அனுப்பிவிச்சுக் கொண்டு நான் பிடவை பாற்கிற சாலையே வந்தேன்.

## 1753ஸ்ரீ ஜுன்மீ 27உ ஸ்ரீமுகஸ்ரீ ஆவணிமீ 17உ புதவாரம்

சாயங்காலம் கேகழ்விப்பட்டசேதி பாப்பய்ய பிள்ளையை துரை அவர்கள் அழைப்பிச்சு சிமாமூல் கணக்கு நாட்டாறுதுமாரும் காணு கோயி தெசமுக்கியை யெழுத்துடனே கொண்டு வரச்சொல்லி தாக்கீது பண்ணினதாகவும் யிவன் நல்ல தென்று சொல்லி அனுப்பிவிச்சுக்கொண்டு பற்காணுக்களிலே யிருக்கிறவர்களுக்கெல்லாம் யெழுதி அனுப்பிவிச்சானென்று கபுறு கேழ்விப்பட்டுது.

ஊரிலே சொல்லிக்கொள்கிற சனங்களானால் நபாபுகிரி பண்ணுகிற முசே துப்பிளேயிக்குசு மறக்கிசு (Marquis) அவர்களும் அவருடதீவான்கிரி பண்ணுகிற அவருடைய பெண்சாதியும் யிப்படித்தான் சீமைவிசாரிப்புயில்லாமல் திருடர் கூடி ஆளைப்பாத்த கதையாய் நடக்கிறதுக்கு ஆச்சரியப்படுகுறதும் அல்லாமல் சிலவுக்கு வரவு கால் வரிசையுங் காணுமல் யிருக்க வரவு அதுதானும் ஒன்று மேயில்லாமல்ப்போக சிலவு நாளுக்குநாள் அதிசெயமாகவா காரியம் கட்டாமலிருக்க யெத்தனம் பண்ணுகிற காரியங்களெல்லாம் முனைஒடிஞ்சுப்போக யிதுகளை யோசனை பண்ணிக்கொள்ளுகிறதுக்கு யில்லாமல்யிருக்க அல்லது நடத்துகிற காரியம் அனேகங்களுக்கு ஆகிலும்———————————மனதுக்கு தோத்தினபடிக்கெல்லாம் நடப்பிக்கிறது யென்ன காரியத்துக்கு குறிச்சு நடத்துகிறாரோ யென்று சமஸ்தானங்களுஞ் சொல்லிக் கொள்ளுகிறார்கள் யென்றும் சிறிது பேர்கள் சொல்லிக்கொள்கிறது காலத்தினுடையக்குணம் அப்படி நடத்தப்பண்ணுது யென்று சொல்லிக் கொள்ளுகிறார்கள் யிதுகளெல்லாம் கேழ்விப்பட்டதை எழுதி வைத்தேன்.

## 1753ஸ்ரீ ஜுன்மீ 28உ ஸ்ரீமுகஸ்ரீ ஆனிமீ 18உ குருவாரம்

இத்தநாள் காலத்தாலே ஒன்பது மணிக்கு துரையவர்களண்டைக்கு தேகுடிக்க தாழ வந்தபோது நான்போய் ஆசாரம் பண்ணி கபுறு சொல்லியானவுடனே திரிச்சிராப்பள்ளியிலேயிருந்து முசே அஸ்துருகு (Mr Astruc) யென்கிற நம்முடைய பவுன்சு கொமாந்தாம்

யெழுதியனுப்பின காகிதத்தை பாப்பய்யபிள்ளை கொண்டு வந்து குடுத்து நம்முடைய பிறுன்சுக்காறர்கள் கோட்டைக்கு அடுத்த ரெண்டு நாழிகை தூர அளவிலேயிருக்கிற கழுதைமலை யென்கிறதைப் பிடிச்சுக்கொண்டார்கள் அதிலே லொரு பீறங்கியிருந்துது. சிறிது பாறுக்காறர்களும் பத்துப்பேர்யிங்கிரேசுக்காறர்களும் யிருந்தார்கள் அவர்கள் யெல்லாம் சரியாய்த் தீந்து போச்சுதென்று சேதி சொன்னான் துரையவர்களுப் மூசே அஸ்துருக்கு காகிதத்தைப் பார்த்துகொண்டு கிட்டயிருந்தவர்களுக்கு காண்பிச்சார். அதிலே யெழுதியிருந்தது வெளியிலேயிருந்த யிங்கிரேசுக்காறர் வகையிராக்களும் மழுதல்விக்கான் பவுன்சும் கோட்டைகுள்ளே போய்ச் சேர்ந்தது நாங்கள் கழுதைமலையை பிடிச்சுக்கொண்டோம் அதிலே லொரு பீரங்கியிருந்துது அகப்பட்டுது சிறிது துப்பாக்கிகளும் அகப்பட்டுது அதிலே யிருந்த தட்டானையும் சிறிதுபேர் ஓடிப்போய் விட்டார்கள் சிறிது பேர்களை சரிக்கட்டிப் போட்டோம். யின்னம் யேழெட்டு நாளையிலே யாதொருகாரியஞ் செய்வோம் யென்றும் அந்த சந்தோஷக்கபுறு யெழுதுவோ மென்று யெழுதியிருந்தது. இந்தச் சேதியை துரையவர்கள் யெல்லாருக்கும் சொல்லி மதாம் துப்பிளேயிக்கும் துரையவர்களும் யெழுந்திருந்து மேல் வீட்டை வெகு சந்தோஷத்துடனே போனார்கள்.

பதிலுத்தரம் யெழுதியனுப்ப அறுக்காறுகளைத் தயாறு பண்ணி வைக்கச் சொல்லி சொன்னாரென்றும் சொல்லிக்கொண்டார்கள்.

## 1753௵ ஜூலை௴ 17உ ஸ்ரீமுக௵ ஆனி௴ 21உ ஆதிவாரம்

இத்தனாள் துரையவர்கள் கோகுலுக்குப் போயிருந்து வந்து தே குடிச்ச உடனே போய் கபுறு சொன்னதுக்கு நான் உங்கள் சாவடி பார்க்க நான் நாளைப்பகலைக்கி மேலாக வருகிறேன் யென்று சொன்னதுக்கு ஆசாரம் பண்ணி சிறுதார்த்தன் ஆனேன்யென்று உத்திரஞ் சொன்னேன். அப்பால் விறுயகப்பிள்ளைக்கு தாக்கீது பண்ணி சாமானுகளெல்லாம் பொம்மையாபாளையத்துப் புளியந்தோப்புக்கு அனுப்பச்சொல்லு மென்று சொல்லிப் போட்டு யென்காசாக்கச்சேரியே வந்து நம்முடைய அக்கிராரத்துக்கு வெள்ளைக்காறர் சட்டமாய்ந் தழையிலே பந்தல் போட்டு தழையினாலே சாலை யேற்படுத்தி முஸ்தீப்பு பண்ணச் சொல்லி சாயங்காலம் பலகாரம் கொடுக்க பழவகைகள் தித்திப்பு வகையிரா சாமானுகளையெல்லாம் சாவடிக்கி அனுப்பச் சொல்லி மனுஷர்களுக்கு நேமித்தம் பண்ணி அனுப்பிப் போட்டு நான் வீட்டுக்குப் போனேன்.

பொம்மையா பாளையத்திலிறங்கின விடத்திலே பீறங்கிகள் சுடவும் நம்முட அக்கிராரத்துக்கு வந்த விடத்தில் பீறங்கிகள் சுடவும் யிருபது விராகன் மருந்தும் பீரங்கியும் அனுப்பச்சொல்லி பாணவித்தைக்கு அன்பது ரூபாயும் கொடுத்தோம்,

## 1753ஸ்ரீ ஜூலையீ 2உ ஸ்ரீமுகஸ்ரீ ஆனியீ 22உ சோமவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்கள் பொம்மையபாளையத்துக்குப் போறபடியினாலே நான் முன்னதாக பொம்மையபாளையம் தோப்பிலே போயிறங்கி யிடி சுண்ணாம்பு முஸ்தீப்பு பண்ணவிச்சு தொரை அவர்கள் வந்தவுடனேயிருபத்தோரு வேட்டு அவர் பெண்சாதி வந்தவுடனே யிருபத்தோரு வேட்டு அலுமுசுக்கு உக்காரச்சே யிருபத்தோரு வேட்டும் அப்பால் யெழுந்திருக்கச்சே யிருபத்தோரு வேட்டு அப்பால் பகலைக்கு சாப்பிடச்சே யிருபத்தோரு வேட்டு அப்பால் சாறுயங் குடிக்கச்சே யிருபத்தோரு வேட்டு ராத்திரிக்கும் அப்படித்தான் சுடச் சொல்லி திட்டம் பண்ணினேன் அப்பால் முன்னே மதாம் துப்ளேயிக்கு வந்தவுடனே யிருபத்தோரு வேட்டு சுட்டார்கள் அப்பால் துரையவர்கள் பத்தரை மணிக்கி பதினொரு மணிக்கி வருவாறென்று சொன்னபடியினாலே நான் மதாமுக்கு ஆசாரம் பண்ணிப் போட்டு யென் சாவடிக்கிப் போய்விட்டேன். அப்பால் துரையவர்கள் பத்தரை மணிக்கி வந்தார். அப்போ யிருபத்தோரு வேட்டு சுட்டான். அந்தச் சினம் சாவடியிலிருந்து பொம்மையப்பாளையத்து தோப்பே வந்து துரையவர்களை சந்திச்சு ஆசாரம் பண்ணினவுடனே போன்சுவார் மோன்சியோர் றங்கப்புல்லே யென்று கேட்டார். அதுக்கு ஆசாரம் உங்கள் கடாட்சத்தினாலே உங்களுடைய வேலைக்கி சகல ஆரோக்கியத்துடனே ஆசாராயிருக்கிறேனென்று சொன்னேன். அதிலே பாப்பய்யபிள்ளை திரிச்சிராப்பள்ளிக் காகிதம் ஒன்று கொண்டு வந்து கொடுத்தான் அதிலே நந்தி ராசா பவுன்சு நம்முடைய பிரான்சு பவுன்சும் முராரிராயன் பவுன்சும் கழுதைமலை அண்டையிலே யிருக்கச்சே யிங்கிறேசுக்காறர்கள் பவுன்சும் மேஸ்தர் லாரென்சும் மழுதல்லிக்கானும் அவன் பவுன்சும் வந்து விழுந்து சண்டை பண்ணினதின்பேரிலே நம்முடையப் பிரான்சுக்காறர்கள் ரநதிஞ்சு பீறங்கி வகைபிரா சாமானுகள் சமஸ்தமும் ஒப்பிச்சுப்போட்டு முசே அஸ்துருகுயென்கிற கொம்மாந்தாமும் சொலுதாதுகளும் போட்டது போட்ட வாக்கிலே போட்டு போட்டு யெதால் யெதாலாய் ஓடிப் போய் நந்திராசாபாளையம் போய்ச்சேர்ந்தார்கள். இதிலே சிறிது பேர்கள் செத்தவர்கள் போக மத்தவர்கள் போய்ச் சேர்ந்தார்களே யென்றும் பாறுக்காறர்களுடைய காரியமும் செத்தவர்கள் போக மைத்தவர்கள் ஆயுதத்தை ஒப்பிச்சுப்போட்டு போய்ச் சேர்ந்தர்கள் யென்றும் மருட்டியன் முராரிராயன் பவுன்சு சறுதார் பாலாசி கோறபடா (Mr. Balaji Ghorp.ide) யென்கிறவன் செத்துப்போனானென்றும் அவனல்லாமல் பின்னையும் நாலாறு சுபேதாறர்களும் யிருந்து முப்பது குதிரை சுவார்களும் செத்துப்போனார்களென்றும் மருட்டியர் முன்னேஞ்சு சண்டை பண்ணாமல் போனால் நம்முடைய பவுன்சிலே வெகு சேதம் வரும் ஒருத்தரும் தப்பத்தக்கதில்லை யென்றும் யிதல்லாமல் நந்திராசா தளகர்த்தன் ஒருத்தன் பெரிய மனுஷன் விழுந்து போனானென்றும் யிதுமுதலான சேதி யெழுதி வந்ததாய் யதின் பேரிலே துரையவர்களும் மதாமும் றெம்பவும் விசாரமாயிருக்கிறதாய் சேதியும் அங்கேதானே கேழ்க்கப்பட்டுது. அப்பால் முகசாடயும் அப்படித்தான் கண்டுது. மேலுச்சாகமில்லாமல் ஒரு மார்க்கமாயிருந்தார்கள். அப்பால் நான் பனிரெண்டு

மணி அடிச்சுதே போவோம் யென்று ஆசாரம் பண்ணினேன். அப்போ துரையவர்கள் மதாமைப் பார்த்தும் மதாமும் றங்கப்பிள்ளை நீ சாவடிக்கு வாறமென்று சொல்லிவிட்டால் தான் போறதில்லை யென்று சொன்னார். அப்போ யென்னை மதாம் பார்த்து அவசியம் சாயங்காலம்வாரேமென்று சொன்னாள் தொரையவர்களும் நானும் வாறோமென்று சொன்னார் அந்த மட்டுக்கும் தொரையவர்கள் கையில் அனுப்பிவிச்சுக்கொண்டு நம்முடைய திருவேங்கிடபுரம் போய் அதுக்கு முன்பாகத்தானே பச்சைத் தளமயிலே பந்தல் போட்டு பச்சைத் தளமயிலே சாலைகள் பிரிச்சு கொளத்தண்டையிலே யும் அப்படித்தான் போட்டு பெரியக்கொடிகள் கட்டி தோறணங்கள் கட்டி வெகு வேடிக்கையாய் அலங்கரித்து தண்ணீர் தெளித்து யிருந்துது அவர்களுக்குப் பின்னையும் தாக்கீது பண்ணி யிருக்கிற வர்கள் யெல்லாரையும் பிறங்கி சுடுகிறவர்களையும் மேள தாள நடன நாடக சாலைக்காறர் வகையிரா யெல்லாரையும் தயாராயிருக்கச் செய்து திட்டம் பண்ணி நான் சாப்பிட்டு தயாராயிருந்தேன்.

## 1753ஹு சூலைமீ 3உ ஸ்ரீமுகஹு ஆனிமீ 23உ அங்காரகவாரம்

இத்தனாள் பகலுக்கு மேலாக மூணு மணிக்கு சீமையிலிருந்து மசுக்கரைப் பிடிச்சு ஷிலேத்துரு (Sillhouette) யென்கிற கப்பல் வந்துது. கப்பல் கப்பித்நான் பேர் முசே லொக்கூர் (Mr. Loncourt) யிந்தக்கப்பலிலே பொன் வந்த துகைக் கண்டெழுத வேண்டியது.

## 1753ஹு சூலைமீ 5உ ஸ்ரீமுகஹு ஆனிமீ 25உ குருவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போய்க் கபுறு சொல்லி ஆன பிற்பாடு முசே பெறுத்திரி (Mr. Bertier) என்கிறவன் கோயிலாண்டி கிருஷ்ணமநாயக்கன் பேரிலே வரவேண்டிய விராகனை றங்கப்பிள்ளை தாக்கீது பண்ணி வாங்கிக் கொடுக்கயில்லை யென்று பித்திசா யெழுதிக்கொண்டானாம். அந்தச் சேதியை துரையிருந்துக்கொண்டு தாக்கீது பண்ணி அவனைக் குடுத்துவிடச் சொல்லப் போகாதாயென்று சொன்னார்கள். அவன் முசே திலாஷுக்குச் சம்மதி பண்ணச் சொன்னானாம். அவர்கள் முசே திலார்யைக்கண்டு பேசிக்கொண்டிருக்கிறார்கள் தீர்த்துப் போடுவார்களென்று சொன்னேன் அப்பால் எல்லப்பிள்ளை யென்கிறவன் முத்தியப்பிள்ளை பேரிலே வரவேணும் அந்தப் பணம் கேட்டால் அட்டிப்பண்ணிக்கொண்டு வந்தார் அதுக்கு சின்ன துரை யுடனே சொன்னதுக்கு யென்னயிருக்குது உங்களுக்கு கடன் குடுக்கிறது யென்று சொன்னார் யென்றும் அவருக்கு ஊர் கணக்கு மிராசு யிருக்குது வீடுகளிருக்குது யென்றும் ஆஸ்தியுண்டென்றும் பித்திசா மெழுதி துரை அவர்கள் கையில் குடுத்ததுக்கு தொரை அவர்கள் பார்த்துக்கொண்டு யென் கையில் கொடுத்து அவர்கள் கையில் சம்மதியைக் கேட்டு தீர்த்துப்போடென்றார். நல்லதென்று சொன்னேன். அப்பால் யிப்பவும் வந்து வெங்கிடேசய்யரை

அழைத்து முத்தையப்பிள்ளையைக் கேட்டனுப்பிவிச்சதுக்கு மூனு நாளையிலே துரையவர்களுக்கு பித்திசாமும் எழுதிக்கொடுக்கிறே னென்று சொல்லி அனுப்பிவிச்சார். அந்தச் சேதியை துரையவர் களுடனே சொல்லிப்போட்டு யென் காசாக்கச்சேரியே வந்தேன்.

இத்தனுள் சிதம்பரம் சீமை சம்பிறுதி காறுபாறியாகிய பெரிய பெருமாள் பிள்ளையை சிதம்பரத்திலிருந்து பிடிச்சு வந்து சலங்கும் பேரிலே யேத்தி அங்கேயிருந்துக்கொண்டு வந்து யிறக்கி நயினர் விட்டிலே கொண்டு போய் காவல் வைத்தார்கள் யென்று வந்து சொன்னுர்கள்.

## 1753௵ ஜூலை௴ 9௳ ஸ்ரீமுக௵ ஆனி௴ 29௳ சோமவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப் போய் ஒன்பது மணிக்கு கபுறு சொல்லியானவுடனே தொரையவர்கள் யெழுந்திருந்து மேலே யேறிப் போனுர். இவரேதுவும் பேசாமல் யெழுந்துபோனதென்னயென்று யோசினைப் பண்ணினதுக்கு அங்கே ஒருத்தர் முராரிராயனுக்குப் பணம் அவசரமென்றும் மமுதல்லிக்கான் தீவு கோட்டை வந்து சேர்ந்தானென்றும் கபுறு வந்துதென்று கேழ்விப்பட்டதின்பேரிலே வியசனமாயிருக்கிறுரென்றும் சொன் ஞர்கள். ஆனுல் மமுதல்லிக்கான் தீவு கோட்டை வந்து சேந்ததில்லை அது பெரிய அபத்தம். அப்படியிருக்க துரையவர்களுக்கும் மமுதல்லிக்கான் வந்தவனைப் பார்த்தோம் யென்று வந்து சொல்லி வெகுமானம் வாங்கிக்கொண்டு போயிருக்கிறுர்கள் யிது துரையவர் களுக்கு ரெண்டு மூனு நாளையிலே வெளியாகும் அப்போதான் அவருக்குத் தெரியவரும்.

## 1753௵ ஜூலை௴ 11௳ ஸ்ரீமுக௵ ஆவணி௴ 31௳ புதவாரம்

இத்தனுள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப்போய் கபுறு சொல்லியான வுடனே மச்சிலிபந்தரிலேயிருந்து முசே மொறசேன் (Mon. Moracin) கொமாந்தாமுடைய காகிதங்கள் வந்துது. அதுபடிக் கிறதுக்கு காகிதங்களை வாங்கிக்கொண்டு மேல் வீட்டின் பேரிலே யேறிப்போனுர் அப்பால் நான் யென்காசாக்கச் சேரியே வந்தேன்

பகலைக்கு மேலாக கேழ்விப்பட்ட சேதி முசே மொறசேன் மச்சிலிபந்தரிலே யிருந்து யெழுதினதாய் பாளையக்காறர் அங்கே நம்முடைய தாலூக்கிலே சோராவரிபண்ணுகிறுர்கள் யென்று யெழுதி அனுப்பிவிச்சதாய் ரெண்டொரு வெள்ளைக்காறர்கள் பேசி யிருந்ததாய் வந்து சொன்னுர்கள். சாவா பாசிராயன் முராரிராய னுக்கு யெழுதியனுப்பினதாய் நம்முடைய சீர்மை வந்து கற்னுட்டகம் அதின் வழி போகவேண்டாம் யென்றும் உமக்கு யெழுதி அனுப்பியும் நீர் யின்னம் சீர்மையைக் கொள்ளையிடுகிறதை விட்ட தில்லை யிப்படி யென்சீமையை சுலுமி பண்ணிபாழாக்கிப் போகுறது நல்லதல்ல தூரம் விசாரித்து நடந்து கொள்ளும் என்று வெகு

கண்டிப்பாய் யெழுதி யனுப்பினதாய் அதின் பேரிலே தன் கொசாஜு யென்ன உண்டோ அதுவும் ஆனைகளுள்ளதுவும் பின்னையும் அனுப்பத்தக்கதாக சாமானுகளும் சிர்வடீக்கு அனுப்பிப்போட்டு தானும் பாசிராயன் அனுப்பின காகிதம் பகிரூசும் அனுப்பி துரையவர்கள் பேருக்கு தான் யினிமேல் யிருக்கக்கூடாது யென்றும் சிலவு கொடுத்து அனுப்பி விச்சாப் போறேனென்றும் காகிதமெழுதியனுப்பினதாய் சொன்னார்கள்.

## 1753௵ ஜூலைமீ 13௳ ஸ்ரீமுக௵ ஆடிமீ ௧௨ குருவாரம்

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கு துரையவர்கள் அண்டைக்குப் போய் கபுறு சொன்னதின் பேரிலே அவர் பதிலுத்தரம் ஒன்றும் சொல்லாமல் வெகு விசனத்துடனே மேல் வீட்டின் பேரிலே யேறிப்போய் மச்சிலிபந்தர் அயிதராபாத் முதலான யிடத்துக் காகிதங்கள் யெழுதுகிற அலுவலிலே யிருந்தார். அப்பால் நான் யென் கச்சேரியே வந்தேன்.

இத்தனாள் சலாபத்துசங்கு அண்டையிலிருந்து காகிதங்கள் வந்தது அந்தக்காகிதச்சேதி கற்னாட்டகசுபா உங்கள் வசமாக ஒப்பிவிச்சு மூணுவருஷமாய் பணம் காசு அனுப்பாமல் போனீர்கள். உங்கள் கற்னாட்டகசுபா பண்ணைத்தைப்பார்த்து சாவிலே கூட பதிலாமை ஆனேம் யெங்களுக்கு பணங்காசு யில்லாமல் யென்னேரம் தங்காவிலே யிருக்கிற சேதி நீங்கள் அறிந்திருந்தும் நாங்கள் யெழுதியனுப்பியும் பணம் அனுப்பாமல் போனீர்கள் யென்று யெழுதி வந்ததாய் சொல்லக் கேழ்விப்பட்டது. பின்னையும் யென்ன யென்ன யெழுதி வந்ததோ தெரியாது. கேழ்விப்பட்ட சேதியை யெழுதிவைத்தேன்.

## 1753௵ ஜூலைமீ 14௳ ஸ்ரீமுக௵ ஆடிமீ 13௳ சனிவாரம்

இத்தனாள்காலத்தாலே துரையவர்களண்டைக்குப்போனவிடத்திலே அவர்குளுந்த முகமாய் பேசியிருந்தார். அப்பால் வில்லியநல்லூரிலே தேரானபடியினாலே சமஸ்தான பேர்களும் போனார்களே நீர் போகயில்லையா வென்று யென்னைக் கேட்டார். அதுக்கு நான் சொன்னது உங்கள் தரிசனடானால் யெனக்கு சகல அதிசெயமும் கண்டாப்போலே யென்று சொன்னதுக்கு நகைத்து நீர் சொன்ன பேச்சு மெய்தான் மமுதல்லிக்கான் தீவுக்கோட்டைக்கி வந்ததே யில்லை தஞ்சாவூரிலே போய் சேர்ந்து அங்கேயிருந்து பணங்காசு கேட்டுக்கொண்டிருக்கிறானும். தஞ்சாவூர்ராசா யோசனையின் பேரிலே குடுத்தால் நாம் யென்ன சொல்லுவோமோ யென்று குடாமல் போக்கு சொல்லி அனுப்பிவிடுகிறதாயிருக்கிறானென்று கபுறு சொன்னார்கள் யிந்தபடிக்கி தஞ்சாவூரிலிருந்து யெழுதி வந்ததென்று சொன்னதுக்கு நான் அப்படிதான் கேழ்விப்பட்டேன் என்று சொன்னேன் அப்பால் பின்னையும் லோகாப்பிறகமாய் குளுந்த பேச்சாய் பேசிக்கொண்டு ரெண்டு நாழிகை தேசகாலம் பேசியிருந்தார் அப்பால் சின்னதுரை முதலான பேர்கள் வந்தார்கள் அவர் களுடனே பேசிக்கொண்டிருக்கச்சேநான் அனுப்பிவிச்சுக்கொண்டு யென் காசாக்கச்சேரியே வந்தேன்.

## 1753௵ ஜூலைமீ 15௳ ஸ்ரீமுக௵ ஆடிமீ 4௳ ஆதிவாரம்

இத்தனாள் துரையவர்கள் கோயிலுக்குப்போய் பூசை கேட்டு வந்து உடனே காண்பிச்சுக் கொண்டேன் அப்பால் தேகுடிச்சு உடனே மச்சிலிபந்தருக்கு சிப்பாய்கள் யெதிக்கிறவர்களுக்கு உத்தாரம் குடுத்துப் போட்டு மேல் வீட்டின் பேரிலே யேறிப் போனார் சாடைப்பார்த்தால் மச்சிலிபந்தருக்கு (Masulipatam) தேவனாம்பட்டணம் யென்கிற கப்பல் பயணம் போகுது. அதுக்கு காகிதங்கள் எழுதுகிற அலுவலின் பேரிலே ஒருத்தருடனேயும் பேசாமல் போனார் யென்று சொன்னார்கள். நான் யென் காசாக் கச்சேரியே வந்தேன்.

## 1753௵ ஜூலைமீ 16௳ ஸ்ரீமுக௵ ஆடிமீ 5௳ சோமவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களைப்போய்க் கண்டுபேசி கபுறு சொன்னது மாத்திரமே யல்லாமல் மறுபேச்சு பேசாமல் மச்சிலி பந்தருக்கு மொறபா (Maurepsa) யென்கிற கப்பலும் தேவனாம் பட்டணம் (Devanampattanam) யென்கிற கப்பலும் பயணம் போற அவசரத்திலே காகிதங்களுடைய அலுவலிலே யிருந்தார். நான் யென்கச்சேரியே வந்தேன். மொறபா (Maurepas) யென்கிற கப்பலின் பேரிலே யித்தனாள் காலமே நூத்தன்பது சொலு தாதுகளும் யெத்தி பீரங்கி குண்டுகள் குந்தாணி பீரங்கிகள் திக்குடுக்கை வகையிரா சண்டை சாமான்களும் விஸ்தாரமா யேத்தினார்கள் இந்த ரெண்டு கப்பலுகளும் பந்தரிலே சிப்பாயிகள் சொலுதாதுகள் பீரங்கிகள் வகையிரா தினசுகளை யெறக்கிப் போட்டு அப்பால் பங்கலாத்துக்குப் போறதென்று சொன்னார்கள்.

## 1753௵ ஜூலைமீ 19௳ ஸ்ரீமுக௵ ஆடிமீ 8௳ குருவாரம்

இத்தனாள் கோர்ஸிப்பட்ட சேதி நிரிச்சிராப்பள்ளியில் முசே அஸ்துருக்கு (Mr Astruc) யென்கிற கொமாந்தாம் யெழுதி யெழுதி அனுப்பினதிலே மமுதல்லிக்கானும் மேஸ்தர் லாரென்சும் (Mr. Lawrence) யென்கிற கொம்மாந்தாமும் வகையிரா பவுன்சுடனே தஞ்சாவூருக்கு வந்து அவ்விடத்திலே ராசாவைக் கண்டு பேசி ஆயிரம் ஆயிரத்தன்னூறு குதிரையும் அய்யாயிரம் ஸேராமமும் சிலவுக்கு லக்ஷம் ரூபாயும் சிறிது ரஸ்துமுதலானதுகள் சேகரம் பண்ணி கொண்டு பிறப்படச்சே தொண்டமான் மரவன் (Tondiman the Maravan) வகையிராக்களையும் அனுகூலம் பண்ணிக்கொண்டு பிறப்பட்டு யெதிர்பாளையம் போட்டானதைத் தொட்டு நந்திராசா பவுன்சு நிற்கமாட்டாது ஆனபடியினாலே நமக்கு மத்தத்து யில்லாமல் கூடாதென்று யெழுதிக்கொண்டதின் பேரிலே வந்து விடச்சொல்லி துரையவர்கள் முசே அஸ்துருக்கு (Mr. Astruc) யெழுதி அனுப்பினா ரென்று கபுறு சொன்னார்கள்.

ஆனாலிப்போ யிருக்கிற காரியம் பார்த்தால் அவுரங்காபாத்திலே யிருக்கிற பவுன்சு கலைஞ்சு அவ்விடத்திலே யிருக்கிற சையிது லசுக்கர்க்கான் (Sayed Lashkarkhan) சானேசிநிம்பாலிக்கர்ஷா நவாசுக்கான்—ராசா சந்திரசேனன் வகையிரா அமீர்கள் முதலான

பேர்களும் சலாபத்துசங்கு தம்பி நிசாம் அல்லிகான் வகையிரா தம்பிமார்களும் பாசிராயன் குமாரன் நாஞாவும் யிவர்கள் சத்துருக் களாக யேற்பட்டு பிறுன்சுக்காறர்களை யிந்த வட்டங்களிலே வையாமல் அனுப்பிவிட வேணுமென்று யெத்தனம் பண்ணி சலாபத்துசங்குவை விட்டுப்பிறிச்சு உபாயமாய்க் கொல்லகொண்டை (Golconda) முதலான யிடங்களுக்கு பச்சடி பச்சடியா யனுப்பிவிட்டு வந்து பந்துபஸ்துவைக் கலேச்சுப்போட்டதினாலே டில்லிபரியந்திரம் யிருந்த பயமும் அதைத்தொட்டு சகல காரியங்களும் கட்டி வந்த படியினாலே அந்த அழல்பிடிப்பு போனதினாலேயும் மைத்தயிடத்திலே யிருந்த யெண்ணமெல்லாம் தப்பிப்போச்சுது. அந்தக்காரியம் பிடிப்பே வந்து தப்பிப்போனதினாலேயும் சயிது லசுக்கர்க்கான் மச்சிலிபந்தர் சுத்தியிருக்கிற சமீதாறர் வகையிரா பற்காணாக்கள் சாகீர் விட்டு நடக்கிறதை கட்டச்சொல்லி யெழுதினதினாலே அதிலே வங்கோல் (Ongol ) ராமச்சந்திரராசாவை சேக்கு யிபுறாம் கொன்றபழியை மனதிலே வைத்துக்கொண்டு யிங்கிரேசுக்காறர்களை சேத்துக்கொண்டு பந்துருத்தி (Banturti) யென்கிற கரைதுறை முதலான யிடங்களும் பின்னையும் சிறிது சீமைகளும் வங்கோலார் (Ongole) முதலான சிறிது சமேதாரர் கட்டினத்தின் பேரிலே அங்கே யிருந்த முசே துலோராம் (Mr Dulaurens) முதலானபேர்கள் நிறுவாகமில்லாமல் பிறப்பட்டு மச்சிலிபந்தர் போய் சேர்ந்ததினாலே அவ்விடத்து காரியங்கள் காயிராப்பட்டு அலங்கோலமாயிருக்குது. ஆற்காடு சுபாவுடனே சேர்ந்தது. திருவொத்தியூர் சீர்மைமுதலான பஞ்சமால்–திருக்கோவிலூர்–யிரவாசநல்லூர் பனிரெண்டு பத்து சீர்மை செஞ்சிசீர்மை வகையிரா யிருபது முப்பது பற்காணாயிருக் கிறது. மாராட்டியர் கொள்ளையினாலே யிதுகள் கூட சாகுபடி யில்லாமலும் யிதிலே சிறிது சீமைகளுக்கு யிங்கிரேசுக்காறர் வந்து அடிக்கடி கட்டுறதினாலேயும் யிது தானே நிலையாமல் காயிறுப்பட்டுக் கொண்டு யிருக்கச்சே கற்னாட்டக சுபாவுக்கு நூத்தன்பதே சில்லரை பற்காணா அதுகளிலே யிருந்து யிவர்களுக்கு ஒரு காசும் வ ரா ம ல் சத்துருக்களாகிய ம மு த ல் லி க் கா ன் யிங்கிரேசுக்காறர்கள் ஆக்கிரமிச்சுக் கொண்டு போனார்கள். ஆனபடியினாலே கற்னாட்டக சுபாவுடனே சேர்ந்தது யிந்தபடியே பந்தாய் சத்துருக்கள் கையில் ஆக்கிறமிக்கப்பட்டு அலையுது. அல்லாமல் திருச்சிராப்பள்ளி நந்தி ராசாவுக்கு வாங்கிக்கொடுத்து நாற்பது அன்பதுலட்சம் ரூபாய் பெறலாமென்று முசே அஸ்துருக்கு முசே லவலோந்தா யென்கிற கோனப்பறங்கி—வகையிரா நம்முடைய பவுன்சு நந்திராசாவுக்கு மத்தத்துப்போய் அவ்விடத்திலே மமுதல்லிக்கான் பெலத்துயிருக்கிற தினாலே யிருந்தால் மோசம் வருமென்று நம்முடைய பிறுன்சு பன்வுசுவை வரச்சொல்லி யெழுதி அனுப்ப அவர்களும் வாறோ மென்று யெழுதி வாறார்கள் யென்கிற சேதியினாலே தெ ற் கி த் து க் காரியமும் படுத்துக்கொண்டது பிரான்சு ராச்சியத்திலே யிருந்து கும்பினியார் யிந்த ஷு பணம் அ னு ப் பா ம ல் சரக்கு அனுப்பச் சொல்லி கப்பல்களை மாத்திரம் விஸ்தாரமாக அனுப்பினதினாலேயும் முராரிராயன் யேழுமாசமாயிருந்து பதினாறு பதினைந்து லட்சம் ரூபாயை வா ங் கி த் தின்றுப்போட்டு ஒரு காரியமுமில்லாமல் போனான் போறேன் போறேன் யென்று அடிக்கடி யெழுதுகிறதினாலே யும் சொந்த சிப்பந்தி மா சா மா ச ம் பீரங்கி மருந்துக் குண்டு— துப்பாக்கி வகையிரா சண்டை சா மா னு க ள் தவிர லக்ஷம் லக்ஷத்தன்பதினாயிரம் ரூபாய் சிலவு பிடிக்கிறதினாலேயும் யிதுக்கு

சிமாமூலியத்திலே யிருந்து பாப்பய்யப்பிள்ளை தஸ்து பண்ணிக் கொடுத்து நாலஞ்சு லக்ஷமும் முறுத்தசல்லிக்கான் மூதாமியா வகையிராக்களை பெரும்பிடிபிடிச்சதினுலேயும் மயிசூரார் மூணுலக்ஷம் ரூபாய்க் குடுத்ததினுலேயும் பத்து லக்ஷம்ரூபாகொடுத்ததிலேயும் ஆக பதினைந்து லக்ஷம் போக மத்தத்தெல்லாம் விறையமான படியினுலேயும் யின்னம் விறையமாகிறபடியினுலேயும் யிதுக்கு மேல் வறத்தைக்காணுதபடியினுலேயும் தொரையவர்கள் பெகுதிலேசத்தை அடைஞ்சு அமுல் பண்ண பெண்சாதியையும் பெண்சாதியின் கீழே காறுபாருகிய பாப்பய்யப்பிள்ளையையும் யென்னேரமும் கோபமும் தாபமும் அடியும் உதையுமாக நடந்துகிருரென்றும் பட்டணத்தி லுண்டான வெள்ளைக்காறர்கள் தமிழர்கள் துலுக்கர்கள் வகையிரா பேசிக்கொள்ளுகிருர்கள் யினிமேல் யென்ன நடக்குமோ தெரியாது

## 1753ளு ஜூலைமீ 22உ ஸ்ரீமுகஞு ஆடிமீ 11உ ஆதிவாரம்.

இத்தனுள் கேழ்விப்பட்ட சேதி யென்னவென்றால் நேத்து ராத்திரி பேழுமணிக்கு முராரிராயன் காகிதம் வந்ததாயும் அதிலே யெழுதி யிருந்த சேதி மமுதல்லிக்கான் தஞ்சாவூரிலிருந்து சிலவுக்கு ரூக்கமும் வாங்கிக் கொண்டு பவுன்சும் அவர்கள் கூட்டினதும் கூட்டிக்கொண்டு ரஸ்தும் எருதுகளின் பேரிலே பிடிப்பிச்சுக் கொண்டு திரிச்சிராப்பள்ளிக் கோட்டைக்குப்போய் சேர்ந்து ரஸ்தும் கோட்டையிலுள்ள சிப்பாயிகளுக்கு சிறிது சிலவுக்கு குடுத்து யிங்கிரேசு பவுன்சு தன் பவுன்சு மறவன் பவுன்சு வகையிரா பவுன்சு களும் கட்டிக்கொண்டு நந்திராசாவுக்கு யெதிர்ப்பாளையம் போட்ட சேதி முந்தாம்நாள் யெழுதியிருந்தேனே அதுக்கும் பிறப்பாடு யிதுக்கு ஆறும் நாள் யேழாநாள் மமுதல்லிக்கானுக்கும் நந்திராசா வுக்கும் சண்டையாயி நந்திராசா பவுன்சு முறிஞ்சு சிறிது சீரங்கம் திருவானைக்காவல் சேர்ந்ததாயும் சிறிது மணப்பாரைப்போய் சேர்ந்ததாயும் அத்துடனே நந்திராசாவும் மணப்பாரை போய் சேர்ந்ததாயும் நம்முடைய பிரான்சுக்காறர்களும் சிப்பாயிகளும் சீரங்கம் திருவானைக்காவல் வந்து சேர்ந்ததாயும் யிப்படி சிதரிப் போச்சுது சீரங்கம் திருவானைக்காவலிலே யிருக்கிற பவுன்சின் பேரிலே மமுதல்லிக்கான் பவுன்சு வந்து சண்டைகுடுக்கிறதுக்கு காவேரி பிறவாகம் வருகிறது விஸ்தாரமானபடியினுலே காவேரி தாண்டு கிறதுக்கு கூடாதத்தை தொட்டு அட்டியென்றும் அதனுல் நின்று தென்றும் ஓடிப்போன நந்திராசா மறுபடி பவுன்சு சேகரிச்சுக் கொண்டு வரவேணுமென்று சொல்லிக்கொண்டிருக்கிருன் யென்றுப் போலேயும் மமுதல்லிக்கான் பெலத்துக்கொண்டிருக்கிருனென்றும் நீங்களானுல் யெந்தக் காரியமானுலும் ஒன்றை உத்தேசிச்சி அது முடிஞ்சுப்பிற்பாடு பின்னைவொன்று யெத்தனம் பண்ணவேணு மென்று நீங்கள் யோசனைப்பண்ணுமல் யெல்லாக்காரியமும் அங்கங்கே நடக்க வேணுமென்று சொன்னுல் சத்துரு பெலத்துக்கொண்டி ருக்கிற வேளையிலே யெப்படி நடக்கும் ஒரு முகந்திலே யிருக்கிற பவுன்சை அனுப்பி அதைச்சேகரம் பண்ணிகொண்டு பின்னைவொரு காரியத்தை துவக்க வேணும் அதுவுமில்லாமல் யெல்லாத்திலேயும் ஆசைவைத்து யெல்லாம் ஆகவேணுமென்ருல் யெப்படி நடக்கும்

யெனக்கெழுதுகிறதானால் ஒரு வேளை ஆற்காட்டின் பேரிலே போகச் சொல்லி யெழுதுகிறீர்கள். ஒருவேளைக்கி திரிச்சிராப்பள்ளியின் பேரிலே போகச்சொல்லி யெழுதுகிறீர்கள் ஒருநாளைக்கி தீவுக்கோட்டையின் பேரிலே போகச் சொல்லி யெழுதுகிறீர்கள் ஒரு நாளைக்கி சிதம்பரத்தின்பேரிலே ஒரு நாளைக்கி விறுத்தாசலத்தின் பேரிலே யிப்படிப் போகச் சொல்லி யெழுதினால் நான் யெங்கே யென்று போறது யெந்தக்காரியமும் யென்னமாய் நடக்கும் நான் வந்ததைத் தொட்டு உங்களுக்குப் பணச்சிலவும் யெனக்கும் நல்ல நல்ல சறுதாறுகள் யென் தம்பி வகையிரா வெகு சனங்கள் செத்ததே யல்லாமல் யித்தமட்டுக்கும் ஒரு காரியமுமானதில்லே யிப்பவும் யெனக்கு சிலவு கொடுத்து அனுப்பினால் போறேன் யில்லேயென்று காரியம் நடத்த வேணுமென்றால் உங்கள் வெள்ளைக்காறர்களைத் தொட்டு ஒரு காரியமும் ஆகிறதில்லே சேக்கசேனை (Shaik Asan) அனுப்பி ஒருமுகனையாய் விட்டு ஒருமுகத்திலே செயம்பண்ணச் சொல்லி அனுப்பினால் அந்தப்படி பாற்குறேனென்று யெழுதி அனுப்பினதின் பேரிலே திரிசிராப்பள்ளியிலே சத்துரு பெலத்து யிருக்கிறான் யென்றும் ஒருவிசனமும் நந்திராசா வகையிரா நம்முடைய பவுன்சு முறுஞ்சு ஓடிப்போச்சென்கிற விசனமொன்றும் அதினாலேயும் விசாரமாயிருக்கிறாரென்று சொன்னதுமல்லாமல் யிந்தக்காகிதம் வந்த பிற்பாடு தொரையாய்ப்பெண்சாதி அண்டைக்குப் போய்ப் பேசி காகிதம் அவன் மாரிபத்திலே படிச்சுக் கொண்டு மறுபடி சமாதானமா யிருக்கிறார்களென்று சொன்னார்கள்.

## 1753ஆ ஜூலைமீ 23உ ஸ்ரீமுகஆ ஆடிமீ 12உ சோமவாரம்

இத்தனாள் காலத்தாலே லாக்கூர்-(Herecule) என்கிற கப்பல் மச்சிலிபந்தருக்குப்போயங்கேயிருந்தும் அப்பால் பங்காளம் போக பாயெடுத்தான். அந்தக்கப்பலிலே யித்தனாள் காலத்தாலே ஆறு மணிக்கு முன்னே சினத்திலிருந்துவந்த தெறக்குதேர் முசே ரோத்து-(Mr. Roth) என்கிறவன் யேறிப்போனான். படகிலே யேறச்சே பதினொரு பீரங்கிப்போட்டார்கள் அப்பால் கப்பலின் பேரிலே ஏறிப்போனவுடனே பதினொரு பீரங்கி போட்டார்கள். அப்பாலிவன் பந்தரிலே போயிறங்கி அங்கேயே ஒருமாசமிருந்து அங்கேயிருந்து பங்காளம் போய் அங்கேயிருந்து மார்கழிமீ போறகப்பலிலே சீமைக்கிப் போறான் சீமைக்கிப்போனவுடனே கும்பினீரிலே யிவன் ஒரு திரேக்குதேராயிருந்து கொண்டிருப்பானே யென்று சொன்னார்கள். சீனாவிலே பதினொரு வருஷம் திரேக்கு தேராய் யிருந்து ஆறுலட்சம் விராகன் சம்பாதிச்சு இனிமேலே சீமையிலே போய் திரேக்குதேராய்யிருக்கப்போறானென்று சொன்னார்கள். கோன்சேலியோர்கள் சொன்னார்கள் இத்தனாள் சாயங்காலம் யேழுமணிக்கு கும்பினீர்வர்த்தகர்கள் வந்து சொன்னார்கள் அவர்கள் சொன்னது முசேகோற்னேத்து யெங்கள் பத்து வரவு கணக்கு தொகை துறையவர்களுக்கு எழுதிக்கொண்டு ரூபாய் குடுத்ததில் ரொக்கம் குடுத்ததில் பிசகாயிருக்குதென்று முசே கில்லியார் (Mr. Guillard) ரை அழைப்பிச்சு அவர் கொடுத்த ரொக்கப்பத்து சோதிச்சு யெழுதி வரச்சொன்னதாய் முசேமீரா கொர்னே பேசியிருந்தார்கள்.

நாளைக்காலத்தாலே யிந்த பிரஸ்தாபமாய் நடக்குமென்று சொன்னார்கள். ஆனால் உங்களை ரொக்கப்பத்து யெழுதிக் கொண்டு வாருங்கோள் நானுங்கணக்கு யெழுதி வைச்சேன். அந்தக் கணக்கும்பார்த்து யெழுதிக்கொண்டு வாறேன் நீங்களும் முறைகள் கணக்குப்படிக்கு ஒரு பிறதி யெழுதி அனுப்புங்கோவென்று சொல்லி அனுப்பியுங்கோளென்று அனுப்பிச்சுப போட்டு நானும் யெட்டரைமணிக்கு யென்கச்சேரியே வந்து பிற்பாடு வீட்டுக்குப் போனேன்.

## 1753ஆ ஜுலை 24௳ ஸ்ரீமுகஆ ஆடிமீ 13௳ அங்காரகவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப்போன விடத்திலே துரையவர்களிருந்துக்கொண்டு வர்த்தர் கணக்கைப் பார்த்தேன். அவர்கள் அன்பதினாயிரம் விராகன் மட்டுக்கும் குடுக்க வேணும்யென்றுசொன்னார். அதுக்கு நான்சொன்னது அந்தமட்டுக்கும்யிராதென்று சொன்னேன். நல்லது கணக்கு காண்பிக்கிறேன்யிருவென்று சொல்லி அங்கிபோட்டு பழையகொவணமா வைபோகச்சே நான்பதினொருமணிக்குவருவேன். அப்போ நீ வந்தால்பேசிக்கொண்டு நடக்கவேண்டிய சம்மதிக்கிவயணைஞ் சொல்லிப்போட்டுப்போனார். அப்பால் நான்பிடவைபார்க்கிற சாலையே வந்தேன் அங்கே கும்பினீர் வற்த்தகர்கள்யிருந்தார்கள். அவர்களுடனே துரைசொன்ன சேதியைச்சொல்லி யென்காசாக் கச்சேரியே வந்தேன். அப்பால் துரையவர்கள் பழைய வீட்டிலே யிருந்து நேத்தையதினத்தைப்போலே பழைய காகிதங்கள் பார்த்துக்கொண்டு சுட்டுப்போடுகிறதைச் சுட்டுப்போட்டு பத்து மணிவேளைக்கி கோட்டையே போனார் யென்கிற சேதிகேட்டு நானும் கோட்டையேபோய் கோவற்ணமாம் தாமுயிருக்கிற தொரையவர்களைக்கண்டு ஆசாரம் பண்ணினேன்.

யிதிலே முசே கொற்னேத்து கும்பினீர் வற்த்தகர்கள் ரொக்கம் பத்தினதும் அவர்கள் சரக்கு போட்டதும் வரவேண்டியதும் கணக்கு யெழுதிக் கொண்டு வந்து கொடுத்தான் அதைப்பார்த்து கும்பினீர் வற்த்தகர்கள் ஒன்றுங்கொடுக்கவேண்டியதில்லையா நாற்பதினாயிரம் விராகன் மட்டுக்கும் நிலுவை வருகுதென்றும் சொன்னார் கணக்குப்படிக்கி முப்பத்தொண்பதினாயிரத்தி சில்லுவான் விராகன் வரவேணும். அது கட்டுப்போட்டதற்கும முசே கொற்னேத்து——— ——— - —துரையவர்கள் கணக்கில் பத்தெழுதிருக்கும் மத்தது யெழுதப்பட்டிருக்காது. அதுக்கு வயனம் நான் சொல்லுகிறேன்.

சேலத்துப் பிடவை பதினையாயிரம் விராகன். வண்ணாந் துரையிலே யேழாயிரம் விராகன் பிடவை யிருக்குது. அவர்களைக் கிட்டங்கியிலே ஓர்க்கண்டி பறக்காளாவகையிரா திலிசுகளை பதினாயிரம் விராகன் மட்டுக்கும் யிருக்குது. தறை மீதில் ரெண்டாயிரத் தன்னூறு விராகன் மட்டுக்கும் கோட்டைக் கிட்டங்கியிலே யிருக்குது யிதல்லாமல் வண்ணாந்துரை காரைக்கால்

யேனத்துப் பிடவை கூலிக்கு அய்யாயிரம் விராகன் மட்டுக்கும் குடுபட்டிருக்கிறது ஆக யிந்தடுகையிலே பணம் சரிக்கட்டியிருக்குது நிலுவைக்கு யென்று சொன்னதுக்கு இதெல்லாம் கட்டுப்போட்டு கணக்கிலே யெழுதப்படு மட்டுக்கும அவர்கள் பேரிலே நிலுவையாமே அதினாலே நான் வேறு யென்ன யில்லை நிலுவை சேரவேண்டிய தெல்லாம் பிடவை சேரவேண்டியதுதானே யல்லாமல் கணக்கு சரிதான் யென்று மூசே கொற்னேத்து கையிலே குடுத்து விட்டு கும்பினீர் வர்த்தகர்களுக்கு குடுக்கிறதுக்கு பதினாயிரம் பொன் விராகனுக்கு மூசியே லிலியார் பேருக்கு ஒருநிருபம் யெழுதிக் கொண்டு வா யென்று சொன்னார். அந்தப்படிக்கி மூசியே பெடுத்தராம் (Mr. Bertrand) அஸ்தகன் மூசே பிளாக்கூர்டு (Mr. Flacourt) கையிலே எழுதிவிச்சு தொரையவர்கள் மேல் வீட்டின் கபினேத்திலே யிருக்கச்சே கொண்டு போய் குடுத்தவுடனே கையெழுத்துப்போடச் சொன்னதென்னவென்றால் வற்த்தகர்கள் பேரிலே ஆயிரம் யேறக்குறைய நாற்பதினாயிரம் விராகன் வரவேணுமே யிப்போ பதினாயிரம் விராகனாச்சுதே சகலாத்து கட்டுடன் நாற்பது ஆக தொண்ணூறாயிரம் ஆச்சுதே யின்னம் பதினாயிரம் விராகன் குடுத்தால் லக்ஷம் ஆகுதே லக்ஷம் விராகனுக்குமே சரசரி ஒரப்பு மெல்லீசு ஆயிரம் கட்டு விழுமே நீர்தான் காங்கு கட்டு அன்னூறு கட்டு கும்பினீர் மச்சிலிபந்தரிலேயிருந்து யேனத்துப் பிடவை ரெண்டாயிரம் கட்டு அனுப்புறோமென்று மூசே மொறசேன் யெழுதி அனுப்பினானே ஆக மூவாயிரத்தன்னூறு கட்டு ஆகுதே கோட்டை கிட்டங்கியிலே யெண்ணூறு கட்டு மட்டுக்கும் யிருக்குதே ஆக நலாயிரத்தி முன்னூறு கட்டு ஆகுதே யிதுக்கு யிறநூறு முன்னூறு கட்டு யேறக்குறையவானாலும் நாலாயிரம கட்டுக்கு பின்னை யொன்றும் சந்தேகமில்லையே மூணு கப்பல் காம்பாரிட்டு அனுப்ப லாமென்று சொன்னார். அதுக்கு சந்தேகம் யென்னயிருக்குது உம்முடைய யோசனைக்கும் உம்முடைய அதிருஷ்டத்துக்கும் கேழ்க்கவேண்டியதென்ன நீர் மனதிலேயும் சுவயானத்திலேயும் யெண்ணுற காரியங்களெல்லாம் உமக்கு நடந்தேறிப் போச்சுது டில்லி சுக்குருத்துக்கு உம்முடைய பயம் பிடிச்சால் மத்தத்தை சொல்லவேண்டியதென்ன அப்படி யிருக்கச்சே யிந்த நாலாயிரங் கட்டு சேகரமாகிறதுதானே ஒரு ஆச்சரியமாய்ச் சொல்லுகிறீர்கள் யென்று சொன்னதுக்கு மெய்தான் ஆனாலும் யோசனை பண்ணவேண்டியதுதான் என்று சொல்லி யிப்போ சேலத்துப் பிடவை வந்து சேலத்து வர்த்தகாள் சம்பாவு கோயிலார் முன்னிலையாய்க் கொண்டு வந்தது அதுக்குப் பணம் கும்பினியார் வர்த்தகர்கள் குடுக்கலையில்ல. அந்தப்பணம் நந்திராசா யெனக்கு அனுப்ப வேண்டிய பணமான படியினாலே அதுநான்கும்பினீரிலே வாங்கிக்கொள்ளுகிறேன் யென்று சொன்னார் அப்படி செய்யுறதுதானென்று சொன்னேன். யிந்த பிடவை இங்கிரேசுக்காறர்களுக்கு கூடின பிடவையாமே நந்திராசவுக்கும் யிங்கிரேசுக்காறர்களுக்கும் பிகாடிச்சுப்பிற்பாடு சேலம் டங்காசாலே யாருக்கு யெழுதியனுப்பிவிச்சு யிங்கிரேசுக்காறர்களுக்கு சரக்கு கொடுக்கவேண்டாமென்று யெழுதினதின் பேரிலே கூடின பிடவையை அனுப்பாமல் நிறுத்தியிப்போ நமக்கு கொண்டு வந்து போடுகிறார்கள் யென்று சொன்னார் மெயிதான் யிந்தசேதி யிதிப்பாதிப் பிடவை

யிங்கிறேசுக்காறர்கள் கழிச்சுப் போட்டதுண்டு யென்று சொன்ன துக்கு சும்மாயிருந்து சென்னப்பட்டணத்தார் சகலாத்து தாழ்த்தி விப்பாரென்று கேட்டார் காலதேச வர்த்தமானங்களிருக்கிறதுக்குத் தக்கதாய் விக்குறூர்களென்று சொன்னேன். அதுக்கு துரை யவர்கள் சொன்னது யிங்கிறேசுக்கும்பினியார் கடலுலே முழுகிப் போறயேஷியம் மூணுவருஷமாய்க் கண்டு கொண்டே வருகுது. அத்துடனே யிப்போ யிங்கிறேசுக்காறர்கள் நடத்தை விசாரித்தாலும் அப்படியே காணுது யென்று சொன்னார் ஓடுகிற காலத்திலே ஓடினால் உளுக்காறு கிறகாலம் வந்தபோது உளுக்காறுமல் தீருமா வென்று சொன்னேன் சுங்கு சேஷாசல செட்டி கபினேத்து வாசற் படியிலே வந்து நின்று சலாம் பண்ணினான். சென்னப்பட்டிணம் கெந்தவடி வெங்கிட்டறும செட்டி யென்கிறவன் கையிலே பெரிய வச்சிரமொன்று யிருந்துதே அது திராமல் போச்சுதே யென்றுகேட்டார், அதுக்கு சேஷாசால செட்டி சொன்னது கலக்கத்தை தொட்டு ஒன்றும் நடக்கவில்லே யென்று சொன்னான். அந்தப்பேச்சுக் கேட்டும் கேளாததுமாய் மதாங் காம் பிறுவிலே போனார். நான் பிடவை பார்க்கிற சாலேயே வந்து கும்பினீர் வற்த்தகர் கையில் ஒடுநிறை சையுங் கொடுத்து துரையவர்கள் அபிப்பிறுயம் யிவ்வருஷம் கட்டுக் கப்பலுக்கு யேத்துகிற பம்பகம் சொன்னபடிக்கு சொல்லி அவர் அப்பிறுயம் அப்படியே யிருக்கிறபடியினாலே நீங்கள் ஆயிரங்கட்டுக்கும் சரியாய்க் கூட்டவேணு மென்றும் யித்தனே நாளேப்போலே சாக்கிறதை ஒப்பியிருக்கப் போறீர்கள் யென்று ஒரு றத்துக்குப் பத்துதரம் சொல்லிக்கொண்டால் குருவப்ப ட்டியையும் சாட்சி யென்று சொல்லிப்போட்டு முசே கிலியா ரண்டைக்கி பணத்தை வாங்கிக் கொள்ளுங்கோள் யென்று சொல்லிப்போட்டு முசே கிளியாரை விசாரித்தால் பேதிக்கி வாங்கிக் கொண்டாரென்று சொன்னார்கள். அதின்பேரிலே உங்களுக்குச் சம்மதியானபோது போய் பணத்தை வங்கிக்கொள்ளச் சொல்லி சொன்னதுக்கு ஒடுதிறைசை வாங்கிக் கொண்டு பணம் வாங்கி கொள்ளுகிறோமென்று சொன்னார்கள் அதின் பேரிலே யென் காசாக்கச்சேரியே வந்தேன்.————

## 1753ஸு ஜூலைமீ 25உ ஸ்ரீமுகஸு ஆடிமீ 14உ புதவாரம்

இத்தனாள் வெள்ளேக்காறருக்குப் பண்டிகையான படியினாலே கோயிலுக்குப் போய் பூசை கேட்டு வந்து தேகுடிக்கச்சே பத்துமணி வேளையாச்சுது அப்பால் தே குடிக்கச்சே திரிச்சிராப் பள்ளியிலிருந்து நந்திராசாவண்டைக்கி நாலாம்நாள் அஞ்சாம் நாள் போனகபுறு கொண்டுவருகிற ஒட்டகம் காகிதங்கள் கொண்டு வந்து கொடுத்தான். அதைப்பார்த்துக்கொண்டதே மேல் வீட்டின் பேரிலே பெண்சாதியை அழைத்துக் கொண்டு போனார் நானும் அங்கேயிருந்தவர்களும் அவரவர்கள் படிக்காணுவுக்கு போனார்கள் நான் யென்படிக்காணுவுக்கு வந்தேன் ஆனால் துரையவர்கள் முகம் மெத்த வாட்டமாயிருந்தது.

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி காலத்தாலே நிச்சிராப்பள்ளி அண்டையிலே யிறங்கியிருக்கிற நந்திராசா யெழுதின காகிதத்திலே உங்கள் பவுன்சு யெசமான் முசே அஸ்துருக்கு யென்கிறவன் எங்கள் கையில் சம்பளம் வெகுமானங்கள் பின்னையும் சிலவு உள்பட ரெண்டு லக்ஷம் ருபாயிக்கு பொன்நகைகள் ரத்தினநகைகள் வெள்ளி நகைகள் வகையிராக்கள் தினசுகள் வாங்கிக்கொண்டு யிதல்லாமல் உங்களுக்கு கொடுக்க வேண்டியதில் குடுக்கச்சொல்லி லட்சம் ருபாய் வாங்கிக் கொண்டு திரும்பியும் யெங்களுடனே கலகமிட்டுக்கொண்டு நீங்கள் வரச் சொல்லிச் சொன்னீர்களென்று பவுன்சு சமேதமாய் பிறப்பட்டு கொள்ளிடம் கிடந்து சமயவரம் போனான். யென்றுமிப்போ யிப்பறம் மமுதல்லிக்கானும் தஞ்சாவூர் மறவன் தொண்டமான் வகையிரா பாளையக்காறர்களும் கூடிக்கொண்டு யெங்கள் பவுன்சுக்குச் சமீபமாய் வந்து யிறங்கினார்கள் யினியெங்கள் பவுன்சிலே அவர்கள் பவுன்சை அடிக்கிற—நிறுவாகம் காணபிக்கயில்லை. ஆனபடியினாலே உங்கள் பவுன்சு கொமாந்தாமை முசே ஆஸ்துருக்குக்கு யெழுதி அனுப்பி யெங்களுக்கு மத்தத்தாயிருந்து சத்துருலை அடிக்கச் சொல்லியும் யின்னம் பவுன்சும் மருந்து குண்டு துப்பாக்கிகள் பீறங்கிகள் வகையிரா சண்டை சாமானுகளும் அனுப்பிக்கவேணும் யென்றும் யிப்படியாக அனுப்பாமல்ப் போனால் யெங்கள் பவுன்சும் நாளும் முழுகிப் போறோமென்றும் யிப்படிப்பட்ட பீந்தி கூந்தல் போட்டுக்கொண்டு யெழுதி அனுப்பினதாயும் அதுக்குப் பதிலுத்தரம் அப்போதானே யெழுதி முசேஅஸ்துருக்கு (Mr Astruc)வையும் பவுன்சையும் போகச் சொல்லியும் நந்திராசாவுக்கு முசே அஸ்துருக்கு பவுன்சும் வந்து மமுதல்லிக்கானை அடிச்சு உமக்கும் செயம் குடுப்பார்களென்றும் உம்முடனே கூடயிருந்து நீர்சொன்னபடி கேட்டு நடந்து கொள்ளச் சொல்லி வெகு தாக்கீதாயெழுதினோம் யென்றும் யினிமேல் மமுதல்லிக்கான் ஓடிப்போவான் யென்றும் யிந்தப்படியாக யெழுதினது மல்லாமல் முன் நீங்கள் பதினைஞ்சு லட்சம் ருபாயி கொடுக்கிறோம் என்று சொன்னதுக்கு மூணுலட்சம் ருபா கொடுத்தீர்கள் தறை பணி றெண்டுலட்சம் ருபாயும் அதிசீக்கிறமாய் அனுப்பச் சொல்லியும் யின்னம் பவுன்சு மருந்து குண்டும் வகையிரா சண்டை சான்சாமி வகையிரா அனுப்புறோ மென்றும் காகிதங்கள் வயணமாக நந்திராசா அஸ்துருக்கு வகையிராக்களுக்கு யெழுதி மயிசூர் வைக்கில் வெங்கிட்ட நாறுயணப்பய்யனை அழைப்பிச்சு அவரைக்கொண்டும் யிந்த வயணங் களெல்லாம் காகிதங்களும் எழுதிவிச்சு யின்று பகலைக்கு மேலாக ரெண்டு அறுக்காறு ஒட்டகமும் யெட்டு அறுக்காறுகள் கையிலேயும் குடுத்து ரவானாபண்ணி அனுப்பினதாய் சேதி கேழ்விப்பட்டபடிக்கு யெழுதி வைத்தேன்.

இத்தனாள் சிதம்பரம் முதாமியாலை மணிக்கூண்டின் பேரிலே யிருந்தவனை மேலண்டை வாசற்படி பாதாளக்கிட்டங்கியிலே போட்டார்களென்று சொன்னார்கள். விலங்குகொண்டுபோய் முன்னே வைத்து சீக்கரமாய் கொடுத்தாலாச்சுது. யில்லாவிட்டால் போடுவோ மென்று நிறுத்தினார்கள். மூணுலட்சம் ருபாயிக்கு சம்மதிச்சாப் போலயும் அஞ்சுலட்சம் ருபாயிக்கு சம்மதிக்கச் சொல்லி சொல்லிப் போட்டு றொம்பவும் கஸ்தி பண்ணுறதாய்ச் சொன்னார்கள் பெரியப் பெருமாள் பிள்ளையை மேலண்டை வாசற்படியிலே யிருக்கிற கிட்டங்கியிலே போட்டிருந்தவனை விட்டு நயினார் விட்டிலே வைத்து

அவனைக் கொண்டு அஞ்சுலட்சம் ரூபாய்க்கும் முதாமியாவுக்கு சமுதாயிக்கக் கொண்டு சொல்லி குடுக்கப்பண்ண யெலம்பண்ணிக் கொண்டபடியினாலே சகல கருவியாய் விட்டு விட்டார்களென்று சொல்லிக் கொண்டார்கள்.

## 1753ஞு ஜூலை மீ 28உ ஸ்ரீமுகஞு ஆடி மீ 17உ சனிவாரம்

இத்தனாள் மகலைக்கு மேலாக துரையவர்கள் சகறுப்பஞ்சுந்துக்கு கோட்டை அலங்கத்தின் பேரிலே யேறி கொல்லத்துநில்லை மேஸ்திரியையும் பிரங்கிமேஸ்திரியையும் கூடஅழைத்துக்கொண்டு அலங்கத்தின் பேரிலே முடியநடந்துக்கொண்டு கொத்தளங்களும் கொத்தளங்களிலே யிருக்கிற விடுகளும் கூடவூர் வாசர்படிகளிலேயும் அங்கங்கே யிறங்கிப்பார்த்து முஸ்திதுகள் போனதுகளெல்லாம் முஸ்தித்துப் பண்ணச்சொல்லியும் கொத்தளங்களிலே யிருக்கிற வீடுகள் சன்னல்கள் முதலானதுகளெல்லாம் முஸ்திப்பு பண்ணச்சொல்லியும் சிறிது சன்னல்களை அடைச்சுப் போடுறதை அடைச்சுப் போடச்சொல்லியும் பிறங்கிகளெல்லாம் வண்டியில்லாமல் தாழக்கிடந்தது. அதுகளுக்கெல்லாம் வண்டிக்கொண்டு வந்து வண்டியின் பேரிலே யேத்தி அங்கங்கே மருந்துகுண்டு முதலான சாமானுகளையெல்லாம் முஸ்தித்து பண்ணி ஒவ்வொரு பிறங்கி மேஸ்திரியையும் யிருக்கச்சொல்லி திட்டம் பண்ணிப்போட்டு முடிய வந்து கடற்கரை வாசற்படி அண்டையிலே யிறங்கி கோட்டையே போனார். விபரஞ்சு இங்கிரேசுக்காறர் கலாபமான பிற்பாடு நாசறீசங்கு வழுதாவூரண்டையிலே வந்து யிறங்கி வந்த போதும் கொத்தள வழிவந்தவரல்ல அதின் பிற்பாடு தாவில்லையே யில்லையே அப்படிப்பட்டவர் யின்றைக்கு அலங்கத்தின் பேரிலே யேறி ஊரைச் சுத்தின நாலுநாழிகை செல்லும் அந்தமட்டுக்கும் வெள்ளைக்காறர் கலாபம் யில்லாமல் யிப்படி நடப்பிக்க சுவையில்லை. யென்றும் பட்டணத்திலுள்ள சனங்களெல்லாம் கேழ்விப்பட்டவர்களுக்கெல்லாம் விபரஞ்சு சண்டையை நினைத்துக்கொண்டு அவரவர் பயந்துக்கொண்டு காபிறுவாய்ப் பேசிக்கொண்டார்கள் என்று கேழ்விப்பட்டேன் என்று அவரவர் வந்து சொன்னார்கள். கேழ்விப் பட்டதை சேதி எழுதிவைத்தேன்.

இத்தனாள் சென்னப்பட்டணம் சம்பத்திராயன் மனுஷர் ரெண்டு பேர் சேவுகர்களை யில்விடத்திலே—காலிபுகான் மகனுடைய மகளை ரெண்டு மூணு மாசத்துக்கு முன்னமே கலியாணம் பண்ணின நீர்மதுல்லாக்கான் யென்கிறவன் பேருடையவனுக்கு காகிதங் கொண்டுவந்ததாயும் அந்தக்காகிதம் சென்னப்பட்டணத்து வழியிலே யிருக்கிற நயினார் சேவுகர் அந்த சேவுகர் கையில் யிருந்ததை வாங்கிக்கொண்டு அவர்களை பிடிச்சுக்கொண்டு யித்தனாள் ராத்திரி யேழுமணிக்கி துரையவர்களண்டையிலே கொண்டுபோய் விட்டதாயும் அவர்கள் கேட்ட விடத்திலே அவர்கள் சொன்னது சாகிருகில்லாவும் நிமித்தியமும் ரெண்டு மூணு திரம் காகிதமெழுதி யனுப்பினது முண்டு. வந்ததுண்டு போனதுண்டு அதுவே யல்லாமல் பின்னை யொன்றும் நாங்களறியோம் யென்று அவர்கள் சொன்னதாய்ச் சொன்னார்கள்

அந்தசேதியை யெழுதி வைத்தேன். அதன் பேரிலே யிவர்களைக் கொண்டு போய் நயினர் வீட்டிலே காவல் வைத்து காலிபுகான் மகன் மகளைக்கலியாணம் பண்ணினவன் வீட்டேபோய் தேடின விடத்திலே அவனிந்தச்சேதி அறிஞ்சு தெளிஞ்சுப் போனதுமாய் அவர்கள் பெண்சாதி முதலான பேர்கள் வீட்டிலே யிருந்தவர்களை காவல் பண்ணி அவனைத்தொட்டு மனுஷர்கள் பிறப்பட்டது மல்லாமல் தெத்துவாசற்படிகளிலே அல்லாம் மனுஷர்களை வைத்ததாய் ஒன்பது மணிக்கு சேதிவந்து சொன்னார்கள்.

## 1753ஸ் ஜூலைமீ 30உ ஸ்ரீமுகஸ் ஆடிமீ 19உ சோமவாரம்

இத்தனாள் ராத்திரி ஆறரைமணிக்கி யேமுமணிக்கு தில்லைமேஸ்திரிப்போய் துரையவர்களுடனே வாலிகொண்டாபுரஞ் சீர்மை உசேன் சாயபு குமாரன் மொத்தாபர்கான் பவுன்சு சேத்து அனுப்பி யிறைவாசநல்லூர் பனிரெண்டு பத்து சீர்மை யெல்லாம் யேகமாய் சபித்திபண்ணி யெங்கள் மனுஷர்கள் முன்னூறு நானூறு பாறுகாறர்களும் யெங்கள் அமுல்தாறனுமிருந்தார்கள். அவர்கள் பேரிலே சண்டைபண்ணி யெங்கள் அமுல்தாரனையும் பிடிச்சுக் கொண்டு யிருநூறு பேர்களை வெட்டியும் காயம்பண்ணியும் யிந்தப் படிக்கி நடத்திப்போட்டு சீமையுங்கட்டிக் கொண்டு அமுல்பண்ணிக் கொண்டு போறார்கள். அதுக்கு ஆயிரம் ஆயிரத்தன்னூறு மராட்டியர் குதிரைகளும் ரெண்டாயிரம் பாறுக்காறர் ஆனாலும் அல்லது ஆயிரம் பாறுக்காறர்களைப் போய் அவர்களை அடிச்சுத் தெரத்தினாலே அல்லாமல் அவர்கள் போகத்தக்கதில்லை. அவர்கள் போகாவிட்டால் பணம் ஆக மாட்டாது யென்றும் குதிரைக் காறர்களையும் பாறுகாறர்களையும் கூட்டவேணுமென்றும் துரையவர் களுடனே செல்லிக்கொண்டதுக்கு துரையவர்கள் யென்பணம் முழுக்கடிக்க யோசனை பண்ணி தான்தானே முதல் காலாலே அஞ்சாறு உதையும் கையாலே யேமெட்டுக் குத்தும் குத்தி அப்பால் சோபுதாரை விட்டு அடிக்கச்சொல்லி கசோத்திலே போடச் சொல்லி அப்பால் பாப்பையப்பிள்ளையை அழைப்பிச்சு யிவன் கொல்லுத்துக் காறன் கூலிசெய்யுறவன் கையிலே லட்சக்கணக்கா யிருக்கிற சீமையைக் கொடுத்து யென்பணத்தை முழுக்கடிச்சா யென்று வெகுசாய் கோபம் பண்ணி அவனுக்கு கொடுத்த பிறசாதம் யிவனுக்குங்கொடுத்தாரே யல்லாமல் அவனுக்கு காருக்கிரப் பிரவேசங்கிடைச்சு யிவனுக்கு அந்தப்பாக்கியம் கிடைக்கவில்லையாம் அந்தமட்டிலே யிவன்—பெரியம்மாள் பக்கமாய் போய்ச்சேர்ந்தா னென்று சொன்னார்கள் இத்தனாள் திரிச்சிராப்பள்ளியிலிருந்து—சுசாசத்துக்கான் (Shujaat Khan) என்கிற துருக்கி வந்து துரையவர்களை சந்திச்சு துரையவர்களுடனே முசே அஸ்துதுருக்கு யென்கிறவன் மயிசூர்தளவாய் நந்திராசாவை அவமானமாய் பேசி அவன் பேரிலே கணக்கு யெத்தனம் பண்ணி அப்பால் சமாதானத்தின் பேரிலே அஞ்சுலட்சம் ரூபாயிக்கு ரெக்கமும் றத்தின நகைகளும் வாங்கினதில் நந்திராசா—காசாபோட்டுக் கொள்ளுகிறதுக்கு றத்னமிழைத்தது. துராய்சிறேபேத்து—(Tura Sarpech) பதக்கங்கள் கொலுசுகள் முதலான ரெண்டுலட்ச ரூபாயுடனே உடமையையெல்லாம். லட்சம் ரூபாயிக்கு யீடுகட்டி முத்திரை போட்டு பணங்குடுத்து வாங்கிக்

கொள்ளுகிறோமென்று குடுத்து றத்தின நகைமுட்டையை நந்திராசா முகறு படிக்கி துரையவர்கள் முன்னே வைத்து நடந்த சேதியைச் சொல்லி முசே ஆஸ்துருக்கு கொள்ளிடத்து யிக்கரை பவுன்சுடனே வந்து சேர்ந்ததும் அதிலே உங்கள் காகிதம் மறுபடியும் நந்திராசா வண்டைக்குப் போகச் சொல்லி வந்ததின் பேரிலே மறுபடி போனது மல்லாமல் யிப்பால் தான்வரச்சே முசே ஆஸ்திரிக்கு கொம்மாந்திடம் தகருறு ஆயிமுசே பிறணி (Mr. Brenier) யை கொம்மாந்தாமாய்ப் போறவனை வழியிலே கண்டுது முதலான சேதிசொன்ன மாத்திரத்திலே துரையவர்கள் சுசாயத்துக்கானைப் பார்த்து நீர் நந்திராசாவுக்கு அனுகூலமாயிருந்து பத்துபணம் விசேஷிச்சு வாங்கிக் கொண்டு நம்முடைய காரியமாக யிருக்கிறதுகளெல்லாம் கொடுத்துப் போட்டு நந்திராசாவுக்கும் தனக்கும் பகைகொண்டு வந்து விட்டவன் நீயென்று முசே அஸ்திரிக்கு யெழுதி அனுப்பி விச்சாரனென்று சொல்லி சுசாயத்துக்கான் பேரிலே வெகுசாய்க் கோபம் பண்ணினாரென்றும் அதுக்கு அவன் தான் நடந்து கொண்ட ஞாயங்களெல்லாம் செல்லிக்கொண்டானென்றும் அதன்பேரிலே மயிசூர் வைக்கீல் வெங்கிட்ட நாறணப்பய்யனை அழைப்பிச்சு நம்முட கொமாந்தாம் நாமெழுதியனுப்பாத காரியம் அவன் செய்தான் அதின் பேரிலே அவனை தகீர் பண்ணி வரச்சொல்லி யெழுதி முசே பிறணியை அனுப்பிவிச்சோமென்றும் நந்தி ராசா கசுசாப் போட்டுக்கொண்டிருந்த உடமையை லட்சம் ருபாயிக்கு அடகு வைத்து முத்திரிகை போட்டுக்கொடுத்த உடமை யிதோ மூத்திரைப்படிக்கி யிருக்கிறது. நம்மண்டைக்கு வந்து நாம் அனுப்பினோமென்ற அடையாளத்துக்கு யென் முத்திரை அந்த மூட்டையின் பேரிலே போட்டு நானும் காகிதமெழுதி யிப்போ ஒட்டகைக்காறன் கையிலே குடுத்து அனுப்புறோம் நீரும் யிந்தவயனமெல்லாம் யெழுதி யனுப்புமென்று சொல்ல அந்தப்படிக்கி வெங்கிட்ட நாறணப்பய்யனும் காகிதமெழுதிக் குடுக்க உடமை மூட்டையும் காகிதங்களும் நந்தி ராசாவண்டைக்கு திருச்சிராப்பள்ளிக்கி அனுப்பிவிச்சதாய்க் கேழ்விப்பட்ட சேதியை யெழுதி வைத்தேன்.

### 1753௵ ஜூலை௴ 31௳ ஸ்ரீமுக௵ ஆடி௴ 20௳
### அங்காரகவாரம்

இத்தனாள் காலத்தாலே தொரையவர்கள் தாழவராமல் மேலே, தானே தே குடிச்சதினாலே நான் போய் காண்பிச்சுக்கொண்டு வருவோமென்று போகச்சே அபரங்காபாத்திலிருந்து சலாபத் நுசங்கு காகிதமும் அங்கே வெள்ளைக்காறன் போர் விளங்கன் யிருக்கிறவன் காகிதமும் வந்து அப்போதான் பறங்கிக்காறன் காகிதம் படிக்க மதனாந்தபண்டிதன் அழைப்பிச்சுக்கொண்டு போனார்கள். வெள்ளைக்காற காகிதம் படிச்ச மாத்திரத்திலே அப்போ துரையவர்கள் முகம் வெகு கோபாவேசமாய்க் கண்டுது அப்போ ஒரு ஒபிசியால் பேசப்போனான் தாழ வந்தவிடத்திலே பேசப் போகாதே மேலே காரியமாயிருக்கிற வேளையிலே வரவேணுமாவென்று வெகு கோபமா யெறங்கி போகச்சொன்னார். நான் காசாக் கச்சேரியே வந்தேன்.

அப்போ அங்கேயிருந்தவர்கள் முசே அலுபேர் சுசாயித்துக்கான் அவலியா சாயபு பின்னையும் ரெண்டொரு துலுக்கர் தோஸ்து மகம்மது வகையிராக்கள் முசே அலுபேர் சுசாயத்துக்கான் தவிர மத்த பேர்களெல்லாம் யென்னுடனே கூடத்தானே வந்துவிட்டார்கள் வந்த காகிதச் சேதி பார்த்தால் சந்தோஷமான காகிதச் சேதி போலே யிருக்கயில்லே.

## 1753௵ ஆகொஸ்துமீ 1௳ ஸ்ரீமுக௵ ஆடிமீ 21௳ புதவாரம்

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கு துரையவர்களண்டைக்கிப் போய் கபுறு சொல்லி. ஆன பிற்பாடு சென்னப்பட்டணத்துக்கு மேஸ்தர் மாசுகோவரன்தோரிடமாக வந்தானென்றும் அவன் யிறங்கச்சே யிருபத்தோரு பீறங்கி போட்டார்களென்றும் யிறங்குகிற பரியந்தம் கோட்டையிலே நுழையச்சே 21 பிறங்கி சுட்டார்களென்றும் அவர் கோவணர்தோரிடமாக வந்தது. ஒருத்தருக்குந் தெரியாமல் செய்து யிறங்கின பிற்பாடுதான் கோவற்ணதோர் யென்கிற காகிதங் காண்பிச்சுப் போட்டானென்றும் கபுறு சொன்னார்கள். அது மெய்யாய்க்காணயில்லே நீ யோதாகிலும் கேட்டதுண்டாவென்று கேட்டார். நான் கேழ்விப்பட்டதானால் மேஸ்தர் மாசு படுத்திகுலார் வற்த்தகனை தன் காரியங்கவைகளை யிங்கே முன் தீராமல் யிருக்கிறதுகள் தீர்த்துக்கொள்ளவும் மூனு பெண்கள் கூட வந்துதாம். அதை யிவ்விடத்திலே கலியாணம் பண்ணிக்கொடுக்கவும் வந்ததாயும் அதின் பேரிலே கும்பினியர் யிவ்விடத்துக் காரியங்களிலே மேஸ்தர் மார்சுக்கு (Moise) ஒதவிஒத்தாசை பண்ணச் சொல்லியும் மரியாதையாய் நடப்பிக்கச் சொல்லியும் யெழுதி அனுப்பினதாயும் அதுவுமல்லாமல் யிப்போ கோவற்ணதோர்த்தனம் பண்ணுகிற மேஸ்தர் சாந்தரசு (Mr. Sandass) யென்கிறவர் முன் ஆதியிலே மேஸ்தர் மாசு அண்டையிலே சொந்தகணக்கனாயிருந்து அப்பால் கும்பினீர் கணக்கனாய் கோன்சேலியோராய் விசாகப்பட்டணம் துரைத்தனம் பண்ணி சென்னப்பட்டணம் பெரிய யிடத்துக்கு வந்தவன் ஆனபடியினாலே முன் பூருவ ஸ்திதியை நினைத்து மரியாதை பண்ணினானென்றும் யிதல்லாமல் முன் சென்னப்பட்டணம் கோவற்ணதோர்த்தனம் பண்ணிக் கோட்டையை பிறுன்சுக்காறர் கையிலே ஒப்பிச்சு அபகிற்த்தியான சொல் சனங்கள் சொல்லுகிறார்களே அவர்களுக்கெல்லாம் கெனமாக தோத்த செய்ததாய் காணுமே அல்லாமல் மைத்தப்படி அவன் தொரைத்தனமாய் வந்ததாயும் தோத்தவுமில்லே. நான் கேழ்விப்பட்டதுமில்லே. வந்தது மெய்தான் மரியாதையாய்ப் பீறங்கிகள் போட்டதும் மெயிதான். தன்காரியமாக வந்தானென்று கேட்டதே அல்லாமல் கும்பினியார் காரியமாய் வந்ததாகக் கேழ்விப்படயில்லே யென்று சொன்னேன் அப்படித்தானிருக்கும் யென்று சொல்லி அப்பால் தோஸ்துமகம்மதுவுடனே மீற்சா அப்துல்லா நபிபேக்கு குதிரைகளுக்கு மூத்திரை போடச்சொல்லி சொல்லிப் போட்டு மேல்வீட்டே போனார்,

## 1753ஹு ஆகொஸ்தும்ீ 2உ ஸ்ரீமுகஹு ஆடிமீ 22உ குருவாரம்

இத்தனுள் நந்திராசா ஊழியக்காறன் காசிதாசுபுக்கன்சியின் பேரிலே யிரண்டு லட்சம் ரூபாயிக்கி தொரையவர்களுக்கு குடுக்கிறதுக்கு உண்டிகைக்காகிதமும் கொண்டு வெள்ளைக்காறர் அங்கே சோராவரிபண்ணுகிறதெல்லாம் சொல்லுகிற நிமித்தியம் அனுப்பிவிச்சதாயும் அவனையெதிரேபோய் அழைச்சு வந்து தொரையவர்கள் மதாம் பேட்டிபண்ணிக்கொண்டு அப்பால் வெங்கிட்ட நாறணப் பய்யன்யிருக்கிற விடுதியைபோயிறங்கினனென்று வந்து சொன்னுர்கள் சுசாயத்துக்காக மறுபடி நந்திராசா அண்டைக்கி அனுப்பிவிச்சதாய் கேழ்விப்பட்டுது.

## 1753ஹு ஆகொஸ்தும்ீ 4உ ஸ்ரீமுகஹு ஆடிமீ 24உ சனிவாரம்

இத்தனுள் மூசே கோற்னேத்துக்கு கோந்துவாறே போனுன் (Comptoir) அப்பால் துறைக்கி கபுறுசொன்னவுடனே மேல் வீட்டின் பேரிலே யேறிப்போனுர். நானும் பிடவைப்பார்க்கிறசாலையுடனே வந்தவுடனே மூசே கறுவால் (Mr. Carvallo) வந்தார் அவர் சென்னப்பட்டணத்துக்கு மேஸ்தர் மாசு வந்ததும் மூனுபெண்களைக்கூட அழைத்துக்கொண்டுவந்ததும் மேஸ்தர் சாந்தரசுதானே சீமைக்குத் தான் வருகிறேன் யிந்தயிடத்துக்கு வேறேயொருத்தரை அனுப்பிவிக்கச் சொல்லி யெழுதினதாகவும் செப்தோம்புறுமீத்தையிலே வருவான் சாந்தரசு ஒயித்தோம்பர்மீத்தையிலே போற கப்பலிலே போருனென்றும் மேஸ்தர் யிஷ்ட்டாருக்கு (Mr. Starke) வைவைக்கச்சொல்லி முன்யெழுதி வந்த யிந்தியில் பிறந்தவனை செனறால் யிடத்துக்கு வைக்கப்போகாதென்கிற ஞாயகத்தை யெழுதிவேறே அங்கேயிருந்து அனுப்பச்சொல்லி யெழுதி அனுப்பினதாயும் அதினலே ஆகொஸ்து-செப்த்தோம்புறமீத்தையிலே வருவான் யில்லாவிட்டால் பொம்பாயிலே வந்திருந்து தைமீத்தையிலே-(சனவரிமீ)தொரைத்தனத்துக்கு வருவானென்றும் மேஸ்தாசு சாந்தரசு வெள்ளைக்காறர்களுடனே மேசையிலே வந்து சாப்பிடுகிறதில்லையென்றும் அதெதினலே யென்றால் சனங்கள் கூட்டம் சகிக்கிறதில்லை யென்றும் காப்பிருவிலே தன் வேலைக்காறர்கூட வராதபடிக்கு ஒண்டியா யெழுதிகொண்டேயிருக்கிறது யென்றும் வடக்கே விசாகப்பட்டணத்திலே போயிருந்தவிடத்திலே தமிழர் சட்டமாய் சாதம் பருப்பு நெய் முளகுச்சார் பச்சடி வகையிரா தமிழர் சாப்பிடுகிறபடிக்கு சாப்பிடுகிறபடியினலேயும் மேசைக்கி வாரதில்லையென்றும் மேசைமேலே கப்பித்தான்குவாடுது யிதாஸ்தானத்திலேயிருந்து வருகிற கப்பல்காறர் முதலான 40 பேர்களை வைத்துக்கொண்டு சாப்பிடுகிறதென்றும் காரியத்திலே மனுஷரில்லாமல் ஒண்டியாயெழுதிக்கொண்டிருந்தாலும் காரியத்திலேயிருப்பானென்றும் சீமைக்கிப் போனுல் அங்கே ஒரு தோட்டம் ஒரு நிலம் வாங்கிக்கொண்டு சுகமாயிருக்கிறதென்றும் மேஸ்தர் மாசுக்கு (Mr. Morse) அவ்விடத்தில் கைகாசு யெல்லாம் சிலவானதைத்

தொட்டு யிந்த ராச்சியத்திலே யேதாகிலும் சம்பாந்தியம் பண்ணிக் கொண்டு போகலாமென்று வந்தான். யில்லாவிட்டால் வாரான் வந்து அவமானமென்றும் வியாபாரம் எல்லாம் தூங்குது யென்றும் யிதுமுதலான பேச்சுக்கள் பேசியிருந்து பிறப்பட்டுப் போனார்கள். நானும் என் காசாக்கச்சேரியே பத்துறை மணிக்கு வந்தேன். ஒட்டகம் ஒன்று திரிச்சிராப்பள்ளிக்கி காகிதங்கள் கொண்டு போச்சுது.

### 1753௵ ஆகொஸ்துமீ 6உ ஸ்ரீமுக௵ ஆடிமீ 26உ சோமவாரம்

இத்தனாள் கேழ்விப்பட்டசேதி திருவண்ணாமலையின் பேரிலே மிறுததசல்லிக்கான் (Murtaza Ali Khan) பவுன்சு சித்திசயித்துக்கான் (Siddhi Sayid Khan) சேக்கு மகம்மது சரீபு அசனுத்திக்கான் (Shaik Mohamed Sherif)-Hosan-ud-din Khan மனுஷன் கோவிந்தராவு வகையிறுக்கள் சண்டைக்கிப்போனவிடத்திலே சத்துருக்கள் பெலத்து அடிச்சதின்பேரிலே ரெண்டு பிறங்கிகளையும் நூத்திச் சில்லுவானம் துப்பாக்கிகளையும் ஒப்பிச்சுப்போட்டு முறிஞ்சு வேலூர் போய்ச்சேர்ந்தாரென்கிற சேதி வந்ததின் பேரிலே துரையவர்கள் கோபிச்சுக்கொண்டு அல்லிக்கான் வகையிறுக்களையும் செஞ்சி முசே (Mr.Buttans) பத்தேன்சையும் பவுன்சும் திருவண்ணாமலைக்கி அனுப்பி விச்சாரென்று சொன்னார்கள்.

### 1753௵ ஆகொஸ்துமீ 8உ ஸ்ரீமுக௵ ஆடிமீ 28உ புதவாரம்

இத்தனாள் சாயங்காலம் அவுரங்காபாத்திலேயிருந்து சலாபத்து சங்கு காகிதமும் அயிதராபாத்திலேயிருந்து முசே புசி (Mr. Bussy) வகையிறுக்களுடைய காகிதங்களும் வந்ததாய்ச் சேதி சொன்னார்கள். இதிலே வந்த அறுக்காறுகள் சொன்ன சேதியாய்க் கேழ்க்கப்பட்டுது சலாபத்து சங்குவினுடைய தம்பிமார் நிசாமல்லிக்கான் என்கிறவனையும் பின்னை ஒருத்தனையும் ரெண்டு பேரையும் கொண்டுபோய் தபாதுனுப் பேட்டை (Daubatabad) கோட்டையிலே கொண்டுபோய் காவல் வைத்து அதின் பிற்பாடு சயிதுலசுக்கர்க்கான்-நம்முடைய பிறுன்சுக்காறர் யிறநூறு சொலுதாதுகளும் ஒரு சொலுதாது சுப்பித்தான் முசே ஷாம் போல் (Mr Join ville) யென்கிறவன் யிருந்தவனையும் போகச் சொன்னதாயும் அவர்களும் கோல்கொண்டையிலே வந்து சேர்ந்துதாயும் யிப்பறம் வருகிறதுக்கு யிவ்விடத்துக்கு யெழுதி கொண்டதாயும் சொன்னதாய்ச் சொன்னார்கள்.

### 1753௵ ஆகொஸ்துமீ 9உ ஸ்ரீமுக௵ ஆடிமீ 29உ. சுக்கிறவாரம்

இத்தனாள் பத்து மணிக்கு அவிலியாசாயபு (Aulya sahite) வந்து லூநக்கு அனுப்பிவிச்சுக் கொண்டு வந்தார். அவர் சொன்னது துரையவர்கள் சிறிது சீமைகள் யென்வசம் பண்ணுகிறோம் என்றும் சிறிது பவுன்சு என்வசம் பண்ணுகிறோம் என்றும் யெழுதி அனுப்பின படியினாலே வந்தேன்.

வந்து யேமெட்டு மாசம் காத்திருந்தேன் யேழாயிரம் யெண்ணூயிரம் ரூபா சிலவாச்சுது. கடைசியிலே பென் சாகிர் ரெண்டாயிரம் ரூபாயிது அது விட்டால் சிலவு பண்ணிக் கொண்டு உம்மைக்காத்துக் கொண்டிருக்கிறேன். அப்பால் உம்முடைய சித்தம் வந்தபோது ஆகுதென்று சொன்னதுக்கு அதுக்கு மூணுதரம் பர்வானு யெழுதிக் கொடுத்து பாப்பய்யபிள்ளை விடமாட்டேன் யென்று சொல்லுகிருனென்றும் சொன்னதுக்கு தாது பிருதுயில்லாமல்ப் போச்சுது. அதைத் தொட்டு உத்திரவு வாங்கிக் கொண்டேனென்று சொல்லிப்போட்டுப் போனுன். இத்தனுள் ராத்திரி ஒன்பதரை மணிக்கி ரெண்டு பீரங்கி சபுத்தம் கேட்டுது. சாயங்காலமாகச்சே தெற்கே கப்பலைக் கண்டதைத் தொட்டு கப்பல் துரைபிடிச்சதுக்கு தெரியுரத்துக்கு பீறங்கிபோட்டா னென்று யோசனை பண்ணினேம்.

## 1753௵ ஆகொஸ்துமீ 10௳ ஸ்ரீமுக௵ ஆடிமீ 30௳ சுக்கிறவாரம்

இத்தனுள் காலத்தாலே யெட்டு மணிக்கு றிலியேர் (Rouille) யென்கிற சீமைகப்பல் மகக்கரைப்படிச்சு வந்து துரை பிடிச்சு பதினைந்து பீரங்கிப் போட்டான். கப்பல் கப்பித்தான் பேர் முசே திருபுலே (Mr Triboulet) யிதிலே வந்த கொம்மாந்தாம் முசே லெ மறுக்கி (Mr Le Marquisde Confians) தெ கோம்பிலாம் சொலுதாதுகள் நூத்தன்பது ரெண்டுபேர் சேற்சந்து கோறப்பரூல் உள்பட வந்தார்கள் யிப்போ கொமாந்தாம் வந்தவன் துறுப்புக்கு யெசமானனென்று சொன்னூர்கள். சேம்லூயிசு (St Louis) சின்ன முத்திரை போட்டுக் கொண்டிருக்கிறுன்.———

## 1753௵ ஆகொஸ்துமீ 11௳ ஸ்ரீமுக௵ ஆடிமீ 31௳ சனிவாரம்

இத்தனுள் கேழ்விப்பட்ட சேதி திரிச்சிராப்பள்ளியிலே மமுதல்விக்கான் பவுன்சுக்கும் நந்திராசா பவுன்சுக்கும் சண்டையாய் நந்திராசா தளத்திலே ரெண்டுபேர் அன்னூறு அன்னூறுபேர்களுக்கு குறிக்காரர்களாம் அவர்கள் தங்கள் தங்கள் பவுன்சை சேகரிச்சுக்கொண்டு போய் மமுதல்விக்கான் பவுன்சிலே விழுந்ததிலே மமுதல்லிக்கான் பவுன்சு சிறிது பேர்கள் சாவுக்காயமாக அதின்பேரிலே பவுன்சு சிதர சிறிது குதிரைகள் பீறங்கிகள் வகையிரா சாமானுகளை பிடிச்சுக் கொண்டும் எடுத்துக் கொண்டும் வந்து நந்திராசா வுடனே சொல்ல அந்தப் பேர்விளங்க ரெண்டு பேர்களுக்கு நந்திராசா நல்ல வெகுமானம் பண்ணதாய் துரையவர்களுக்கு சேதி யெழுதி வந்தது. துரையவர்கள் சொன்னதாய் மையிசூர் வைக்கில் சொன்னதாய்ச் சொன்னூர்கள் யிந்த சேதி ஒட்டகம் பத்தரைமணிக்கிக் கொண்டு வந்து சேதி சொன்னூர்கள் அந்தச் சினமே முசே பிறணி (Mr. Brenier) கோம்மாந்தாம் பேருக்கு காகிதம் யெழுதி மறுபடி ஒட்டகத்தைப் பயணம் பண்ணி அனுப்பினதாய்ச் சொன்னூர்கள்,

## 1753ஸு ஆகொஸ்து மீ 12உ ஸ்ரீமுக ஸு ஆடி மீ 32உ ஆதிவாரம்

சாயங்காலம் அஞ்சுமணிக்கு வண்ணாந்துரை விசாரிப்பு விசாரிக்கிற முசேறேணு யென்கிற (Mr. Renault) வெள்ளைக் காறன் வந்து சொன்னது துரையவர்கள் யென்னையழைப்பிச்சு சிமை யிலிருந்து யிந்த ஒறூலியே (Rouille) யென்கிற கப்பல் வந்துதே அந்தக்கப்பலிலே பிடவை கிழிச்சல் ரொம்ப வென்றும் சலவை போதா தென்றும் யிப்படி யிருது யெழுதி வந்துதே என்றும் அங்கே கஞ்சிபோடச்சே கிழிச்சல் பார்க்கிறதில்லையா வென்று கேட்டார் சலவை பார்த்துக் கஞ்சி போடச்சேயும் கிழிச்சல் பார்க்கிறதுதான். கேட்டனைக்கி ஒப்பிக்கச்சேயும் பார்க்கிறதுதான் ஆனால் விஸ்தாரமான பிடவையிலே கப்பல் கடைசால் வேளையிலே ஒன்றை தப்பி விழுந்தது விழுந்ததே யல்லாமல் மைத்தப்படி. பாராமல் யிருக்கத்தக்கதில்லை. வெகுதிட்டமாய்ப் பார்க்கிறதுதானே யென்று சொன்னேன். அதுக்கவர் யினிபத்திரமாய் பார்க்கச் சொல்லி சொல்லிப் பேவென்று சொன்னார். நல்ல தென்று சொல்லி அனுப்பிவிச்சுக் கொண்டு வந்தேன். ஆனால் சத்துக் கோபமாய் முகம் சுணிப்பாய் பேசாமல் வெகு மிறுதுவாய் குளிர்ந்த முகத்துடனே பேசினாரென்று சொல்லி யிந்த நூலியே யென்கிற கப்பல் மார்ச்சு மீ பிறப்பட்டு அஞ்சுவாம் (Anjuvam) பிடிச்சு செவ்வையாவும் புதுச்சேரிக்கியிந்த ஆகொஸ்து மீ 10உ சுக்கிறவாரம் வந்துதுரை பிடிச்சு சிமைவிட்ட அஞ்சு மீ ரெண்டு நாளைக்கிச்சரியாய் வந்துது யிந்தக்கப்பலிலே சகல சேதியும் வரும். யேனென்றால் கடைசி கப்பலிந்தக் கப்பலிலே திரிச்சிராப்பள்ளியிலே சந்தாசாயபுவை வெட்டிப் போட்டது முதலான சேதியெல்லாம் யிங்கிரேசுக்காறர் பிறகேது (Fregate) போய், சேந்துதே-செப்றும்புறு மீ அந்தச்சேதி இங்கிலத்தோராவிலே அறிந்து அப்பால் பிறான்சாவிலே அறிந்து அந்தச்சேதி கேழ்விப்பட்டதுக்கு உத்திரம் யிந்தக் கப்பலிலே துரைக்கி யெழுதி வந்தது யென்று சென்னார்கள். இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி திரிச்சிராப்பள்ளி அண்டையிலே யிறங்கியிருந்த நந்திராசா பவுன்சும் பேரிலே மமுதல்லிக்கான் தன்னுடன் கூடவந்த பவுன்சிலே சிறிது பவுன்சு அனுப்ப அந்த பவுன்சும் நந்திராசா பவுன்சும் போயி சண்டை குடுக்கிற சமயத்திலே மமுதல்லிக்கான் கோட்டைக்கி போகவேண்டிய றஸ்துக்களும் நந்திகளின் பேரிலே (Bulloek loads) யெடுப்பிச்சுக்கொண்டு மைத்தப் பவுன்சும் தானும் பிறப்பட்டு திரிச்சிராப்பள்ளிக் கோட்டை போய்ச் சேர்ந்ததாகவும் கேழ்விப்பட்டேன் யிதை நந்திராசா பவுன்சிலே ரெண்டு குறிக்காறர் பிறவேசிச்சு மமுதல்லிக்கான் பவுன்சுவை சிதறடித்தார்கள், மமுதல்லிக்கான் பவுன்சு சின்ன பின்னமாய்ப்போச்சுது யென்றும் மமுதல்லிக்கான் போன விடம் யின்னயிடம் யென்று தெரியவில்லை யென்றும் மானோசி அப்பா வெட்டுப்பட்டுப் போனானென்றும் மமுதல்லிக்கானுக்கு குண்டு காயம் யென்றும் யிப்படியாக பாப்பய்யபிள்ளைக்கி எழுதி வந்தது என்று. நேத்த்ய தினம் போய் பாப்பையப்பிள்ளை துரையவர் களுடனே சொன்னதின் பேரிலே தொரையவர்கள் சமஸ்தமான பேர்களுடனேயும் வெள்ளைக்காறர் தமிழர் யெல்லாருடனேயும் சொன்னாரென்று நேத்தியதினம் அவரவர் வந்தவர்கள் சொல்லு கிறார்களென்று ரெண்டொருத்தர் யென்னுடனேயும் சொன்னார்கள்

அதுகளெல்லாம் அப்படியிருக்க இன்றைய தினம் துரையவர்களுக்கு நந்திராசாவுடைய காகிதம் வந்ததாகவும் அதிலே மமுதல்லிக்கான் மஞேசியப்பாவகையிராக் களுவையும் பிடிக்கக்கொண்டு திரிச்சிராப் பள்ளிக்கோட்டை போய்ச் சேர்ந்ததாகவும் அப்பால் ரஸ்துக் கனெல்லாம் கோட்டையே சேரப்போட்ட பிற்பாடு கோட்டைக்கி வெளியே மறுபடி பாயம் போட்டு சண்டை பண்ணுகிறதாயிருக்கிறு னென்றும் உங்கள் பிறுன்சு பன்வு கடக்க நிற்கிறுக்களே அல்லாமல் சண்டைக்கு வரயில்லே. சண்டைக்கு அழைத்தால் யெதிரிபாரி பவுன்சுடனே யிருக்கச்சே நாங்கள் கொஞ்சம் பவுன்சுடனே போய் முழுகிப்போறதாவென்று சொல்லு கிறுர்களிந்த சமையத்திலே பவுன்சு அனுப்பாமல் போனீர்களே ஆனல் நாங்கள் அப்பால் போகவேண்டியிருக்குதென்று யெழுதிவந்ததாயும் அதின் பேரிலே யிவ்விடத்திலேயும பணக்கடிசையாய் யிருக்குதே யென்று யோசனை பண்ணி முராரிராயனையும் அவன் பவுன்சையும் முசே மேசேனையும் (Mr. Maissin) அவன் சொலுதாது பவுன்சையும் குவாகுது துலுக்கர்கள் தமிழர் சேவுகர் வகையிரா பவுன்சையும் முராரிராயன் பவுன்சுடனே கூடத்தானே நந்தி ராசாவுக்கு மத்தத்தாய் போகச் சொல்லி யெழுதி யனுப்பி யிந்தப்படிக்கி அனுப்பிவிக்குறேம்யென்று நந்திராசாவுக்கும் யெழுதி அனுப்பின தாய்ச் சொன்னுர்கள்.

## 1753-ஹு ஆகொஸ்துமீ 19உ ஸ்ரீமுகஹு ஆவணிமீ 7உ ஆதிவாரம்

இத்தனை் காலத்தாலே முசே குடுத்தேல் (Mr. Cordier) வீட்டுக்குப்போய் வணங்கி காண்பிச்சுக்கொண்டபோது யேதோப்பு தோர் கலாம் பொன் கண்டை பார்த்து அவன் சினத்து பெண் பதுமையும் சம்போ பிங்கான் பொன் யெழுத்து யெழுதினதேப் போச்சுக் கோப்பைகள் தட்டுகள் முதலானதுகள் வெகுமானங் கொடுத்து அனுப்பினுன். அதை வாங்கிக்கொண்டு யெட்டு மணிக்கு அங்கேயிருந்து கோட்டைக்கி வந்தவிடத்திலே துரையவர்கள் பூசை கேட்டு தே குடிக்க பத்தரை மணியாச்சுது அப்போ அயிதராபாத் துலேயிருந்து சைதுல் லசுக்கர்கான் காகிதங்கள் தொரைக்கி அறுக்காறுகள் கொண்டு வந்தார்கள். நான் கபுறு சொன்னதுக்கு கேட்டுப்போட்டு முசே அலுபேரையும் மதனுந்த பண்டிதனையும் அழைத்து தறுதும்மா (Translate) பண்ணச் சொன்னுர்கள். யிந்தசோடாகாகண்ணநாயக்கன் கொண்டு வந்தான்.

இத்தனை் பகலுக்கு மேலாக கடப்பை அப்துல் நபிகானுடைய சிதம்பரம் பேச்சுப் பேசவும் முதாமியாவை கஷோத்திலே போட் டிருக்கிறவனை விடுவிக்கவும் ஸ்தானுதிபத்தியமாய் வந்த மொகுலன் மீறுஷாம்கம் கம்மது பேக் (Mirza Muhamad Beg) சினிவாசறுய னென்கிற மகாராஷ்ட்ட பிறுமணர் ரெண்டு பேரையும் கோட் டையிலே மணிக்கூண்டின் பேரிலே காவல் வைத்தார்கள்.

### 1753௵ ஆகொஸ்து மீ 20உ ஸ்ரீமுக௵ ஆவணி மீ 8உ சோமவாரம்

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி நந்தி ராசா பவுன்சு அல்லிதுரை (Allithurai) யிலே யிறங்கியிருந்ததின்பேரிலே மமுதலிக்கான் போய் சண்டை பண்ணினதினாலே நந்தி ராசா முறிஞ்சு கிருஷ்ணாபுரம் போய்ச் சேர்ந்தானென்றும் சண்டையிலே சனங்களுக்கு வெகு சேதமென்றும் யெழுதி வந்ததாய்ச் சொன்னார்கள். யிதல்லாமல் நந்தி ராசாவுக்கு சிலவுக்கும் குடுக்கிறது ரொம்ப பிறயாசையாயிருக்கிறபடியினாலே யினிமேல் பவுன்சு யிபாய்க்குறது ரொம்ப பிறயாசையென்றும் சொல்லிக்கொள்ளுகிறார்கள். இத்தனாள் கடப்பை அப்துல் நமபிக்கான் அனுப்பின ஸ்தானாதிபதிகளை நேத்து காவல் வைத்திருந்தவர்களை விட்டு குண்டு சாலக்கி அப்புரம் ஊரே போகச் சொன்னார்கள் சோபுதாரன் அனுப்பிப்போட்டு வந்தான்யென்று சொன்னார்கள்.

### 1753௵ ஆகொஸ்து மீ 21உ ஸ்ரீமுக௵ ஆவணி மீ 9உ மங்களவாரம்

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி ஆற்காட்டிலேயிருக்கிற மமுதலிக்கான் யிங்கிரேசுக்காறர் மனுஷர் பிறப்பட்டு வேலூர் மட்டுக்கும் வேலூர் பேட்டையெல்லாம் கொளுத்தி அவர்கள் பவுன்சு பிறப்பட்டதையும் அடிச்சதாய்ச் சொன்னார்கள்.

### 1753௵ ஆகொஸ்து மீ 22உ ஸ்ரீமுக௵ ஆவணி மீ 10உ புதவாரம்

இத்தனாள் ராத்திரி பனிரெண்டு மணிக்கி கேழ்க்கப்பட்ட சேதி ரூத்திரி பத்து மணிக்குமேல் பெரிய பெருமாள் பிள்ளையை அழைப்பிச்சு நாலரை லட்சம் ரூபாயும் யெட்டு நாளையிலே குடுக்கிறீரோயில்லையோவென்று கேட்டதாகவும் அவ்வளவுயெங்களுக்கு சத்தியில்லையென்று சொன்னதின் பேரிலே துரையவர்கள் தான்தானே முன்னே பிறம்பை வாங்கிக்கொண்டு நாற்பது அடி அடிச்சு அப்புறம் கட்டிகாப்பிறிகளைவிட்டு முன்னூறு நானூறு அடி அடிச்சவிடத்திலே சரீரம் சுறணைதப்பிப்போய் மூர்ச்சை போனதின் பேரிலேயும் அடிச்சுப் பிணமாயி கிடத்திப்போட்டார்களாம் கடைசிலே யென்னயென்று கேட்டதுக்கு யென் ஆஸ்தி யிருபதினாயிரம்ரூபாய் அதுக்கு அதனமில்லையென்று சொன்னாப் போலேயும் அதின்பேரிலே நாளைக்கி மணிக்கவுத்தினாலே பெருவிரல் முதற்கொண்டு தலைமட்டுக்கும் கட்டி தலைகிழ தொங்கப் போடுறேனென்று கொண்டு போயி பாதாளக் கிட்டங்கியிலே விலங்கு போடச் சொல்லிச் சொன்னாரென்றும் நாளை ராத்திரிக்கு முதாமியாவை யிந்தப்படிக்கி நடப்பிக்க யோசனைபண்ணியிருக்கிறதாய் சொன்னார்கள்.

## 1753ஆ ஆகொஸ்து மீ 23உ ஸ்ரீமுகஆ ஆவணி மீ 11உ குருவாரம்

இத்தனாள் ராத்திரி பனிரெண்டு மணிக்கி கேழ்விப்பட்ட சேதி நேத்து ராத்திரி அடிச்ச அடிக்கி பெரிய பெருமாள் பிள்ளையை யித்தனாள் ராத்திரி பத்தரை மணிக்கி கொண்டுவந்து நிறுத்தி காப்பிரிகள் வகையிறுக்களை கவுறு பிறம்புகள் கொண்டுவந்து நின்ற மாத்திரத்திலே தொரையவர்கள் பார்த்து விறுதாவிலே யென்னைக்கொன்னுபோடுறத்திலே காரியமுண்டாவென்று ரொம்ப பயந்து காலிலே விழுந்து சொல்லச்சே துலுக்கன் வெகு கண்டிப் பாயிருக்கிறான் நீ கிறகஸ்தனைக் காணுது சீமையை யெப்போதை யும் போலே உன் வசம் பண்ணுகிறோமென்றும் சொல்லி உடன் படிக்கையா துரை சொன்னாராம் அதின் பேரிலே லட்சம் ரூபாய் யெட்டு நாளையிலே கொடுக்க உடன்படிக்கை சொன்னதின் பேரிலே தொரையும் சம்மதிச்சு நல்லது லட்சம் ரூபாய் செல்லுகிற மட்டுக்கும் நயினா விட்டிலே கொண்டு போய் காவல் வைக்கச் சொன்னார். அதின் பேரிலே கொண்டு போய் காவல் வைத்தார் களென்று லக்ஷம் ரூபாயிம் கொடுத்தார் போலே சீமையிவர் வசம் பண்ணி அனுப்புவதாய் ஒடம்படிக்கையென்று சொன்னார்கள்.

## 1753ஆ ஆகொஸ்து மீ 24உ ஸ்ரீமுகவஷ ஆவணி மீ 12உ சுக்கிறவாரம்

காலத்தாலே அசனுதிகானை அழைப்பிச்சுது யெது நிமித்திய மென்றால் நம்முடையவர்கள் திருவண்ணாமலையின் பேரிலே போய் சண்டைபண்ணிக்கொண்டு யிருந்த செஞ்சியிலே யிருக்கிற மூசே பத்தென்சு - வகையிறுக்கள் வெள்ளைக்காறர்களும் மீறுசா அப்துல் நபிபேக்கு வகையிறு துலுக்க சறுதாறுகளும் யிறுத்தசல்லிக்கான் வேலூரிலிருந்து அனுப்பின சித்தசயித்துக்கான் கோவிந்தராசு வகையிறுக்களுடைய பவுன்சுடனே போய் சண்டைகுடுத்து மோற சாக்கூடப் போட்டு பீறங்கி வைத்து சண்டைகுடுத்தவிடத்திலே திருவண்ணாமலை கோட்டையிலேயிருக்கிற மாற்க சகாயனென்கிற பிறாமணன் பவுன்சுடனே பிறப்பட்டு வந்து சண்டைபண்ணி அடிச்சவிடத்திலே நம்முட பவுன்சு முறிஞ்சு வேலூர் பவுன்சு வேலூரேபோய்ச் சேர்ந்து போச்சுது. நம்முட பவுன்சு செஞ்சிக்கு வந்து சேர்ந்ததென்று மூசே பத்தேன்சு செஞ்சி சேர்ந்தவுடனே யெழுதன காகிதம் நேத்து ராத்திரி பனிரெண்டு மணிக்கு வந்ததி னாலே யித்தனாள் அசனுதிக்கானை அழைப்பிச்சு திருவண்ணாமலைக்கிப் போகச்சொல்லி யிறநூறு பேர்கள் சிப்பாய்கள் அன்பது பேர் வெள்ளைக்காறர்கள் ஒரு பீறங்கியிதுகள் கொடுத்துப் போகச் சொல்லி அனுப்பிவிச்சார். வெள்ளைக்காறர்களும் சிப்பாயிகளும் யித்தனாள் சாயங்காலம் வெளியே போய் யிறங்கினார்கள். அசனுத்திக் கான் நாளைக்காலத்தாலே போறானென்றும் சொன்னார்கள். அசனுதிக்கான் சிலவுக்கு ஆயிரம் ரூபாய் கொடுத்ததாய்ச் சொன்னார்கள்.

இத்தனாள் சாயங்காலம் முசே புசி அண்டையிலேயிருந்து சேட்டாவந்துதென்றும் அந்தக்காகிதத்தில் சலாபத்து சங்கு பணத்துக்கு வெகு கண்டிப்பா யெழுதி நீங்களும் புதுச்சேரியாகிலும் மச்சிலிப்பந்தருக்காகிலும் போகச்சொல்லி யெழுதியனுப்பினதாயும் அந்தக்காகிதங்கூட குடுத்து முசே புசி (Mr. Busy) அனுப்பினா னென்று முசே புசி வகையிராக்கள் மச்சிலிபந்தருக்கு வாரவர்களா யிருக்குதென்றும் வந்த கருசிதுகள் சொன்னார்கள்.

## 1753௵ ஆகொஸ்துமீ 25௨. ஸ்ரீமுக௵ ஆவணிமீ 13௨ சனிவாரம்

இத்தனாள் பிரான்சுராசாவுடைய பண்டிகையானபடியினாலே காலத்தாலே துரையவர்கள் அண்டைக்கிப்போய் யிவரும் சேம்னுயி முத்திரை போட்டிருக்கிறபடியினாலே அந்தப்பண்டிகை யிவரும் கொண்டாட வேண்டியதானபடியினாலே துரையவர்கள் மேல் வீட்டின்பேரிலே பெரியசாலை முதலான கிழண்டைசாலை முதலான காம்பிராவிலெல்லாம் திறந்துவிட்டு வந்த வெள்ளைகாறர்களை யெல்லாம் அந்தச்சாலையிலே யிருந்து ரெசேவரிட்டார். நானும் அங்கே போய் ஆசாரம் பண்ணி புஷ்ப்ப செண்டுகள் குடுத்து பண்டிகை மங்களம் சொன்னேன் அவரும் ஆசாரம்பண்ணிக் கொண்டு வாங்கிக் கொண்டார். உபசாரமும் சொன்னார். வெள்ளைக்காறர் பெரிய மனுஷருக்குக் கூட யெனக்குபண்ணின மரியாதை காணயில்லை அது யெந்த சாடையினாலேயோ சுவாமிக்குத்தான் தெரியும் அப்பால் கோயிலுக்குப்போய் பூசை கேட்டுவந்து மேசைமேலே சமஸ்தமான வெள்ளைக் காறரும் அவர்கள் வாடிக்கைப்படிக்கி விருந்து சாப்பிடச்சே துரையவர்கள் சாராயம் வாங்கிக்கொண்டு புதுசாய் வந்த மறுக்கி கொம்புலாம் (Marquis de Conflams) யென்கிறவனுடைய முகத்தைப்பார்த்து ராசாவுடைய சுகத்தை வேண்டுங்கோளென்று சொல்லி சாராயங்குடிச்சார் அவரவர்கள் அப்படிக்குடிச்சார்கள் அப்போ யிருபத்தோரு வேட்டுப்பிறங்கி போட்டார்கள் யிருந்த கப்பலுகளி லேயும் யெல்லாம் போட்டார்கள். அந்த மட்டுக்கும் துரையவர்கள் அங்கே யில்லாமல் அவர் கபினேத்தே போனார். மதாம் கோயிலி லிருந்து வந்தவள் அங்கே யில்லாமல் பிறப்பட்டு உள்ளே துரை கபினேத்தே போனாள். தொரை போன உடனே முசே அலுபேரை அழைப்பிச்சார்கள் அவனும் போனான். யிந்த சாடைகளெல்லாம் பார்த்தால் சலாபத்துசங்குவுக்குக் காகிதங்கள் யெழுதி வெகுமதிகள் வந்திருக்கிறதையும் குடுத்து சீக்கிரமத்துக்கு அனுப்பிவிப்போமென்கிற சாடையைத் தொட்டு யிந்த சம்பிறமத்தை விட்டுப் போன சாடையாய்க் கண்டுது. யிதல்லாமல் யிந்த வெகுமதியை சுறுக்கியே அனுப்பி காகிதமும் அதுக்குத்தக்கினைப்போலே யெழுதாதபோனால் அவ்விடத்திலே காரியம் கெட்டுப்போனாப் போலே அல்லவோ காணுறதுமல்லாமல் நித்தியம் ஒரு விபரீதமாய் சேதி யெழுதி வருதென்று முசியே புசி வகையிராக்கள் வருகிறார்களே அவர்கள் வருகிறதை நிறுத்தி கோல்கொண்டையிலே தானே நிற்கச் சொல்லி முன்னுதாக சேதி காசிதுகள் கையில் பதினேராம் நாள் போய் சேரச்சொல்லி அனுப்பி அப்பால் தினிசுகளை வகையிரா தினிசுகளை கப்பலின் பேரிலே மச்சிலிபந்தருக்கு அனுப்புவோமென்று முன்னுதாகக் காகிதம் அனுப்ப யெழுதுகிறதாய்ச் சேதி

கேழ்க்கப்பட்டதுக்கு சரியாயிருந்தது. கண்ட சினங்கள் யிதல்லமால் தொரையவர்களுக்கு யின்றைய தினம் உற்சாகமென்கிறதுயில்லே முகம் வாடிக்கண்டுது. பெண்சாதி முகமும் அப்படித்தான் கண்டுது. யிதுகளெல்லாம் பார்த்துப்போட்டு நாவென்காசாக்கச்சேரியே வந்தேன்.

## 1753௵ ஆகொஸ்துமீ 28௨ ஸ்ரீமுக௵ ஆவணிமீ 16௨ அங்காரகவாரம்

துரையவர்கள் தே-குடிக்கதாழ வந்தபோது நான் போய் ஆசாரம் பண்ணி கபுறு சொன்னேன். பிடவை பார்க்குறார்களா வென்று சேதிகேட்டார். ஆமென்று சொன்னேன். யெத்தனை கட்டு விழுமென்று கேட்டார். அறுபது அறுபத்தோரு கட்டுக்களும் வந்து தென்றும் கிழிவிதிரளாய் விழுகிறபடியினாலே அன்பத்தஞ்சு கட்டு விழுமென்றும் போலே யிருககுதென்று சொன்னேன். சென்னப் பட்டணஞ்சமாசாரமென்னவென்று கேட்டார்.

சென்னப்பட்டஞ்சமாச்சாரம் எதாஸ்திதியாயிருக்கு தென்று சொன்னேன் யிதிலே தோஸ்துமகம்மது யிருந்து கொண்டுயிருந்து இங்கிலேத்தோர் ராசா செத்துப்போய்விட்டானும் அந்தக்கபுறு சென்னப்பட்டணத்திலே வெள்ளைக்காறர் பேசிக்கொள்ளுகிறார்களாம் என்று துபாசி தேவனும்பட்டணத்துக்குப் போறவன் நேத்துக் குண்டுசாலே யோரமாய் நான் காரியமாய்ப் போகச்சே யென்னைக் கண்டான் அவனுக்கும் யெனக்கும் முசே புறுனு (Mr. Bruno) அண்டையிலே யிருக்கச்சே சினேக முண்டு அந்த சினேகத்தினாலே கிட்ட வந்தான். அவனை சென்னப்பட்டணத்து சமாச்சாரம் யென்னயென்று கேட்டதுக்கு யிங்கிலித்தோர்-ராசா செத்துப் போனானென்று சொல்லி அப்பால் பின்னையும் சத்துநேரம் பேசியிருந்து அப்படித்தானே தேவனும்பட்டணத்துக்குப் போனானென்று சொன்னான். அப்போ துரையவர்கள் யென்முகத்தைப்பார்த்து யிங்கிலித்தோர் ராசா மெத்தக் கிழவன் வெகுநாளாய் ராசரீகம் பண்ணுகிறான் அவன் பிள்ளை சிறுபிள்ளை அதைத்தொட்டு வெகு துரைத்தனங்களெல்லாம் மாராட்டப்பட்டுப்போம் வெகுகாரியங் களெல்லாம் திரும்பிப்போம் யெதினாலேயென்றால் யிந்தராசாமுன் யிங்கிலித்தோர் ராசாவை நாட்டார் வெட்டிப்போட்டு யிந்த ராசாவைப் பட்டங்கட்டி அன்பத்தாறு அன்பத்தேழு வருஷமாச்சுது. அதுமுதல் கொண்டு ஒரு ராசரீக்கமான படியினாலே ஒரு சாடையிலே அமுல்கள் நடத்தைகள் துரைத்தன திட்டங்கள் ராச்சியம் திட்டவட்டம் ஒரு மாற்கமாய் வந்துது யிப்போ ராசா செத்த படியினாலே யிருக்கிற ராசாவும் சிறு பிள்ளையாய் வந்து உட்காரச்சே யெல்லாம் நூதன பிறதிஷ்டையாய் வரும் அதைத்தொட்டு யெளப்பம் வாறதுமுண்டு நலம் வாறதுமுண்டு யென்று சொல்லி யினிமேல் நடக்கிற கெதியறிய வேணுமென்று சொன்னார், முன்யிவன் ராசரீகத்திலே ராச்சியத்துக்கு சுகம் உண்டாச்சா—யினி சிறிது நாள் கஷ்டப்படவேண்டி யிருக்கும் லோகத்தினுடைய காரியமெல்லாம் யெப்போதும் சுகங்கூடாது. யெப்போதும் கஷ்டமும் துக்கமுங்கூடாது. யென்று சொல்லி நலமும் யிளப்பமும் கலந்து

வருகிறபடியினலே முன் நடந்ததுக்கு விபரீதமாய் நடக்கும் யென்று சொன்னேன். மெயிதான் யென்று சொல்லி ஆனல பிறதெந்தாம் (Pretender) யெப்போ நுழையுமோ வென்று காத்துக் கொண்டிருக்கிறன் சுவாமி அவன் பங்கிலே யென்னமாய் நினைக்குறரோ தெரியாது யென்று சொன்னதுக்கு அதுக்கு நான் சொன்னது அவன் அதிருஷ்ட்டசாலியாஞல் (Louis XIV) லூயிசுகற்தோர்சு யெத்தனம் பண்ண போது வராதா-அப்பால் லூயிசுகேன்சு (Louis XV) யென்கிற யிப்போயிருக்கிற ராசா அறபறனசக்குத்தியும் போராசை யிங்கிலித்தோராவிலே யிஸ்காச்ச சேன்கிற (Scotch) ரசியத்தார் பெறத்தந்தானை றெசோமிட்டுக் கொண்டு போய்வைத்துப் பட்டங்கட்டி பாதிராச்சியம் கைவசம் ஆனது முறிச்சுப்போய் அப்பால் மறுபடி ஓடிப்போகவேண்டி வந்து விழுந்த மட்டுக்கும் யிவனுக்கு யில்லே யிவன் பிள்ளை அதிருஷ்ட்டம் அறியவேண்டிய தென்று சொன்னேன். நகைச்சு மெயிதான் அப்படியும் நடக்கும் என்றும் ஒருவேளை யிப்படியும் நடக்கும் யென்று சொன்னர். அதுக்கு நான் சொன்னது யிவன் தப்பனர் ராசாவாயிருக்கச்சே அல்லவோ வெட்டிப்போட்டது யிப்போயிருந்தார் அந்த ராசாவை நாட்டார் கொண்டுவந்து பட்டங்கட்டினர்கள் அன்று முதல் யின்றையவரைக்கும் பிறயத்தினமில்லாமல் யிருக்கயில்லேயே ஆனபடியினலே யிவனுக்கு அந்த ராசரீகத்துக்கு அதிருஷ்ட்டமில்லே யிவன் பிள்ளைக்கு கிடைச்சால் கிடைக்குமென்று சொன்னேனே யென்று சொன்னதுக்கு யேழுப்பு ராச்சியத்து சரித்திரமெல்லாம் நன்ருய் கேழ்விப்பட்டிருக்கிருயென்று சொல்லி குருவப்பிள்ளை சுறணுவிலே யென்ன எழுதியிருக்கிருனென்றும் யிங்கிலித்தோர் ராசாடையும் பிறன்சு ராசாடைம் என்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது. பிறன்சு ராசா வந்து சுவயம் ராசியாதிகாரம் நடத்துகிருர் ஆனபடியினலே அவனுக்கு சமானமான ராசா வில்லே யென்றும் மனுஷர் யுஸ்தாரமாயுள்ள ராச்சியம் யென்றும் யிஸ்பாஞ்சு (Spain) ராச்சியம் அரசும் யிந்த ராசரீகத்தைச் சேர்த்துப் போனபடியினலே தனபலம் றெம்ப சேர்ந்துயிருக்கிற படியினலே யிவருக்கு சமானமான ராசா யில்லே யென்றும் யிங்கிலேத்தோர் ராசா வந்து பார்லுமெந்துகள் உத்தாரமில்லாமல் ஒருகாரியமுஞ் செய்யக்கூடாது. அதினலே ராச்சியம் சேனைகள் யிவராதீனமல்லாமல் கூலிக்காறர்போலே யெதுவும் பார்லுமெந்துகள் நடத்தச்சொன்னல் நடத்துறதுயில்லாவிட்டால் சும்மாயிருக்கிற தென்றும் ஒரு சிலவுகள் கூட பார்லுமெந்துகள் உத்தாரமில்லாமல் செய்யக்கூடாதைத் தொட்டு யிவர் ராசரீகம்பண்ணுகிரு ரென்று ஒருத்தருக்கும் பெருமையா யிவ்விடத்தில் தோத்துகிறதில்லே யென்று ஒரு நாள் தான் யிங்கிலித்தோராவிலே போய் லோந்துரு (London) யென்கிற ராசதானிபட்டணத்திலே போயிருக்கச்சே ஒரு நாள் ஒப்பேரா (Dance) ஆடினர்களாம் அந்த ஒப்பேரா போய்ப்பார்க்கப் போனவிடத்திலே ராசா வந்து யிருந்தாராம் அப்போ ராசா முன்பாக ஒரு பண்டு பலாதிகள் விக்கிற வளொருத்தி அங்கே வந்து கடையிலே வைத்து வித்ததாயும் அதின் பேரிலே அங்கே யிருக்கிறவர்கள் ராசாயிருக்கிருர்கள் யென்கிற பயம் யில்லாமல் அவளுடனே சரசமாய் விளையாடுகிறதும் பழங்கள் வாங்கி சாப்பிடுகிறதையும் முதலான ஸ்திரிகளுடனே சேந்த விளையாட்டுகள் விளையாடிக் கொண்டிருக்கக்கண்டேன் என்றும் யிப்படி யிவரிடத்திலே சனங்களுக்குப் பயங்கரமில்லாமல் போனது ராசரீகத்தி

னுடைய சுதந்தரீகம் யென்கிறது யில்லாத போனதைத் தொட்டு யித்தனை பிப்றவாயிலே வந்து விழுந்துதென்றும் பிறான்சு ராசா முன்னே போனால் கையுங் காலும் நடுங்குகிற சகத்தியம் வாய் திறக்குறது கூடாமல் கம்பம் குடுக்கிறதைத் தொட்டு ராசாக்களுக் குள்ளே லூயிசுக் கத்தோசை (Louis XIV) பெரிய ராசாவென்று ராசாக்களே பொகுடுத்தார்கள் யென்றும் பிரான்சு ராசாவினுடைய குதிரை லாயத்தினுடைய விஸ்தாரமும் அழகும் சிங்காரிப்பும் வரமாட்டாது. இங்கிலீத்தோர் ராசாவினுடை விஸ்தாரமும் அரண்மனை யென்றும் பின்னையும் பிரான்சு ராச்சியத்திலே அப்போ றெஷாம் (Regent) என்கிறவர் ராச்சியம் யெல்லாம் பண்ணுகிற வேடிக்கையும் மூசே லாசு கோந்திரோலார் சனமுல்யிருந்து பிலியெத்துதே பாங்கு யென்கிறது உண்டாக்கி ராச்சியத்தை யிப்பந்தம் பண்ணிப் போட்டது மாத்திரம் மத்தது யெல்லாம் பிரான்சு ராசாவை ஓசத்தி மத்த ராச்சியத்தை தாழ்த்தி யெழுதி யிருக்கிறதைப் பார்த்தே னென்று விஸ்தரித்துப் பின்னையும் அந்த ராச்சிய நடபடிக்கைகள் அதிசெயங்கள் மரியாதைகள் வஸ்துவுகள் விந்தையானதுகள் செய்யுறதுகள் முதலானதுகள் தோட்டங்கள் தோப்பு யிருக்கிறதுகள் வீடுகள் கட்டியிருக்கிறதுகள் முதலானது ரெண்டு நாழிகை நேரம் நான் சொல்ல அவர் மெய் மெய்யென்று ஒத்துக்கொண்டு அந்தக் கற்றலை பிறான்சு கடிதத்திலே யென் புத்தி பார்க்க நினைக்கு தென்று சொன்னார். நீங்கள் நினைத்தால் ஆகுதென்று சொன்னேன் அதுக்கு துரையவர்கள் சலாபத்து சங்குவுக்கு வெகுமதி கொடுக்கப் போனது சிமிள் பேரிலே யிஸ்சுமாலத்து (Engraving) வேலை செடி போலேயும் அதிலே பூவுங்காவும் பழமுமிருக்க செய்திருக்கிற வேலை நேத்தியான சிமிள்கள் சூருகத்திகள் — — — — — — —

## 1753௵ செப்தம்பர்மீ 3௨ ஸ்ரீமுக௵ ஆவணிமீ 22௨ சோமவாரம்

இத்தினள் ராத்திரி யெட்டு மணிக்கு நடந்த சேதி பெரியண்ணா நயினார் துரையவர்களண்டைக்கிப் போய் வெள்ளாழஞ்சாவடி அண்டையிலே ரெண்டு படகு வந்து தட்டிச்சுது அதிலே யிங்கிரேசுக் காறர் யெழுதினது யெழுபது யெண்பது பேர் வந்து யிறங்கினார்கள் யென்று போய் ஒன்பது மணிக்கிச் சொன்னவுடனே யிருக்கிற வெள்ளைக்காறர்கள் சட்டைக்காறர்கள் அன்னூறு பேரும் சிப்பாயி களிலே யிறுநூறு பேர்களும் சொலுதாது ஒரு கப்பித்தானும் வந்து சொன்ன பெரியண்ணா நயினாரைக்கூட கூட்டிப்போய்க் கூட்டி வரச் சொல்லி சொல்லி அனுப்பினதுமல்லாமல் அந்தச் சினம் கப்பல்க் காறர்களுக்கு யெழுதிசலங்குக் காறர்கள் ஓசந்தால் அவர்களை பிடிச்சு வரச்சொல்லியும் கப்பலைக் கொண்டுபோய் வெள்ளாழஞ்சாவடிக்கு நேரே வைத்து பிடிக்கச் சொல்லி திட்டம் பண்ணி பத்து மணிக்கு அனுப்பிவிட்டார்கள். கப்பல்க்காறர்களும் போய் வளைஞ்சுகொண் டார்கள். கரை வழியே போனராணுவும் போய் வெள்ளாழஞ்சாவடிக் கிப்போய் விசாரிக்குமிடத்தில் யிந்த ஊரிலே மூசே துலு சென்கிற பிறான்சுக்காறன் முன் ஆளோட்டியாயிருந்து அதின்பிற்பாடு சென்னப் பட்டனம்பிடிச்சதுமுதல்பத்துப்பணம்விசேஷிச்சு அகப்பட்டதைத்

தொட்டு சில்லறை வற்த்தகம் பண்ணிக்கொண்டிருக்கிறான் அவன் பவழக்காட்டுக்குப்போய் சிறிது சாக்கு யேத்திக்கொண்டு வருகிறவன் ராத்திரி யேழு மணிக்கு வெள்ளாழஞ்சாவடியே வைத்துப் பிடித்து துஆசு யென்கிற வெள்ளைக்ககாறன் யிறங்கி அடுத்தாப்போலே யிருக்கிற பட்டணச்சேரியிலே போய் தண்ணிர் கேட்டதின் பேரிலே அவர்கள் யில்லை யென்று யிவன் கச்சாபிச்சாயிண்ணு அதின் பேரிலே காபிருப்பட்டு யெழுபது யென்பது பேர் படகின் பேரிலே வந்ததாயும் அவர்கள் யிறங்கி சிலாறு பண்ணுகிறதாயும் கூக்குரல் போட்டுக் கொண்டு வெளியே பிறப்பட்டுது அதின் பேரிலே ஒருத்தன் ஓடிவந்து நயினா மனுஷருடனே யிங்கிறீசுக்காறர் யென்பது பேர் ரெண்டு படகிலே வந்தார்களென்று சொன்னனென்று தீத்து யெல்லாம் பொய்யாய்ப் போய்ப் போனவர்களைத் திருப்பிக்கொண்டு வந்து மூசே துலுசு (Mr. Destouches) யென்கிற வெள்ளைக்காறனையும் அழைத்துக்கொண்டு படுக்காறர்களையும் புதுச்சேரி துரை பிடிச்சு வரச்சொல்லி சொல்லிப் போட்டு முன்னதாக துரையவர்களுக்கு யிங்கிறேசிக்காறர்களல்ல மூசே துலுசு என்கிறவன் படகின் பேரிலே வந்திரங்கினதாய் அதைப்பார்த்து காபிருப்பட்டு வந்து கபுறு சொன்ன னென்று சொல்லி அனுப்பிப்போட்டு வெடிய காலத்திலே போன வர்களையெல்லாரும்மறுபடி வந்துசேர்ந்தார்களென்று கபுறுசொல்லி சொலுதாதுகள் ராணுவுகள் பிறப்படுகுறதுக்குள்ளேயும் அப்பால் பிறப்பட்டுப் போய் மறுபடிவந்து சேருகிறதுக்குள்ளே துரையவர்கள் பண்ணின ஈருக்கிலே கோட்டையெல்லாம அதள குதளப்பட்டுப் போச்சென்று சொன்னார்கள்.

## 1753௵ செப்தம்பர்மீ 4உ ஸ்ரீமுக௵ ஆவணிமீ 23உ அங்காரகவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்கள் அண்டைக்குப்போக எட்டரை மணி வேளையாச்சு அப்பால் போய் துரையவர்களைக் கண்டு கபுறு சொல்லியானவுடனே தோஸ்து மகம்மது கூடயிருக்கச்சே யென்னைப்பார்த்து முறாரிறாயன் வெகு கோபத்துடனே போய் திரிச்சிராப்பள்ளி கோட்டையை சுத்திக்கொண்டு மகுமதல்லீக்கானைக் கைப்பிடியாய்ப் பிடிச்சுக்கொண்டு கோட்டையையும் வாங்கிக் கொள்ளுகிறேன் என்று சபதம் பண்ணிக்கொண்டு யிருக்குறானும் அவன் வாங்காமல் விட்டான் முன் திருவீதிக்கோட்டையையும் அப்படித்தான் சபதம் பண்ணி வாங்கினானே யென்று சொன்னார். அதுக்கு தோஸ்து மகமமது யிருந்துக்கொண்டு யிந்தமட்டுக்கும் மருட்டியர்களைத் தொட்டுத்தான் நிறுவாகம் முறாரிராயன் பாத்துப் பிடிச்சால் விடான் யென்று சொன்னான். அதுக்கு நான் துரை அவர்களுடனே உங்களுக்கு கோபமில்லையானால் நான் சொல்லு கிறேன் யென்று சொன்னதுக்கு சொல்லென்று சொன்னார். அப்பால் நான் சொன்னது உங்களுடைய அதிருஷ்டத்தினுடைய பிறுபலத்தினாலே முறாரிராயன் செயிக்கிறதும் அசனுதிக்கான் செயிச்சதும் நாசறுசங்குவைப் போலேகொத்தவன் தக்கன் (Deccan) பாதுசாவை தலையை வெட்டிவிச்சதும் சென்னப்பட்டணம் பிடிப்பிச்சதும் மேஸ்தர் புஸ்கவேன் (Mr. Boscowan) புதுச்சேரியை வாங்க வந்து அபசெயப்பட்டு ஓடிப்போனதும் உம்முட பவுன்சு

அபரங்காபாத்துக்கு அப்பிறம் பெண்ணை மட்டுக்கும் போய் பாசிருயனை நிசாம் நாசறு சங்கு பாதுசாவினுலே செயிக்கக் கூடாதவனை செயிச்சதுமே அல்லாமல் மத்தப்பேரைத் தொட்டு யென்னயிருக்குது உங்களுக்கு செயம் வருகிறதுக்கு யெங்களை அற்பிசிமீ 15வ சென்றுல் உங்களுக்கு சகல செயமும் உண்டாகுது நொவம்பர்மீ கார்த்திகைமீ முதல்க் கொண்டு மமுதல்லிக்கான் யிங்கிலீசுக்காறர் யென்னமாய்ப் பறந்து போருர்களோ நீங்கள் பார்க்கப் போறீர்கள் நான் சொல்லுகிற வார்த்தை அபத்தமாய்ப் போமென்று சறுவாத்துமனுக யென்னவாண்டாம் அதுவும் உங்களுடைய மனதுக்குத் தெரியவரும் யென்று சொல்லி யிந்த முராரிராயன் தான் நாசறு சங்குடனே கூடவந்து உதைப்பட்டு நிறுவாகயில்லாமல் ஓடிப்போனவனே என்று சொன்னதுக்கு சும்மாய்க் கெட்டுக்கொண்டிருந்து இன்னம் ரெண்டு மாசம் போகாவணுமோவென்று கேட்டார். ஆமையா ரெண்டு மாசம் போன பிற்பாடு உங்கள் பவுன்சு அங்கே போயிருக்கிறதெல்லாம் சத்துருக்களை செயிச்சு அந்த பத்தே கபுறு அனுப்பிக்கொண்டே யிருக்கிறதும் திருச்சிராப்பள்ளி முதலான கோட்டை தளங்களை ராச்சியங்களை யெல்லாம் கைவசமாகிறதும் வடக்கேயிருக்கிற ராச்சியங்களெல்லாம் கைவசமாகிறது நாளுக்கு நாள் சந்தோஷ கபுறுகளும் திரவிய வரத்தும் ருச்சியங்கள் கைவசமாகிற வேடிக்கையும் நீங்களிருக்கிற உச்சாகமும் சகல செனங்களும் அப்போ சொல்லிக்கொள்ளுகிற பேச்சுகளும் ஆனந்தத்தை அடையப்போறதயும் சத்துருவுகளெல்லாம் யாதாக்கிராந்தத்தை அடைகிற அனுயாசத்தை அடையப்போறதுகளையும பார்க்கப் போறீர்கள் முன்னுள் சொன்ன பேச்சுக்கள் காரியங்களெல்லாம் மறந்துபோனீர்களோ யென்னமோ தெரியாது பத்து வருஷமாய் நான் சொன்னபடிக்கி சுபாசுபங்கள் சரிப்பட்டு யிருக்கிறது யிப்போ நடக்கிற அசுபம் போய் சுபம் நடக்கிற போது ஆகிலும் றங்கப்பன் சொன்ன வார்த்தை மெய்யென்று யெண்ணிக்கொள்ளுங்கோள் யென்று சொன்னதுக்கு நீ சொல்லுகிற பேச்சு பொய்வராதென்று சொன்னுர்.

நாளது வரைக்கும் சரிப்பட்டு வந்து தென்று தோஸ்துமாம்மது சொன்னது மெய்தான் சினியோ (Senhor) றங்கப்பிள்ளை யிப்போ நடக்கிற பொல்லாப்பெல்லாம் மேலைக்கி யிப்படி நடக்கு மென்று ஒன்றரை வருஷத்துக்கு முன்னே சொன்னது மல்லாமல் தன் காரியமும் சத்துதொழத்தியாய் வருமென்று சொன்ன படிக்கி நாளது வரைக்கும் திராசு நிரைபோலே சரிப்பட்டு யிருக்கிறபடியினுலேயு முன்னனுக்கு நடக்கிறது சொன்னபடிக்கி சரிப்படுகிறது. ஆச்சரிய மல்லவென்று யிப்படி ரெண்டு நாழிகை நேரம் பேசியிருக்கச்சே மதாமுடைய சட்டைக்காற வேலைக்காரச்சி தொரை அண்டைக்கி வந்து நீர்போட்டுக்கொள்ளுகிறதுக்கு குல்லாயில்லை யென்று சொன்னுன் யென்னைப்பார்த்து நகைச்சு யெனக்குப் போட்டுக்கொள்ளுகிறதுக்கு குல்லாவுக்கு அவகாசமில்லாமல் போச்சுது பாத்தாயா வென்று கேட்டார் பாதுசாபட்டமாயிருக்கிறவர்களுக்கும் அப்படியிருக்கிறது தான் அதெப்படி யென்றுல் அவுரங்கசீபு (Aurangazeb Padshah) பாதுஷா சமஸ்தபாதுசாக்களையும் செயித்து ஒரு பாதுசாவாய் ஒருகுடையின் கீழே ராச்சியபாரம் பண்ண வாடாப்பு அங்கிபோட்டுக் கொள்ளுகிறது குல்லா டாப்பு மேலே போடுற துப்பட்டா ஒரப்புமா

யிருந்தார். அப்படிப்போலே உங்களுக்கும் வேஸ்து ஒரப்பு சட்டைக்கிண்டன் குல்லாம் பேச்சுத்தான் தெரிஞ்சிருக்குதேயென்றும் சொன்னதுக்கு ஆனால் நானும் அவுரங்காசீபு (Urangizeb Padshah) பாதுசாவைப்போலே தான் யென்று தன்றுடைய வேஷானவையும் கிண்டனையும் குல்லாயையும் நாணும் பார்க்கச் சொல்லி உறப்பாமோ அல்லவோ வென்று கேட்டார். முழு உரப்பென்று சொன்னேன். நான் பாதுசாவானபடியினாலே யெனக்கும் அவுரங்காசிபு சட்டம் பிடிபட்டுது யென்று சொல்லி நான் அல்லாரை யும் போலே சலாம் போட்டவேஸ்து கசாக்குப்பேறுடுமோ வென்று கேட்டார், ஒசந்த நினைப்பு யிருக்கிறவர்களுக்கு அதன் பேரிலே யென்நினைப்பு வருமென்று சொன்னதுக்கு தோஸ்து மகம்மது சொன்னது அவுரங்கசிபு பாதுசா ராச்சியத்துப்பணம் தீண்டினாலே பாவம் யென்று நினைத்து தான் தையல்தைத்து வித்து சாப்பிட்டுக் கொண்டு வந்தானென்று சொன்னேன் அதுக்கு துரையவர்கள் உத்திரஞ் சொல்லாமல் யென்னைப்பார்த்து யிருபத்து மூனுகுஞ்சம் யெனத்துப்பிடவை மூனு கோடிப்பிடவை துவாலை லனுப்பு—குல்லா வகையிரா வேலைகளுக்கு வேணும் அனுப்பிவையென்றும் சொன்னார் நான் நியோகுவைப் பார்த்து அனுப்புறேனென்று சொன்ன உடனே தொரை அவர்கள் யெழுந்திருந்து பேலே போனார்—நான் பிடவை பார்க்கிற சாலையே வந்து வண்ணாந்துறை கணக்கப்பிள்ளை கணபதி பிள்ளையுடனே சொல்லி யிப்போ விட்ட யிருபத்து மூனுகுஞ்சம் யானத்துப் பிடவையிலே மூனு கோடி நல்லபிடவையாய்ப் பொறுக்கி நீர்சலவலையிலே கொண்டுபோய் நியோகுவசத்திலே ஒப்பிக்கச் சொன்னேன். நல்லதென்று சொல்லி வண்ணாந்துறையே போனான்.

## 1753௵ செப்த்தம்புரு௴ 7௳ ஸ்ரீமுக௵ ஆவணி௴ 26௳ சுக்கிறவாரம்

இத்தனை யெழுதி முன் ஆகொஸ்து௴ 10௳க்கி ஆடி௴ 30௳ வெள்ளிக்கிழமை நாள் வந்த றூலியே (Rouillet) யென்கிற கப்பலிலே வந்து அந்த கப்பலிலே சீமைசேதி அன்றுமுதல் இன்று வரைக்கும் கேழ்விப்பட்ட சேதியே மெய்யென்று சொன்சேலிக் காறர் வாயினாலேயும் பின்னையும் பாதிரிகள் வாயினாலேயு கேழ்விப் பட்டு சேதியெல்லாம் ஒரு சாடையாயிருந்தபடியினாலேயும் யித்தனை யெழுதினது ஆங்கிரசு௵ ஆனி௴ தையில் சந்தாசாயபுவைக் கொன்றதும் லாசு முதலான வெள்ளைக்காறர்கள் ஒபிசியால் மார்களை பிறிசொனர்—தெகேற் (Prisoner of War) யென்கிற ஞாயமாய் வெள்ளைக்காறர் வழக்கப்படிக்கி யெப்போ அழைத்தாலப்போ வாரகத்திகட்டாமல் தங்கள் பேரிலே கத்தியெ டடாமல் யிருக்க யெழுதிக்கொள்ளுகிற வாடிக்கைப்படிக்கி யெழுதி வாங்கிக் கொண்டு விட்டு விட்டதும் முசே தொத்தேல் ஆட்டத்தாரி யிருந்த வரைப் பிடிச்சுக்கொண்டதுக்கு அவர்கையிலேயும் யெழுதி வாங்கிக் கொண்டு விட்டு விட்டதும் யிந்த சம்மதி சொலுதாதுகள் அந்த சம்மதி சொலுதாதுகள் சத்தேறக்குறைய ஆயிரம்பேர் மட்டுக்கும் தாங்கள் காவல்வைத்துக் கொண்டதும் ஆற்காடு விறுத்தாசலம் முலான பெரிய பிறதான தலத்தை தாங்கள் பிடிச்சுக் கொண்டதும் அப்போ புதுச்சேரியிலே புதினாறு சொலுதாதுகள்

யெல்லாம் யிருந்தார்கள் யென்றும் அந்த சமயத்திலே புதுச்சேரிக் கோட்டையை வாங்குவோ மென்று மேலே—மேசர் லாரென்சு (Major Lawrence) யெத்தினம் பண்ணினதும் சென்னப்பட்டணம் கோவற்னதோர் மேஸ்தர் சாந்தரசு (Mr Saunders) பரிச்சேதமாய் புதுச்சேரியின் பேரிலே சண்டைப் போடப் போகா தென்று நிறுத்தினதாயும் பின்னையும் புதுச்சேரியிலே பெண் பெண்சாதி துரைத்தனத்தினாலே காரியங்கள் கெட்டுப்போய் புதுச்சேரி கும்பினீர் யெடுத்துப் போச் சென்று யிப்படி புதுச்சேரி கும்பினீர் பிறுன்சு கும்பினீர் முழுகிப் போச்சு தென்றும் யிதுக்கெல்லாம் அது அது வயணங்களாய் விஸ்தாரமாய் யெழுதி ஆடிமீ த்தையிலே ஒரு கப்பல் பயணம் பண்ணி சிமைக்கி யிங்கிறேசுக்காறர் அனுப்பிவிச்ச தாயும் அப்போ முசே ஓம்மோ (Mr. Aumont) மகள் முன் முசே பிறியேல் (Mr Friel) பெண்சாதி—முசே—பிறியேல் செத்துப்போன பிற்பாடு முசே ஒபேரை (Mr. Aubert) கலியாணம் பண்ணுவே னென்று சொல்ல அதிலே துரை பெண்சாதி வாணுமென்று சொல்ல அதன் பேரிலே சொல்லாமல் சென்னப்பட்டணம் போய் சேர்ந்து அங்கே கலியாணம் பண்ணிக்கொண்டிருக்கிற சமயத்திலே மேலே யெழுதப்பட்ட கப்பல் யிங்கிலித்தோரானுக்குப் பயணமாய்ப்போகச்சே ஒபேரென் கிறவன் சென்னப்பட்டணத்திலே யிருந்தாப்போலே அவர்கள் சித்தப்பன் முசே —— —— —— —— — பேருடையவன்— சீமையிலே கும்பினீர் தெறக்குதேர் (Director) வேலையிலிருக்கிற வனுக்கு முன் மேலே யெழுதப்பட்ட திரிச்சிராப்பள்ளியிலே முசே தொத்தேல் (Mouseiur Autial) லாசு (Monseur Law) முதலான பேர்களுக்கு சம்பவிச்சதும் சந்தாசாயபு வெட்டுண்டு போனதும் புதுச்சேரியிலே பதினாலு சொலுதாதுகளிலிருந்ததும் மேஸ்தர் லாரென்சு யென்கிறவன் புதுச்சேரியிலே பெலன் யில்லே கோட்டையைப் பிடிக்க யெத்தனம் பண்ணினது மேஸ்தர் சாந்தரசு சறுவாத்துமனாக அந்த வேலே செய்யப் போகாதென்று நிறுத்தினதும் முதலான யிங்கிலேசுக்காறர் யெழுதின சமாச்சாரமாம்படியே விஸ்தாரமா யெழுதினதுமல்லாமல் தொரைத்தனம் பண்ணுகிறவன் பெண் பெண்சாதி ஆதீனமாக்கிப்போட்டு அவள் மயக்கத்திலே யிவர் விழுந்து கும்பினீரை முழுகிப்போக்கடிச்சுப் போட்டது சலாபத்து சங்கு பேச்சு படுத்துக்கொண்டு பாசிராயன் பேச்சு— பெலத்து யிருக்கிறது முதலான சேதி யென்ன யென்ன உண்டோ அதுகளெல்லாம் வயணமா யெழுதி அனுப்பினேன் யென்றும் அந்தக் காகிதமே மாத்திரம் அல்லாமல் பின்னையும் ரெண்டொருத்தர் யெழுதி அனுப்பினார்களென்றும் யிந்தக் காகிதம் அந்தக் கப்பலிலே போய் மார்கழிமீ 15௳, 20௳ சனவரிமீ யிங்கிலித்தோர் சேர்ந்து அந்தக் காகிதங்கள் லோந்தருவிட்டு (London) பரீசுக்குப்போய் கும்பினீர் திறக்குதேர் (Director) பேர்விளங்கன் முசே ஒபேருடைய சித்தப்பன் முசே—— —— —— —— அவன் முசே ஒபேர் யெழுதின காகிதத்தையும் பார்த்துக் கொண்டு அதின் பேரிலே யிங்கிலீசுக்காறர் யிந்த சேதி போய் சேர்ந்தவுடனே விஸ்தாரமாய் அது அது வயணமாம்படியே—எழுதி அச்சுப்போடுவிச்சு நாலுபக்கத்திலேயும் பிறசங்கம் பண்ணின புஸ்தகங்கள் அவரவர் சொல்லக்கேட்டும் அந்த கசேத்தென்கிற தினசரியை கும்பினியாரும் படிச்சுப் பார்ந்து அதன் பேரிலே யெல்லாருக்கும் இந்நியா கும்பினீர் முழுகிப் போச்சுதென்று தோத்தியிலிருந்தது. யிதல்லாமல் யிந்த சேதி பிறுன்சுக்காற ராசா வண்டையிலே யிருக்கிற மினிஸ்தர்களும்

(Ministers) பட்டணத்திலுண்டான சமஸ்தமான பேர்களும் கிரேந்துகள் (Gazette) தெருவு தோறும் படிக்கிறதிலே அறிந்தது மல்லாமல் யிங்கிலித்தோராவிலே (England) ராசாவுக்கு பார்லுமென்துகளுக்கும் அறிக்கைப் பண்ணி இங்கிறீசு கும்பினியார் வெகு சந்தோஷம் கொண்டபடியினாலே அதன் பேரிலே யிங்கிறேசு ராசாவினுட மினிஸ்தர்கள் வெகு உச்சாகத்தை அடைந்த சந்தோஷம் முதலானது களெல்லாம் பிரான்சு ராசாவினுடைய மினிஸ்தர்கள் அறிந்து மனதிலே யெத்தனை துக்கமானாலும் வெளிக்குச்சொல்லாமல் நம்முடவர்கள் புதுச்சேரியிலே யிருக்கிறவர்கள் அனுப்புறத்தின் பேரிலே யிதை மெய்யென்று யென்ன வேறுமே நம்பப்போகாது. யெதினாலே யென்றால் முன்னால் ஆறுதரம் இங்கிலிசுக்காறர் புதுச்சேரியைப் பிடிச்சுக் கொண்டார்களென்று பிறந்த போதல்லாம் மெய்யாச்சுதா, பொய்யாச்சோ யில்லையோ யிதுவும் யிப்படிதான் வென்று வசீராயிருக்கிற மினிஸ்தருகள் கும்பினியார் போய் யெங்களுத்தார மில்லாமல் முசே துப்பிளேயிக்சு துலுக்கராசக்காரியத்திலே விழுந்து யெங்கள் பணத்தை முழுக்கடிச் சானென்றும் வருஷாவருஷம் வாணும் வாணுமென்று யெழுதச்சேயும் நீங்கள் உத்தாரங் கொடுக்கிறீர்களென்றும் யெங்களுத்தாரத்தைத் தள்ளி நடத்தினபடியினாலே யிப்படி சம்பவிச்சது. யின்னம் யென்ன யென்ன சம்பவிக்குமோ வென்று போய் மொறையிட்டு கொண்டதின் பேரிலே மினிஸ்தருக்கள் கும்பினியாருக்கு மேலே யெழுதப்பட்ட ஆதரவு வார்த்தையைச் சொல்லி போகச் சொன்னார் களென்றும் யினிமேல் சேந்தோர் யென்கிற கப்பலின் பேரிலே (Cen teure) முசே தொத்தேல் முதலானபேர்கள் போய் வையாசிமீ போம் சேர்ந்து கபுறு சொல்லுவார் களென்று அதின்பேரிலே யோசனை பண்ணி நடக்க வேண்டியதுக்கு டறுயிச்சு அனுப்பத்தக்கதாக ரெண்டு பிறகாது வைத்து யிருக்கிறார்களென்றும் யிதல்லாமல் முசே ஓபேர் சென்னப் பட்டணத்திலிருந்து கும்பீனீர் தெறக்குதேரான முசே — . ——————— யின்னானின்னான் அவன் சித்தப்பனுக்கு யிங்கிறீசு கப்பலிலே அனுப்பின கடுதாசி போய் சேர்ந்து வாசித்துக்கொண்டானென்று மேலே யெழுதியிருந்தேனே அந்த திறேக்குதேர் கும்பினீர் வீட்டைப்போய் தன் தமையன் மகன் இந்தியாவிலே யிருந்து யெழுதி அனுப்பினா னென்று சொன்னால் பழி தங்கள் பேரிலே நிற்கும் என்று மனதிலே வைத்துக் கொண்டு தன் பணம் கும்பினீரிலே யிருந்ததை நாலு ரெண்டு லட்சம் யென்னயிருந்துதோ அதையெடுத்துக் கொள்ளுகிறேனென்றும் அவனேப்பார்த்து பின்னையும் ரெண்டொருத்தர் யெடுத்ததின் பேரிலே காபிராப்பட்டு புதுச்சேரி கும்பினீர் முழுகிப் போச்சு தென்று லோக துவணிச்சு கும்பினீரிலே அவரவர் வெகுதிரவியம் வைத்துயிருக்கிற வர்கள் அவரவர்கள் விக்கத்துவக்கினார்கள் அதினாலே நூத்துக்கு அன்பது மட்டுக்கும் முதலுக்கு நஷ்டமிட்டு வித்தார்களாம் அதின் பேரிலே கும்பினீர் திவாளிப்பண்ணின தாயிருக்கு தென்று யிங்கிலிசுக்காறர் ஒலாந்தாக்காறர்களினாலே வந்த கபுறன படியினாலே மெய்யல்ல வென்று ஒரு சந்தேகம் மினிஸ்தருகள் கும்பினி யாருக்கு சொன்னத்தினாலேயும் யிந்ததிறேக்குதேர் தனக்கு இந்தியாவிலேயிருந்து வந்த காகிதத்தை வெளிப்பண்ணாமலிருந்ததி னாலேயும் புதுச்சேரி சேதி வந்த பிற்பாடு யோசனை பண்ணி நடக்க வேண்டியதுக்குடராமிச்சு எழுதி அனுப்புரத்துக்கு ஆகரெண்டு பிறகாத்து வைத்திருக்கிறபடியினாலேயும் செந்தேரா (Cen aure) யென்கிற கப்பல் போய் சித்தரைமீ வையாசிமீ போய் சேந்தவுடனே அப்பால் நடக்க

வேண்டியதுக்குடாயிச்சு யெழுதிவருமென்று சொன்னதுமல்லாமல் முன்னே பிறான்சுகாறர் ராச்சியத்திலேயும் பரீசுபட்டணத்திலேயும் ராசாவினுடைய மனதிலேயும் யிங்கிறேசுக்காறர் அமிறால் மேஸ்தர் புஸ்கவேன் வந்து விபட்டினத்தில் சண்டைபோட்டு கோட்டையை வாங்க மாட்டாமல் அபசெயப்பட்டுப்போனபோது யிந்த சேதி சீமைக்குப் போனவுடனே அப்போ முசே துப்பிளேயிக்கிசுவைப்போலே நிறுவாகி வேறேயில்லே வெகு சமற்த்தன் யென்றும் யிவனை அழைப்பிச்ச பிறான்சு ராச்சியத்துக்கு நாலு மினிஸ்தர்கள் யேற்பட்டு காரியம் பார்க்கிறது அதிலே ஒரு மினிஸ்தரு யிடம் யிவருக்கு குடுக்க நேமிச்சு ராசாவினுடைய சன்னத்து வரச்சொல்லி வந்தபோது முசே துப்பிளேக்சினுடைய பேர் வெகு யென்னமாயிருந்த தென்றும் அப்பால் நாசறுசங்குவை வெட்டின சேதியும் அப்பால் அன்வறதிக்கானை வெட்டினசேதி போனபோதும் அப்படியேயே யிருந்ததென்றும் இங்கிலிசுக்காறரும் ஒலாந்தாக்காறரும் அனுப்பின சேதிபோன போது பரியாசமாயிருந்தது யிப்போவானால் மேஸ்தர் புஸ்கவேன் (Mr. Boscowan) சம்மதி அன்வறிதிக்கான் சம்மதி போனபோது யெப்படி. கீர்த்தியும் யெண்ணமும் பிறகாசித்ததோ அதுக்குப் பதிலாக விபரீதமான அபகீர்த்தியும் யெண்ணத்தாழ்த்தியும் யிவனுக்கு புத்தியில்லை பெண்டாட்டி பேச்சைக் கேட்டு கும்பினீர் முழுக்கடிச்சுது மல்லாமல் தானும் கெட்டு ராச்சியத்தையும் கெடுத்து பிரான்சு சாதிக்கு அபகீர்த்தியைக் கொண்டு வந்து விட்டானென்றும் யிப்படி சீமையிலே வெகுசாய் யெண்ணத்தாழ்த்தியாய் பேசுகிறார்கள் யென்றும் யிப்போபோனால் யிவரை ஒருத்தரும் யெண்ணார்கள் வெகு அவமரியாதையாய் நடக்கு மென்று யிப்படி பலவிதமாய்ச் சீமையிலேயிருந்து சேதி வந்ததாய்ச் சொன்னார்கள் அவரவர்கள் சொன்னதிலே நான் பத்திலே ஒருபங்கு யெழுதி வைத்தேன், யிதல்லாமல் மினிஸ்தருகளுக்கு யிவர் லக்ஷாந்தரம் யிங்கேயிருந்து அனுப்பினதிலே கும்பினியார் யிவர் பேரிலே பண்ணுகிற பிராதுக்கு போன மார்கழிமீ வரைக்கும் தானுச்சது யினிமேல் கும்பினீரைத் தானே திவாளி பண்ணுகிற சாடை வந்தபடியினாலே யினிமேல் மினிஸ்தருகளைத்தொட்டும் அட்டிசொல்லக்கூடாதென்றும் பெரிய பெரிய மனுஷர்களிலே சொல்லிக் கொண்டார்கள். நான் கேழ்விப்பட்டத்திலே சாரம் மாத்திரம் சூட்சமாய் யெழுதிவைத்தேன்.

## 1753௵ செப்தம்பர்மீ 9௳ ஸ்ரீமுக௵ ஆவணிமீ 28௳, ஆதி வாரம்

இத்தனாள் மச்சிலி ஆவணிமீ 27௳ சனிவாரம் செப்த்தோம்பர்மீ 8௳ இத்தனாள் பாப்பய்யபிள்ளை திருவண்ணாமலையிலே அசனுதிக்கான் லக்கை யேறினதும் மத்தப்பேர் ஆறும் லக்கை யேறாமல் போனதினாலே அசனுத்திக்கானுக்கு மோசம் வரத்துக்குயிருந்து தப்பிச்சுக் கொண்டு வந்து மோற்சா போட்டுருக்கிறயிடம் வந்து சேர்ந்தானென்று சேதி வந்ததை சொல்ல வந்தான் அந்த மட்டுக்கும் துரை பெண்சாதியுந் துரையும் உள்ளே போனார்கள். நானென் காசாக் கச்சேரியே வந்தேன் வந்தரிலிருந்து ஒரு ஒலாந்தாக்காரன் சுலுப்பு வந்தது. அதிலே முசே குப்பி — முசே மெனவில் முசே மரியோம் முசியே மிலியோம் வகையிரா அவரவர்கள் திரவிய சாமான்களுடனே வந்து துரை அவர்களைக் கண்டு பேசி அவரவர்கள் விடுதிக்குப் போனார்கள்.

யிவர்கள் அவுரங்காபாத்துக்குப் போய் அங்கே யிருந்து - அயிதரா பாத்துக்கு வந்து அங்கே முசே புசி மச்சிலிபந்தர் விட்டு அயிதரா பாத்துப்போய் சேர்ந்து அங்கே யிருந்தும் பவுன்சுடனே சலாபத்துசங்கு வரச்சொல்லி யெழுதியனுப்ப - முசே புசி அவுரங்காபாத்துக்கு பவுன்சுடனே பயணம் புறப்பட்டு போறதாய் யிருக்கிறதிலே முசே ஞாப்பி வெள்ளைக்காரர்கள் அயிதராபாத்து விட்டு மச்சிலிபந்தர் வந்து சேர்ந்து அங்கே யிருந்து சுலுப்பின் பேரிலே யித்தனாள் சேர்ந்தார்கள் சுலுப்பு யிவர்களையும் யிவர்கள் சாமான்களையும் யிறக்கிப்போட்டு அனுப்பிவிச்சுக்கொண்டு பாயெடுத்துப் போனார்கள்.

இத்தனாள் கோட்டையிலேயிருந்துகொண்டிருக்கிற முதாமியாவை பணம் குடுக்க யில்லையென்று பாப்பய்யபிள்ளை வீட்டிலே அழைத்து வந்து வைத்து யித்தனாள் ராத்திரி பத்துமணிக்கு சீமைகப்பலின் பேரிலே யேறினார்களென்று வந்து சொன்னார்கள். குத்துபுத்தின்கானை (Qutb ud din khan) யித்தனாளும் மணிக்கூண்டிலே வைத்து யிருந்ததே அவன் பணம் குடுக்கயில்லை. பாதாளக் கிடங்கிலே கொண்டுபோய் போட்டதாய்ச் சொன்னார்கள்.

யித்தனாள் திரிச்சிராப்பள்ளியிலே யிருந்து பாப்பய்யபிள்ளை ஒட்டகக்காறன் காகிதங்கொண்டு வந்தான் அதைப் படிச்சுப்பார்த்துக் கொண்டு ஒட்டகக்காறனை கொண்டு போய்க் காவல் வைத்தார்கள். யின்னத்துக்காக வெளியாக வில்லையென்று வந்து சொன்னார்கள்.

## 1753௵ செந்தம்பர்மீ 10௳ ஸ்ரீமுக௵ ஆவணிமீ 29௳ சோம வாரம்

இத்தனாள் விராகுவப்பிள்ளைக்கு சஞ்சயனமானபடியினாலே வெளியே போகவில்லை யித்தனாள் ஆம்பினகிரியிலே யிருந்து (Ahmednagar) பாசிராயன் அண்டையிலே யிருக்கிற முசபர்கான் மேற்படி தம்பி அசனுதிக்கானுக்கு யெழுதின காகிதத்துக்கு சவாது யெழுதினவயனம் ஆஷாடசுத்ததசமி யின்னம் — பாதுசா— விலே யிருந்து பாளாசிராயன் நானா வென்கிறவனுக்கு பாதுசா எழுதின பர்வானாவில் நகப்பன் சுபா சலாபத்துசங்குவுக்குத் தகீரும் நானாவுக்கு பாலிதும் யென்றும் சலாபத்துசங்குவைக் கைப்பிடியாய்ப்பிடிச்சு டில்லிக்கு அனுப்பச் சொல்லியும் அதுக்கு கூடாவிட்டால் தலையை வெட்டிப் போடச்செல்லியும் யிப்படியாக பர்வானாவந்தது யென்றும் அந்த பர்மனா—வந்தவுடனே பவுன்செல்லாம் முஸ்தீது பண்ணச்சொல்லி டேரா வெளியே போடச் சொல்லியும் யெங்கே யெங்கே பவுனசு யிருக்குதோ அங்கங்கே யிருக்கிற பவுன்செல்லாம் வரச்சொல்லி யெழுதி அனுப்பி ஆஷாடசுத்ததசமி டேராவிலே நானாவந்து சேர்ந்து அமதாநகரம் (\hamad.bad) யென்கிற பட்டணத்தை சிறுவண சுத்த துவிதியை திதி யன்று வந்து சேர்ந்தா னென்றும் யிதிலே குச்சிராத்தி சீமையிலே யிருந்த— கவுடியா யென்கிற—(Gauduya) செமேதாரன் முப்பது முப்பதினாயிரம் குதிரையுடனே ஆம்தான நகரம் வந்து சேர்ந்தானென்றும். யிந்த மட்டுக்கும் நானா யண்டையிலே யென்பதினாயிரம் குதிரை சேர்ந்தது யென்று யிந்த மாசத்தையிலே சலாபத்துசங்குவுடனே சண்டை பண்ணி செயம் பெத்து வரானென்றும் பாதுசாவிலே வசாரத்துப்

பட்டம் காசுதின்கான் குமாரனுக்கு குடுத்து அமிரால் உமராவு (Amir-ul-umara) யென்கிற கிதாப்பு பாதுசா குடுத்ததுமல்லாமல் தனக்கலந்தானும் (Box of office) குடுத்தாராம் யித்தனை கோபம் சலாபத்துசங்குவின் பேரிலே பாதுசா பண்ண வேண்டியதேது நிமித்தியம் யென்றால் வெள்ளைக்காரர்கள் கையிலே கற்னாட்டகத்தை குடுத்து பாதுசா பேர் ஊரிலில்லாமல் முழுகடிச்சுப்போட்டானென்று கோபத்தினாலே யிப்படிப்பட்ட சுவாமி துரோகியை தலையை வெட்டிப் போட அயோக்கியனென்று யிவனைப் பிடிச்சு அனுப்பச் சொல்லியும் யில்லாவிட்டால் யிவனை வெட்டிப் போடச்சொல்லியும் யெழுதி யிவன் சீமையாகிய நக்கனசுபாவையும் நாஞவுக்கு பாலிசெய்து வைத்தான் யென்றும் முசபர்கானையும் பதினாயிரம் துப்பாக்கிகாறர் களையும் நாலாயிரம் குதிரைக்காறர்களையும் வைக்கச்சொல்ல உத்தாரங்குடுத்ததுமல்லாமல் கற்னாட்டகத்துக்கும் அனுப்புரதாய்ச் சொன்னாரென்றும ஆனபடியினாலே யிந்த ஸ்ரீத்.. யாலே சலாபத்துசங்குவை சண்டையிலே சரிப்பிடிச்சுப் போட்டு நானா கொஞ்சநாளையிலே கற்னாட்டகத்துக்கு வந்தவுடனே உமக்கும் சமஷ்ஷம் ஆகும் யென்றும் தம்பிபேருக்கு முசபர்கான் யெழுதின காகிதம் திருவண்ணாமலையிலே யிருக்கிற அசனுதிக்கானுக்கு வந்து சேர்ந்துதென்று அந்தக்காகித சவாது அவர்கள் வீட்டுக்கு வந்ததைப்பார்த்து தமிழிலே யெழுதி வைத்தேன்.. பாரிசியிலே யிருந்ததை தெலுங்கிலே யெழுதி வைத்தேன்.

## 1753ஞு செப்தம்பருமீ 11௳ ஸ்ரீமுகஞு ஆவணிமீ 30௳ அங்காரவாரம்

இத்தனாள் அவரவர்கள் ஊரிலே சொல்லிக்கொள்ளுகிற பேச்சாலே நந்திராசா பவுன்சும் முராரிராயன் பவுன்சும் நம்முடைய பிரான்சுக்காற பவுன்சும் திரிச்சிராப்பள்ளி கோட்டையை நெருங்கி சுத்திக்கொண்டாப் போலேயும் மமுதலிக்கான் இங்கிலீசுக்காறர் பவுன்சு கோட்டைக்குள்ளே போனதாகவும் கோட்டையிலே ரஸ்துக்கள் இல்லை யென்றுப் போலேயும் தஞ்சாவூர் பவுஞ்சு தஞ்சாவூர்போய் சேர்ந்ததாயும் நம்முடவர்களுக்கு உள்க்கையா யிருக்கிறுப் போலேயும் இப்படியாக சொல்லுகிறதாய் சேதி சொன்னார்கள்.

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போனவுடனே சின்னதுரை வந்தார். காங்குகட்டுப் போடுகிறதுக்கு சப்பிராயில்லை யென்று முசே மீரா சொன்னான். அதின்பேரிலே சின்னதுரை நாளைக் காலத்தாலே போகுவோமென்று சொல்லி அனுப்பிவிச்சுக் கொண்டு போனார். இத்தனாள் ஒன்பது மணிக்கு காலத்தாலே முசே கும்பிக்கு சீமையிலிருந்து வந்தசேம்லூயி (St Louis) முத்திரை அவர்கள் ராசாக் கட்டளைப்படிக்கி சகலமான ஒபிசியால்மார்கள் கோன்சேலியேர்கள் உள்பட துரை அவர்கள் மேல் வீட்டின் பேரிலே பெரிய சாலையிலே சிங்காரிச்சு யிருக்கிறத்திலே வந்து சமஸ்தமான பேர்களும்கூடி அங்கே துரையவர்கள் முன்பாக முசே குப்பி வந்து முழங்காலிலே நிர்க்க யிவர் ராசாக்கட்டளையை ஒருமேசர் படிக்கத் துரையவர்கள் கத்தியினாலே வலதுபுசம் யிடதுபுசம் மார்பு தலை யிந்த ஸ்தானங்களிலே

யுத்த முகத்திலே சுந்தியாலே அடிச்சு முன்னே யுத்தத்தில் மார்பு காயம் வாங்கிக் கொண்டு சாகுறேனென்று வார்த்தைப்பாடு சொல்ல அதின் பேரிலே துரையவர்கள் சேம்லூயி முத்திரையைக் கொடுத்து மார்பிலே கட்டிவிட்டு அப்பால் துரையவர்கள் கட்டி முத்தமிட்டுக் கொண்டு ஆசாரம் பண்ணினர் அப்பால் நான் முபார்க்கு பாதி சொன்னேன். அவரவர்கள் கட்டிமுத்தமும் கொடுத்துக் கொண்டு ஆசாரம் பண்ணினர்கள். எனக்கும் ஆசாரம் பண்ணினன். அப்போ கோட்டைக்கி கிழண்டையிலே ஆனையின் பேரிலே அம்பாரி வைத்து மத்த ஆனைகளின் பேரிலே மரபுராதுடங்காரம் முதலானதுகள் வரிசையாய் நிறுத்தி முசே மறுக்கி கொம்புலாம் (Marqui Conflans) கம்பித்தாமார் சீமைக்கப்பல் கப்பித்தாமார் வகையிராக்களுக்கு துரையவர்கள் பாதுசாவினுடைய பிருதுகள் நிசாமுக்கு மாத்திரம் நடக்கிறது யிப்போ தமக்கு நடக்குதென்று சொல்லிக்கான்பிச்சு அதின்பிற்பாடு கொண்டுபோய் அந்த தளத்திலே வைக்கச் சொன்னர்.

## 1753ளு ஒயித்தோபர்மீ 4உ ஸ்ரீமுகளு பிறட்டாசிமீ 22உ குருவாரம்

இத்தனுள் காலந்தாலே எட்டு மணிக்கு துரையவர்கள் தாமு வந்தபோது நான் போய் ஆசாரம் பண்ணி கபுறு சொன்னவிடத்திலே துரையவர்கள் சீமைக் காகிதங்கள் வந்து பார்க்கிற நிமித்தியம் மேல் வீட்டின் பேரிலே யேறிப்போனர் பாதிரி சென் அமூர் (Saint Amour) யென்கிறவர் சீமையிலிருந்து வந்தவர் யென்னைக்கண்டு ஆசாரம் பண்ணி சீமையிலே யிருக்கிற மூசே மொந்தரா (Mr. Montaran) அண்டையிலே நான் போயிருக்கச்சே கும்பினீர் திறேக்குதேர் முசே துவேலார் (Mon Duvelaer) யென்கிறவன் வந்து பேசிக்கொண் டிருக்கச்சே முசே துவேலார், முசே மொந்தார்முடனே உம்முடைய பிறஸ்தாபமாய் உம்முடைய சமத்தும் நீர் யிங்கிரீசுக் காறர் கலாபத்தும் போது சென்னப்பட்டணம் வாங்கினது முதலாய் ஆட்டும லாரடு (Unlucky Boscowan) பொஸ்கவேன் வந்து புதுச்சேரியை முத்திகைப்போட்டுக்கொண்டு சண்டை பண்ண போது நிறுவாகம் பண்ணின அப்பால் அன்வறதிகான் ஆதியாய் நாசறுசங்கு செத்தவரைக்கும் நீர் சகல காரியமும் நிறுவாகம் பண்ணி கும்பினீருக்கு வில்லியநல்லூர் பாகூர் வழுதாவூர் சீர்மை வகையிரா சாகீர்கள் உண்டாக்கினது அல்லாமல் மச்சிலிபந்தர் சீமை முதல் மதகாமும் கும்பினீருக்கு சாகீர் பண்ணி குடுத்தவரைக்கும் நடந்த ஆமூலாகிரந்தமாய் சொல்லி ரொம்ப தாரிப்புவார் சொல்லினதின் பேரிலே முசே மொந்தாம் பெகு சந்தோஷப்பட்டு உமக்கு காகித மெழுதி கொடுத்தாரென்று முசே துவலாரார் (Mon Duvelaer) காகிதங்கொடுத்தார் அது யென் கையிலே யிருக்கிறது யிதல்லாமல் பின்னையும் சிறிது பிறஸ்தாபம் நடந்திருக்குது அதெல்லாம் முன்வீட்டுக்கு வந்து காகிதங்களும் கொடுத்து சேதியுஞ் சொல்லு கிறேன் அப்போ நானும் உன் பேச்சு ரொம்ப சொன்னேன் அதெல்லாம் அவகாசமாய்ப் பேசிக்கொள்ளுவோம் யென்று சொல்லிப்போட்டு துரையவர்களண்டைக்குப் போய் நான் யென் காசாக்கச்சேரியே வந்தேன்.

இத்தனுள் ராத்திரி துரையவர்கள் சீமையிலிருந்து வந்த சங்கீதக்காறர்கள் கையில் மேல் விட்டின்பேரிலே சங்கீதம் கேட்டார என்று பெட்டரை மணிக்குச் சொன்னார்கள். சங்கீதம் வெகு நேர்த்தியாயிருந்ததென்று சொன்னார்கள்.

## 1753௵ ஒயித்தோபர்௴ 8௳ ஸ்ரீமுக௵ பிறட்டாசி௴ 26௳ சோமவாரம்

இத்தனுள் கேழ்விப்பட்ட சேதி யென்னவென்றால் திருவண்ணாமலையிலிருக்கிற யிங்கிரீசுக்காறர் மனுஷர்களுட மமுதலிகான் மனுஷர்களும் வேட்டைவலத்திலேயிருக்கிறவர்களுமாய் கூடிக்கொண்டிருந்த பிற்பாடு பிறப்பட்டு வேலூர் பவுன்சு நம்முடவர்கள் அசனுதிகான் வகையிரா துலுக்காகள் பேரிலேயும் வெள்ளைக்காறர் பவுன்சு முசே லத்துவாசு (Mon Duvachr) வகையிரா வெள்ளைக்காறர் பேரிலேயும் விழுந்து ராத்திரியிலே சண்டை பண்ணினதின்பேரிலே வேலூர் முறுத்தசல்லிக்கான் (Murtaza Alikhan) மனுஷர் சித்திசயிதுக்கானையும் ஏறுதாறுகானையும் தலையை வெட்டிக்கொண்டு பின்னையும் சேதம் பண்ணவிடத்திலே அசனுதிக்கான் வகையிரா துலுக்கர் பவுன்சும் முசே துவாசு வகையிரா வெள்ளைக்காற பவுன்சும் திருவண்ணாமலையைவிட்டுப் போட்டு செஞ்சி வந்து சேர்ந்து அசனுதிக்கான் மாத்திரம் யிருபது முப்பது பேர்களுடனே பத்து நாளைக்கி முன்னே புதுச்சேரி வந்து சேர்ந்தான பிற்பாடு திருவோத்தியூர் சீமை உத்தரமல்லூர் சீமை சாலவாகம் சீமை திண்டிவனத்து சமீபம் வெள்ளிமேடுபேட்டை மட்டுக்கும் வந்து தோறணம் கட்டி நம்முடைய மனுஷர்களை துரத்தி விட்டார்கள் நம்முடவர்கள் தாலுக்கு மனுஷர்கள் அங்கேயிருந்தவர்கள் யெல்லாம் துப்பாக்கிகள் வகையிரா ஆயுதங்களை சத்துருக்கள் கையிலே ஒப்பிச்சுப் போட்டு கையுங்காலுடனே வந்து புதுச்சேரி சேர்ந்தவர்களும் புதுச்சேரிக்கி வராமல் வெளிகளிலே நின்றவர்களும் செத்தவர்களும் சிதறினவர்களுமாய் திந்துது. திண்டிவனம் மாத்திரம் சபுத்தி பண்ணயில்லை யென்று சொல்லுகிறார்கள். மைத்தப்படி வடக்கே மரக்காணம் மட்டுக்கும் சபுத்திபண்ணினார்கள் யென்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். நம்முடைய துரைக்கி அபசெயகாலமும் சத்துருக்களுக்கு செயகாலமும் ஆக நடக்கிறது சுவாமி யின்ன மின்னம் யென்ன யென்ன விந்தைகள் நடப்பிப்பாரோ தெரியாது. யிப்படி நடக்கிறதுக்கு மூலம் வந்து துரைபெண்சாதி யேர்ப்பட்டாள். ஒவ்வொரு காலத்திற்கு ஒரு சமஸ்தானங்களுக்கு அபகீர்த்தி வருகிறதும் ஒருத்தரை ந்தொட்டுத்தான் கீற்த்திவருகிறதும் ஒருத்தரைத்தொட்டுத்தான் யென்று வழக்கப்படி யிந்த சமஸ்தானத்திற்கு அபகீர்த்திக்கி மதாம் துப்பிளேயிச்சு மூலமாய் சம்பவிச்சது யென்று லோகமெல்லாம் பேசிக்கொள்ளுகிறார்கள்.

## 1753௵ ஒயித்தோபர்௴ 9௳ ஸ்ரீமுக௵ பிறட்டாசி௴ 27௳ அங்காரகவாரம்

அப்பால் நாற்பத்தெட்டு கட்டு போட்டான் பிற்பாடு சீமையிலிருந்து வந்த மேசை மேலே போடுகிற சாமானுகள் பார்க்கிறதுக்கு நானும் சின்னதுரையும் முசே மீரா வகையிராக்களும் போய் மேல் வீட்டிலே நடுகாலையிலே பெட்டிகள் திறந்து

திறந்து யெடுத்து வைக்குறார்கள். அந்த வேடிக்கையைப் பார்த்தோம். அந்த வேலை நேர்த்தியும் அந்த மெருகும் அந்த தீர்மானமும் யிந்த ராச்சியத்திலே ஒருக்காலுஞ் செய்யமாட்டார்கள் அந்த ஒனைரும் தெரியாது திரவியமுள்ளவன் அந்த ராச்சியம் போயிருந்து சுகம் அனுபவிக்க வேணுமே அல்லாமல் யிந்த ராச்சியத்திலே சுகம் அனுபவிக்கவும் தெரியாது. ஒருத்தருக் கொருத்தர் பொருக்கமாட்டார்கள் யென்றாப் போலே தோத்திச்சு.

இத்தனுள் ராத்திரி கேழ்விப்பட்ட சேதி திருப்பதி அமுல்கட்டிக் கொண்டிருக்கிற மகம்மது கமாலே யிங்கிலீசுக்காறர் மனுஷர்களும் மமுதல்லிக்கான் பவுன்சும் மத்தாலவாரும் கூடி கொண்டு தலையை வெட்டி அவன் பவுன்சு ஆனைகள் குதிரை ராணுவுகளும் தட்டு முட்டு சாமானுகளும் கொள்ளையிட்டு யெடுத்துக்கொண்டு திருப்பதி அமுலேயும் கட்டிக் கொண்டதாயும் மதனுந்த பண்டிதனுடைய மனுஷர் பிறுக்கு ராசா கோபாலபண்டிதனுக்கு குடுத்த ரூபாயிக்கு ஆக துரையவர்கள் அந்தப் பணம் மகம்மதுகமாலேக் கொடுக்கச் சொல்லி யெண்ணாயிரம் ரூபாயிக்கு யெழுதி அனுப்பி விச்சாப் போலேயும் அந்த மனுஷர் போய் சேரவும் மகம்மது கமால் காரியம் தீரவும் ஆக யிருந்தபடியினாலே அந்தச் சேதி கொண்டுபோன மனுஷரில் ஒருத்தன் மதனுந்தபண்டிதனுக்கு சாவு கபுறு சொன்னதாய் யெனக்கு கபுறு வந்து சொன்னார்கள். மகம்மதுகமாலே வெட்டிப்போட்ட சேதி மெய்யானால் நம்முடைய பிருன்சுக்காறர் பரம் எடுத்துப் போச்சுதென்று யென்ன வேண்டியது அதெதினாலே யென்றால்—நம்முடைய துரை சம்பளம் கொடாமல் போனாலும் மத்தத்து அனுப்பாமல் போனால் அன்னூறு குதிரையும் ரெண்டா யிரம் பாறுக்காறர்கள் கற்னாட்டக சேவுகர் வகையிரா—பவுன்சு நாலு ஆனைகள் ஒட்டகங்கள் யெருதுகள் யிதுகளெல்லாம் வைத்துக் கொண்டு பிருன்சுக்காறர் பேர் சொல்லிக் கொண்டு நெல்லூர் விட்ட பிற்பாடு மட்டலவாரை சேர்த்துக்கொண்டு அந்த வட்டங் களிலே தாம்தூபம் பண்ணிக்கொண்டு ஒரு புலி போலே சத்துருக்க ளெல்லாம் பயங்கரம் தோத்திவிச்சுக் கொண்டு திருப்பதியுங்கட்டிக் கொண்டு பிருன்சுக்காறர் காரியம் யிவ்விடத்திலே குறைஞ்சு கண்டாலும் இது அந்தப் பிறந்தியங்களிலே யிருக்கிற பேர்களுக்கு தோத்த ஒட்டாமல் அந்த அதருகடப்பை கந்தனூர்—இவ்வளா வரைக்கும் யீசானிய மூலே மச்சிலிபந்தர் வரைக்கும் பேர் பண்ணிக் கொண்டு வந்தான் யிவன் விழுந்தது மெய்யானால் வடக்கத்துப் பரமும் தாசத்தும் போய்விட்டதாய்க் கெட்டியாய் யெண்ண வேணு மென்று சனங்கள் சொல்லிக்கொண்டதை யெழுதி வைத்தது மல்லாமல் மேலே யெழுதின மகம்மதுகமால் காரியம் சந்தேகமா யெண்ணக்கவை யில்லே. கெட்டியாய் நடக்குமென்றும் சொன்னார்கள் யெதினாலே யென்றால் தத்துகாலம் யிருக்கிற யேஷியத்திலே யெங்கே யிருக்கிற பவுன்சு அங்கே முழுகிறபடியினாலே—மகம்மது கமால் கெத்தியும் அப்படி நடந்திருக்குமென்று தோத்தினதை யெழுதி வைத்தேன்.

## 1753ஆ ஒயித்தோபர்மீ 10உ ஸ்ரீமுகஞு பிறட்டாசிமீ 28உ புதவாரம்

இத்தனுள் காலத்ாலே துரையவர்களண்டைக்குப் போய் ஆசாரம் பண்ணி கபுறு சொன்னதின் பேரிலே கப்பல்களாலல் சுறுக்கிலே பயணம் போக வேணும் வற்த்தகரை கண்டிச்சு யிருக்கிற பிடவை யெல்லாம் முஸ்தீதுபண்ணி விச்சு க்கட்டுப் போடு விச்சுப் போடென்று சொன்ஞர் நல்லதென்று சொன்னேன் அப்பால் ஒபிசியால்மார்கள் அவரவர்கள் பேசுகிறபேச்சுகளிலேலே அவர் யெழுந்திருந்து மேல் வீட்டேபோனுர்.

சேன்லூயி கப்பலிலே வந்த சொலுதாதுகள் யிறநூத்திமுப்பது பேர்கள் ஒபிசியால்கள் கூட யித்தனுள் திரிச்சிராப்பள்ளிக்குப் பயணம் பண்ணி அனுப்பினுர்கள். நாலு பீரங்கிகள் கூடப் போச்சுது. திருநாமநல்லூரிலே போயிருக்கிற மருந்துகுண்டுகள் துப்பாக்கிகள் வகையிரா அன்னூரு ஆள்சாமனுகள் அது அப்பால் போறதுக்கு சத்துருக்கள் பயத்தைத் தொட்டு நின்றுயிருந்தாலும் அல்லிக்கானுட் யிறுநூறு காடுதிக்காறர்களும் கூட காத்திருக்கிற படியினுலே யிவர்களும் போயி அதை சாகிச்சுக் கொண்டு போற தாயிச் சொன்ஞர்கள்.

இத்தனுள் பனிரெண்டு மணிக்கு முசே கத்தினேசு (Mr. Gatinais) வந்த கப்பல் வந்து வைத்துப் பிடிச்சு முசே கொர்ஷாமும் லாகேசெனனேத்தியும் யிறங்கிவந்து துரையவர்களைக் கண்டு பேசினுர்கள்.

## 1753ஞு ஒயித்தோபர்மீ 11உ ஸ்ரீமுகஞு பிறட்டாசிமீ 29உ குருவாரம்

நேத்தியதினம் ராத்திரி திருப்பதியிலே யிருந்து மகம்மதுகமாலே வெட்டிப் போட்டு சேதிக்கி அசனுதிகானுக்கு மனுஷர் வந்து துரைக்குப்போய் கபுறு சொல்லிப் போட்டு மகம்மதுகமாலின் பெண்சாதி பிள்ளைகளண்டைக்குப்போய் துக்கம் கொண்டாடின. துலுக்கர்கள் அவரவர்கள் போய்துக்கங்கொண்டாடினுர்கள். இத்தனுள் கேழ்விப்பட்ட சேதி விருத்தாசலத்திலிருந்துக்கொண்டிருந்த பழைப் பொறுத்தாப்பிள்ளையையும் பிடிச்சுக்கொண்டு அவன் குமாரனையும் காயம்பண்ணி பிடிச்சுக் கொண்டு போனுர்கள் விருத்தாசல சீர்மையும் கட்டிக் கொண்டார்களென்று சேதி வந்ததாய்ச் சொன்ஞர்கள். இப்படி இந்த மீ முதல்தேதி முதல் இன்றைய வரைக்கும் பயங்கு முழுகின சேதியும் கப்பலுகளுடைய பெலகீன சேதியும் சத்துருக்களாகிய யிங்கிலீசுக்காறர்கள் பெலத்து யிருக்கிறதும் மமுதல்விக்கான் பெலத்துயிருக்கிறதும் அவர்கள் செயமும் நம்முடையவர்கள் அபசெயமும் கேழ்விப்பட்டுக் கொண்டு வந்தோம், அற்பசிமீ யெப்படி யிருக்குமோ அறிய வேண்டியது.

துரையவர்கள் மலதாருல் பெருமே சாரிப் போய் விட்டு அவர் மகா தைரியசாலியான படியினலே காம்பிரயமாயக் கொண்டு வருகிருர் யென்ன கொண்டு வந்தாலும் நாளுக்கு நாள் கிழுக்கு யிறங்குறதைத் தொட்டு பரிமளிக்காமல்ப் போகு தென்று தோத்துது.
இத்தனுள் முசே தேசடுதேன் ((Mr. Desgaruins) யருமகன் முசே வெறி (Mr. Very) யென்கிறவன் வியாதியுடனே திரிச்சிராப்பள்ளி தண்டுவிட்டு யித்தனுள் புதுச்சேரி வந்து தன் வீட்டே போய்ச் சேர்ந்து துரையவர்களுக்குச்சொல்லி யனுப்பினதுக்கு யென்முகத்துக்கு வரவேண்டா மென்று கோபமாய்ச் சொல்லி அனுப்பினரென்று சொன்னர்கள். யெதினலே யென்றால் தண்டியிலே சாக்கிறதையாய் யிராமல் தண்டை முழுகடிச்சுப் போயிட்டார்களென்கிற கோபம் யென்று சொன்னர்கள்.

## 1753ளு ஒயித்தோபர்மீ 12உ பிறட்டாசிமீ 30உ (ஸ்ரீமுகஞ) சுக்கிறவாரம்

இத்தனுள் கேழ்விப்பட்ட சேதி யிங்கிறீசுக்காறர் பவுன்சு வந்து ஆலம்புரிவிக் கோட்டையின் பேரிலே சண்டை போடுகிற சேதி வந்து யிறநாறு பாறுக்காறர்களை யில்விடத்திலிருந்து அனுப்பினர்களென்று சொன்னர்கள்.

## 1753ளு ஒயித்தோபர்மீ 13உ ஸ்ரீமுகஞ அற்பிசிமீ 1உ சனிவாரம்

இத்தனுள் ராத்திரி அபறங்காபாதிலேயிருந்தும் அயிதராபாதிலிருந்தும் துரையவர்களுக்கு சலாபத்துசங்கு முசே புசிவகையிரா காகிதங்கள் வந்ததாய்ச் சொன்னர்கள்.

## 1753ளு ஒயித்தோபர்மீ 14உ ஸ்ரீமுகஞ அற்பிசிமீ 2உ ஆதிவாரம்

இத்தனுள் ராத்திரி முசே மேல்வில் (Mon Mainville) வகையிரா சிறிது வுயிசியால்கள் திரிச்சிராப்பள்ளிக்குப் போனர்களென்று சொன்னர்களென்று சொன்னர்கள். சோன்து மகம்மது தம்பிக்கி முன்னூறு துப்பாக்கி கொடுத்து புதுசாய் சிப்பாயிகளை வைத்து திரிச்சிராப்பள்ளிக்கு அனுப்பினர்கள்.

## 1753ளு ஒயித்தோபர்மீ 16உ ஸ்ரீமுகஞ அற்பிசிமீ 4உ அங்காரகவாரம்

இத்தனுள் கேழ்விப்பட்ட சேதி முராரிராயனுக்கு சுற்றுடகத்துக்கு சவுதாய் யெழுதிக் கொடுத்தார்களென்றும் யிதுக்கு முராரி ராயன் ஆயிரம் சுவார்களைவைத்து மமுதல்லிக்கான் யிப்போ கட்டிக் கொண்டு போன சீர்மையெல்லாம் தோறணம் கட்டி அமுல்தார் களுடைய வசமும் தாக்கலா பண்ணி தாங்களும் சாவுதா அமுலுக்கு

மனுஷர்களை வைத்துக் கொண்டு தஸ்தான பணத்திலே நாலத்தொரு பங்கு அவர்கள் யெடுத்துக் கொள்ளவும் மூணுபங்கு துரையவர்கள் மனுஷர் கைபக்க யிக்கப்படிக்கி ஒடம்படிக்கையாயி சன்னதுகளும் எழுதிக் கொடுத்து யித்தனுள் மத்தியானம் சீரொப்பாவும் குடுத்து அனுப்ப மூணுசிரொப்பா கொண்டுபோய் வைத்தார்கள் யென்று சொன்னுர்கள்.

இதல்லாமல் முராரிராயனுக்கு கொடுக்க வேண்டிய லட்சத்திருபதிணுயிரம் ரூபாயிக்கு துரையவர்கள் லட்சம் ருபாய்க் குடுக்கவும் சீமாமூலம் அமுல்தாரன் பாப்பய்யபிள்ளை யிருபதிணுயிரம் ரூபாய் கொடுக்கவும் பிருக்குமி நிலுவை அன்பதிணுயிரத்துச் சில்வானம் ரூபாயும் கொடுக்க வேண்டியதும் குடுத்துவிடச் சொல்லி பாப்பய்யப்பிள்ளையை ரெம்பகோபதாபமாய் துரையவர்கள் நேத்து ராத்திரி நடப்பிச்சதாய்ச் சொன்னுர்கள் அமுல்தாரனை பாப்பய்ய பிள்ளை போயிட்டதை பின்னை ஒருத்தன் யெத்தயினத்திலே யெத்தனை காயக்கிலெசப்பட்டவர்கள் யோர்ப்பட்டு யிருந்தாலும் நித்தியம் ஒதை அடி முகத்திலே உமியுறதுகள் முதலானதுகள் சனி சம்பந்தம் யென்ன யென்ன உண்டோ அதுகள் நடக்குறதுக்கு ஓடிப்போவான் அடைமானம் யில்லாவிட்டால் 'விஷயம் பிறயோக மாகிலும் பண்ணிக் கொள்ளுவான். அதுகளெல்லாம் அப்பிறம் ஒரு புறமிருக்க வைத்துப் போட்டு மறுபடி வெளியே வந்த உடனே ஆற்பாட்டத்துடனே பிறப்படுகிற சமத்து ஆருக்கும் வாமாட்டாது யென்று சனங்கள் சொல்லிக் கொள்ளுகிறுர்கள்.

இத்தனுள் மமுதல்லிக்கான் மனுஷர் தியாகதுர்க்கத்தை வந்து கட்டிக் கொண்டு அந்த வட்டங்களெல்லாம் நம்முடவர்களை யெங்கும் சேரவொட்டாமல் பண்ணிக்கொண்டு வாறுர்களென்று சொன்னுர்கள்.

## 1753(வது) ஒயித்தோபர்மீ 17உ ஸ்ரீமுகவூ அற்பிசிமீ 5உ புதவாரம்

மேலே யெழுதப்பட்ட சவுதாயிக்கு முறாரிறாயனுக்கு சன்னது குடுக்கயில்லை யென்றும் அவர்கள் மனுஷர்களுக்கு சீரொப்பாவும் குடுக்கயில்லை யென்றும் சொன்னுர்கள். தொரையவர்கள் முராரிராயன் மனுஷர்களுக்கு யிருபதாயிரம் விராகன் குடுத்தாரென்று சொன்னுர்கள்.

இத்தனுள் பகலைக்கு மேலாக தொரையவர்கள் மூணு மணிக்கு அழைச்சனுப்பிவிச்ச தெரேசுகாநதோ மென்கிற கப்பலுக்கு நாலூறு கட்டு யேத்தி மயேக்கி (Mahe) அனுப்புவிச்சு அங்கே முளகுயேத்திக் கொண்டு அப்பால் மகக்கரைக்குப் போய் அங்கே யிருக்கிற லாம்சோம் (Anson's) யென்கிற கப்பல் வகையிராக் கப்பல் கட்டுகளேத்திக் கொண்டு சீமைக்குப் போக வேணுமான படியினுலே தெரேஸ்காந்தோமுக்கு முன்னூத்தி நாற்பத்தி ரெண்டு கட்டு யேறித்துது. யின்னம் அன்பத்தெட்டு கட்டு குறைச்சலா யிருக்குது யிது யெப்படியாகிலும் பார்த்து சனிவாரத்துக்குள்ளாக போட்டு கப்பல் மேலே யேறிப்போகப் பார்க்க வேணு மென்று சொன்னுர்.

நல்லதென்று சொன்னேன். நானூறு கட்டு யேத்தி அனுப்பினே மென்று யெழுதிப்போடவா யென்று கேட்டார். அவசியம் யெழுதிப் போடுங்கள் யென்று சொன்னேன். சென்னபட்டணத்திலே மேஸ்தர் மாசு வந்தானே யென்னமாயிருக்கிறான் யென்று கேட்டார். யென்னமாயிருக்கிறது வெப்பாயிருக்கிறான் யென்று சொன்னேன். அதிலே முசேகெர்ஷாம் யிருந்துகொண்டு வியாதிஸ்தனா யிருக்கிறானோ வென்று கேட்டான். அதுக்கு நான் சொன்னது யெந்த றேவிலே தான் துரைத்தனம் பண்ணி அந்த றேவை சத்துருக்கள் வசமாய் ஒப்பிச்சதுமல்லாமல் சத்துருகள் கையில் அகப்பட்டு சகல அவமானப்பட்டு சகல சனங்களுக்கு இவன் சண்டைகுடாமல் பட்டணத்தை ஒப்பிச்சுப்போட்டு தானும் அகப்பட்டுக்கொண்டு முழிக்கிறதுமல்லாமல் பட்டணம் பொன்னும் வெள்ளியும் நவறெத்தினமும் கொழிச்ச பட்டணத்து சனங்களை யெல்லாம் பேயாக்கி பிஷ்சைக்காறராக்கி பட்டணத்தையும் குட்டிசுவராக்கி—தானும் குட்டிச்சுவராய்ப்போனானென்று சகல செனங்களும் நிந்திக்கிற யிடத்திலே தானே தான் பெரும்பார்த்தந்த தக்கமாய் பட்டணமா ஒரு அதிகாரமுமில்லாமல் வருகிறதைவிட சீவனை விட்டு விடுகிறது மெத்த நேத்தியென்று யென் மனதுக்கு தோத்துது யென்றும் வெகு சனங்களும் சொல்லிக் கொள்ளுகிறார்களென்று சொன்னதுக்கு துரையவர்கள் முசே கெர்சாமைப் பார்த்து-நான் ஆனால் முகம் அறியாத தேசத்திலே போய் பிட்சை யெடுப்பேனே அல்லாமல் அந்த துரைக்கி சறுவாத்துமனாக போகவே மனது நினையாதென்று சொல்லி றங்கப்பிள்ளை பெரியமனுஷனை படியினாலேயும் அவர்கள் பாட்டன் தகப்பன் முதலாய் பெரிய உத்தியோகம் பண்ணியெப் போதும் அயிசுவரியத்துடனே யிருந்தவர்களானபடியினாலே யிந்த யோசனைதோத்தி றங்கப்பிள்ளை சொன்னானே அல்லாமல் பின்னை ஒருத்தருக்கும் தோத்திச் சொல்லாமாட்டார்களென்று கேவலம் பிறீதியுடனே-பின்னையும் அரைநாழிகை தேசகாலமட்டுக்கும் பேசி யிருந்து பெரியவர்கள் சாமர்த்தியமும் முசே யெபேர் பண்ணின அநியாயத்துக்கு (Mon Hebert) ஷெவாலியேர் குருவப்பனை சீமைக்கி அனுப்பிவிச்சதும் அங்கே மோன்செஞ்ஞோர் துக்குதே ஒறுலியானும் (Duke of Orleans) அவர்கள் தாயாரும் ஞானத்தாயும் ஞானத்தகப்பனுமயிருந்தாலும் குருவப்பிள்ளைக்கி சீமையிலே ராசாக்கள் வீடுகளிலேயெல்லாம் நடந்தமரியாதைகளும் யிது முதலான பிரஸ்தாபம் பேசியிருந்து அப்பாலின்றையதினம் யிங்கிறேசுக்காறர் பட்டணத்தச்சுத்தி மோறசாபோட்டுக் கொண்டு சண்டை பண்ணி மேஸ்தர் புஸ்கவேன் (Mr. Boscowan) யென்கிற அமிரால்மலாறடு அபசெயப்பட்டு வாங்கி வடிப்போனதின்மான படியினாலே யிப்போ கோயிலிலே போய் சுவாமியைப் பிறார்த்திச்சுக் கொள்ளவும் வேண்டிய தினமானபடியினாலே கோயிலுக்குப் போறோம் அங்கே சீமையிலிருந்து வந்த புது சங்கீதக்காறர்கள் அந்த வாத்தியங்களெல்லாம் வைத்துக்கொண்டு சங்கீதம் பாடப் போனார்கள்—நீயும் வந்து சங்கீதம் கேளென்று சொல்லி விட்டு கோயிலுக்குள்ளே குடும்பத்துடனே போனார். அப்போ நான் போய் ஆசாரம்பண்ணி யெனக்குத் தோத்தின உபசாரம் சொல்லி நானும் கூட கோயிலுக்குப் போனேன். அங்கே சமஸ்தமான வெள்ளைக் காறர் வெள்ளைக்காறச்சிகள் வகையிறாக்கள் யெல்லாரும் வந்திருந்தார்கள். அப்போ பிறார்த்தனை துவக்கினவுடனே யிருபத்தோரு பிரங்கிசுட்டார்கள். கப்பல்கள் சீமைக்கப்பல் மூணும் புதுசுக்கொடி

போட்டு முசே .லகத்திலே வந்த கப்பலொன்று ஆக நாலு கப்பல் களிலும் யிருபத்தோரு பிரங்கி விழுக்காடு சுட்டார்கள். அப்பால் பிரார்த்தனை ஆனவுடனே சங்கீதம்பாடி வீணை முதலான வாய்த்தி யங்கள் வாசிச்சு உடனே துரையவர்கள் முதலான பேர்கள் சமஸ்தமான பேர்கள் கொவர்னமா வந்து சத்துருக்களுக்கு அப செயமும் உமக்கு செயமும்வுண்டான நாளானபடியினாலே சத்துரு வந்து பட்டணத்தைப் பிடிக்க வந்தவனை செயிச்சு துரத்தின தினமென்று துரை அவர்களுக்கு முபார்க்கு பாதி சொல்லி அவரவர் அனுப்பிவிச்சுக் கொண்டு யென்காசாகச்சேரியே வந்தேன். ஆக ரெண்டு கப்பலின் பேரிலே யேறின யிவ்வடத்து வெள்ளைக்காறர் பேர் வயணமாவது.

## 1753௵ ஒயித்தோபர்மீ 19௳ ஸ்ரீமுகஆ அற்பிசி 7௳ சுக்கிறவாரம்

காரைக்காலிலே துரைத்தனம் பண்ணினவனும் ஊரைக்குட்டிச் செவராக்கி கும்பினியாருக்கு துரோகம் பண்ணி அஞ்சாறு லட்சம் ரூபா சம்பாதிச்ச முசே ரிஷி—1 சீமையிலிருந்து யிவ்விடத்திலே வியாபாரம் பண்ண வந்திருந்த முசே அலவரெசு என்கிற தட்டான்-1 முசே மிரியோம் என்கிற ஒபிசியால் கோல்கொண்டை அயிதராபாத்து அபரங்காபாத்துக்கு முசே புசி வகையிராக்கள்—நம்முடைய பிறன்சு பவுன்சு கூட சலாபத்துசங்கு அண்டையிலே போயிருந்து லக்ஷக் கணக்காய் சம்பாதிச்சு யினி அகப்படுகிறச ஈடை காணாதபடியினாலே யும் விசேஷிச்ச பதார்த்தம் கையிலே அகப்பட்டத்திலேயும் சீமையிலே போய்நிலமாவது தோட்டமாவது ஒரு உத்தியோகமாவது விலைக்கு வாக்கிக் கொண்டுமகள் மனுஷருடனே கூட சுகமா யிருக்கலா மென்று யோசனை பண்ணிக்கொண்டு யேறிப்போற முசே மறியாம் (Mr. Marion) என்கிறவனொருத்தன் முசியே விலியோ (Mr. Villion) மென்கிறபேருடையவனொருத்தன் யிதல்லாமல் முசே திலார்சுவினுடைய பிள்ளையொன்று பின்னை— பேர்விளங்கன் பிள்ளை யொன்று—பின்னையொரு பேர்விளங்கன் பிள்ளை யொன்று பின்னையும் ரெண்டொரு பேர்கள் ஒபிசியால்கள் பேர் சொன்னார்கள். சீமையிலே யிருந்து ஆம்படையான்யிருக்கிறா னென்று வந்தவிடத்திலே ஆம்படையான் போன வருஷம் முசே செற்சாம் சண்டையிலே கிறுமாம்பாக்கத்து சண்டையிலே யிங்கிலீசுக்காறர் கையிலே அடிப்பட்டதில் ஒபிசியாவிலே முசே கிறித்தியேன் (Mr. Chretiens) என்கிறவனுடைய பெண்சாதி வந்த விடத்திலே முசே கிறித்தியான் என்கிறவன் சண்டையிலே செத்துப் போன படியினாலே மறுபடியும் சீமைக்கிப் பிள்ளையும் தாயும் ஏறிப்போனார்கள்

இதல்லாமல் யின்ன மொருகப்பல் தெரேசுக்காந்தோ ரென்கிற பேருடையது (Triez Cantonus) சீமைக்குப் பயணமாய்ப் போகப் போகுது. அந்தக் கப்பலுக்கு நானூத்துச்சில்வானம் கட்டு ஏத்திப் பயணமாய் மயேயிக்கு (Mahe)ப் போய் மயேயிலே மிளகு ஏத்திக் கொண்டு சீமைக்குப் போறதாய் ஒன்பதாந்தேதி பத்தாந் தேதி பயணமாய்ப் போறதாய் ஒரு கப்பல்யிருக்குது.

## 1753ஸு ஓயித்தோபர்மீ 22உ ஸ்ரீமுகஸு அற்பிசிமீ 10உ சோமவாரம்

இத்தநாள் முராரிராயனுக்கு வெகுமானமாக அஞ்சேகால் முழம் ஆனை ஒன்றும் குதிரை ரெண்டும் சிரொப்பாவும் சிரங்கத்துக்கு அனுப்பினார்கள்,

அசனுத்திக்கானை துரையவர்கள் அழைச்சனுப்பிவிச்சு குதிரைக் காறர்களையும் பாறுக்காறர்களையும் வைக்கவேணும் என்று சொன்ன துக்கு அசனுத்திக்கான் சொன்னது வேலூர் கோட்டைக்காறன் முறுத்து சல்லிக்கானை யிந்த மட்டுக்கும் நம்முடைய பக்கத்திலே யிருந்து மமுதல்லிக்கான் யிங்கிறசுக்காறர் பேரிலே துவேஷிச்சு அவர்கள் பேரிலே சண்டை பண்ணிக்கொண்டு வந்தான். அவனிப்போ மமுதல்லிக்கான் யிங்கிலிசுக்காறர்களுக்கு அனுகூலமாய் பேஷ்க்சு (Pesh kush) பணமும் ஒப்பி சிறிது பணம் குடுத்து தன்னண்டை யிலே யிருந்த குதிரைக்காறர்களையும் பாறுக்காறர்களையும் கற்நாட்டக சேவுகரையும் தள்ளிப்போட்டு, விடுகிறானென்று கபுறு வந்தது. அவர்களுக்கு சம்பளமும் நிகுதி பண்ணி நீங்கள் கவில் கொடுத்தால் அந்தக் கவிலை அனுப்பிவிச்சு அழைப்பிக்கலாமென்று சொன்னதுக்கு குதிரைக்காறர்களுக்கு முப்பது ரூபாயும் பாறுகாரர்களுக்குப் பதி ஞருரூபாய் விழுக்காடு எவ்வளவு செனம் வந்து சேர்ந்தாலும் வைத்துக் கொள்ளுகிறோம் யென்று தொரையவர்கள் கவில் எழுதிக் கொடுத்தாப் போலேயும் யிருக்கு. சிப்பந்திக்காறர்களுக்கு குடுக்கிற துக்குப் பணம் வேணுமே யென் கையிலே ஆனால் பணம் யில்லை றத்தினங்களும் நகைளும் தாரேன் என்று மூணுலட்சம் ரூபா கொடு வென்று கேட்டாராம். அதுக்கு அசனுத்திக்கான் சொன்னது யெனக்கு அவகாச முண்டானால் யிருக்கிற தட்டு முட்டுகளை குதிரைகளை வித்து சாப்பிடுவானோ அது யெனக்கு அவகாசமில்லை யென்று சொன்னானும் அதன் பேரிலே பட்டணத்துக்குள்ளே யிருக்கிற வர்த்தகர்கள் போய்க் கண்டு பேசு யென்று துரையவர்கள் சொன்னாராம் அதுக்கு அசனுத்திக்கான் சொன்னது நேத்து மகம்மது கமால் சாவுக்கு மூவாயிரம் நாலாயிரம் ரூபா வேண்டி அடகு வைக்குறோம் யென்று திரிஞ்சால் ஒருத்தரும் யில்லை யென்றார்கள் அப்பால் டங்காசாலையிலே வித்துப் போட்ட சிலவு நடத்தினோம். ஆனபடியினாலே பட்டணத்துப் பருவம் யிப்படியிருக்கு தென்று சொன்னதுக்கு குண்டூர்பாலி செட்டி குச்சனுத்திகாறருடைய குமாஸ்த்தாக்களிருக்கிறார்கள் அவர்களை அழைப்பிச்சுக்கண்டு பேசிப்பாரேன்று அப்பால் துரை பெண்சாதி யும் அசனுதிக்கானைப்பார்த்து அப்படித்தானே சொன்னாளாம் அதன்பேரிலே அசனுத்திக்கான் மகா சின்ன நாய் வீட்டுக்கு வந்து கோவற்த்தனதாசு-குமாஸ்தா திம்மண நாயக்கனை மகாசிதாசு புக்கண்சிகுமாஸ்தா ஆசாரம் தறுவாடிவல்லபு சுந்தர் குமாஸ்தா நாகண்ணநாயக்கனையும் குண்டூர் பாலிசெட்டியையும் அழைப்பிச்சு றத்தினங்களும் ரத்தின நகைகளும் வைக்குறோம் ரெண்டு மூணு லட்சம் ரூபா போதும் யென்று. கேட்டதாகவும் அவர்கள் உண் டிக்கை எழுதினால் பணத்தைக்கூட கட்டி அனுப்பிவிப்பார்கள்

அதை செலுத்திப்போட்டு உண்டிக்கை காகிதத்தை அனுப்பி விடுவோம் அது நிமித்தியம் நாங்கள் யிருக்கிறதேயல்லாமல் பின்னை யேதாகிலும் வைத்துக்கொண்டு வியாபாரம் பண்ணுறோமா ஆருக்குங்கெரியாகா ஆனபடியினாலே யெங்கள் கையிலே அகப் படாதென்று சொல்லிப்போட்டுப்போனார்களாம்.

அந்தச் சேதியை துரையவர்களுக்கு நீபோய் சொல்லென்று தோஸ்து மகமதுடனே சொல்லி அனுப்பி தானும் நாளைப்போய் சொல்லிப் போடுறேனென்றும் யிருக்கிறதாய்ச் சேதி சொன் னார்கள்.

1753௵ ஒயித்தோபர்மீ 24௳ ஸ்ரீமுகஸ்ரீ அற்பிசிமீ 12௳ புதன்கிழமை இத்தனாள் ராத்திரி துரையவர்களுடைய பெரிய ஆனை உசேன் சாயபு ஏறி சண்டை பண்ணின உசேன் சாயபு செத்தான் அந்த ஆனை யிருபதினாயிரம் ரூபாய் பெரும் வெங்கிடா சலம் யென்று பேருடையது ஏழுமுழ உசரம் உண்டு. அந்த ஆனை இராத்திரி சாமத்துக்குள்ளே எமனுடைய பட்டணத்தை அடஞ்சு தென்று வந்து கபுறு சொன்னார்கள்

1753௵ ஒயித்தோபர்மீ 25௳ ஸ்ரீமுகஸ்ரீ அற்பிசிமீ 13௳ குருவாரம்

இத்தனாள் தீபாவளிபண்டிகை கேதாரிசுவரன் நோன்பு ———————————— நேத்தயதினம் புதவாரம் முசே மேசேன் திரிச்சிராப்பள்ளி தண்டிலேயிருந்து வந்தவனை துரையவர்கள் கோயித்துக்கொண்டு சண்டை செய்ய வேண்டிய விதமாம்படியே செய்யாமல் தண்டை முழுகடிச்சுப் போட்டீர்களென்றும் தம்மண்டைக்கு வரவேண்டாமென்று சொன்னார்கள்.

1753௵ நொவெம்பர்மீ 6௳ ஸ்ரீமுகஸ்ரீ அற்பிசிமீ 25௳ மங்களவாரம்

இத்தனாள் காலத்தாலே துரையவர்களண்டைக்குப்போய்க் கண்டவிடத்திலே ஆசாரம் பண்ணினேன் அவர் பந்தல் போட் டிருக்கிற நேர்த்தியைப் பார்த்தாயாவென்று கேட்டார். வெகு நேர்த்தியாயிருக்கிறது வெகு ஒசத்தி யிந்த உசத்தி ஒருத்தரும் போட்டதில்லையென்று சொல்லி நடுக்கம்பம் ரெண்டுக்கும் குறுக்கு பெரிய கம்பமாய்த்தானே போட்டது புதுசாய் வந்த காச்சுப் பளிங்கிலே செய்த சாதி அடி யெட்டடி ஒசத்தியிலே செய்திருக் கிற விளக்கு கூண்டு கட்டுகிறதுக்கு யோசனையாய் செய்தாப் போலேயிருக்குதுயென்று சொன்னதுக்கு மெய்தான் யெத்தனம் பண்ணினால் அப்பால் காரியத்துக்கு தக்கதாய் செய்வோமென்றுப் போலே நினைத்திருக்கிறேன் என்று சொல்லிக் கொண்டே முசே பெடுத்திராம் காம்பிறுவிலே போயிருந்து அங்கேயிருந்து மேல் வீட்டின்பேரிலே யேறிப்போனார் நாவங்கேயிருந்தும் பிடவைப் பார்க்கிறசாலையே வந்து அப்பாவென்காசாக்கச்சேரியே வந்து

மணக்குளத்தங்கரைப் பிள்ளையார் கோயிலண்டையிலே போட்டிருக்கிற பந்தலிலே உள்கார்ந்து கொண்டிருக்கச்சே முசே யிஸ்தாபர் (Mr. Estaber) யென்கிற கப்பல் பாதிரியார் வடக்கேயிருந்து தெற்கே பல்லக்கின்பேரிலே போறவர்யென்னைப்பார்த்து பல்லக்குவிட்டிறங்கி என்னண்டைக்கி வந்து முசே துவலேயர் (Mr. Duvelear) காகிதம் ரெண்டுமூணு உமக்கு வந்துதே அவர் கும்பினீர் நெரேக்குதேரிலே (Director) அவர்பேச்சுக்கிமே மத்தப் பேர் பேச்செல்லாம் அடங்கிப்போறதேயல்லாமல் யிவருக்குச் சரியாய் உத்திரஞ்சொல்லப்போகாதென்று சொல்லி அப்படிப்பட்டவர் உம்முடபேரிலே வெகுபட்சமாயிருக்கிறார் வறுகிற வருஷத்துக்கு அவரைக்கொண்டு உமக்கு வெகுநன்மையுண்டு அதெப்படியென்றால யென்றுடனே சொன்னார் முசே துப்பிளேயிக்குசு பங்காளத்திலேயிருந்து புதுச்சேரி துறைத்தனத்துக்கு வந்தவுடனே அவர் செய்த காரியமெல்லாம் றங்கப்பிள்ளைவசம் பண்ணிப்போட்டபடியாலே நாசறுசங்கு சாகுற வரைக்கும் சகல காரியங்களும் சேகரம் பண்ணிக்கொடுத்துதுமல்லாமல் யிவருக்கும் பிறன்சு வமுசத்துக்கும் கீர்த்தி சூரியப் பிறகாசம் போலே விளங்கப் பண்ணிவிச்சதுமல்லாமல் கும்பினிருக்கும் முன்வறத்தகமேயல்லாமல் வேறேயில்லை அப்படியிருந்தும் கும்பினிருக்கு பதினைந்து லட்சம் ராச்சியம் பந்தர் முதலான சிமையெல்லாம் வுண்டாக்கி ராச்சிய பாரம் பண்ணத்தக்கினவர்கள் யெண்ணிபிச்சவனை முசே துப்பிளேயிக்சு யென்னத்தினாலே தள்ளிவிச்சு பெண்டாண்டி வழியிலே விட்டு சென்னப்பட்டணத்திலே பிஷ்ஷையெடுத்துக்கொண்டு திறிஞ்சு திருடி காவலிலே வைத்தும் விலங்கும் போட்டும அடிச்சும் சனம் தாரம்பிய மாய் வமுசவமுசமாய் திருட்டுப் பிழைப்பு பிழைச்சவனை அழைச்சு சீமாமல் காறு பாறுயெல்லாம் அவன் வசம் பண்ணி முன் சம்பாதிச்ச கீர்த்தியை போக்கடிச்சுப் போட்டு அபகீர்த்தி சம்பாதிச்சு திரவியமும அப்படித்தான் ராச்சியமும் அப்படித்தான் யிப்படி யேன் செய்தான் யிவனென்ன சுதந்திரனாயி யிவன் ஒருத்தருடைய சாகிரியோ பின்னை யேதாகிலும் உண்டோ? யிப்படி யேன் நடப்பிச்சு காரியங்களெல்லாம் மெடுத்துப் போட்டான் யென்று முசே துவலோர (Mr. Duvelar) சொன்ன பேசுச்சுகளெல்லாம் சிறிது விஸ்தரிச்சு சொன்னான் அதையெல்லாம் எழுதினால் ஒருதருக்கும் மெய்ப்படவும் செப்பாது யெழுதவேணுமென்றால் யிருபது முப்பது காகிதங்கள் பிடிக்கும் ஆனபடியினாலே பின்னையும் பட்டணம் கெட்டுப்போனதும் பட்டணத்து அழுவெல்லாம் பேபந்தாய்ப் போச்சுது.

யிவர்கள் வைபத்தாயிருக்கிற ராச்சியமுமப்படித்தான் யிந்தப்படி பெண் பெண்சாதி காறுபாறு யிந்த ராச்சியத்திலே யெங்கேயாகிலும் கேளாத காரியம் புதுச்சேரியில் வந்து கேழ்க்கவேண்டி வந்துது என்று சொலவி யிதுகளெல்லாம் வருகிற வருஷத்துக்கு சகலமும் உம்முட பாரிசமாய் நடப்பிச்சுக்கொள்ளச்சொல்லி ராசாவினுடையமினிஸ்தர் கொந்திரோலர் சனராலுடைய உத்தாரம் கூட வருகிறது அப்போ யென் பேச்சு உமக்கு மெய்யாயிருக்கும் யென்று சொன்னான். யிதுவுமல்லாமல் முசே தொத்தேல அனுப்பிவிச்சாரே அவன்தான் யிவருக்குச் சத்துருவு அவன் யிவருக்கு அமுல் செய்யத் தெரியாது தொரைத்தனம் பண்ணத் தெரியாது என்றுகூட யெழுதி தீத்துப் போட்டு யிவர் வசமாய் கொஞ்ச நாளிருந்தால் கும்பினியர் புதுச்சேரியை யிழந்தும்

போவார்களென்று யெழுதின காகிதம் தொரைத்தமையனுா் குமாரன் தானே பார்த்தான் அநுக்கு சவ்வாது அனுட்பிஞனு என்னமோ தெரியாது யிதல்லாமல் யிந்த வூரிலே யிருக்கிற கோன்சேல் காறர் வகையிராக்கள் வெள்ளேக்காறர் வெள்ளேக்காறச்சிகள் வகை யிரா சிமைக்கு வந்து யெழுதுகிற காகிதங்களெல்லாம யிவர் பெண் சாதியின் பேரிலே பிருது யெழுதுகிறவர்களேயல்லாமல் வேறிலெ சிமைக்கு வருகிற கப்பல் கப்பித்தான் முதல் மத்தலோது கடைசியாக மதாம் துப்பிளேயிக்கு கும்பினியை முழுக்கடிச்சுப போட்டவென்கிற கூக்குறல் பிறான்சு ருச்சியம் ஒலாந்து– இங்கிறேசு ருச்சியம்கூட பரவிப் போச்சுது யென்று யிந்த வூரிலே நடந்த சங்கதிகளெல்லாம் நமக்குத் தெரியாததுகூட அவர் சொல்ல யெனக்கு ஆச்சரியமாச்சுது. யிது ரெண்டு மணி தேச காலம் பேசியிருந்து போனுர் அதிலே யெனக்கொரு சந்தேகமாச்சுது யென்ன யென்றுல் சிமையிலே நான் வந்து சேர்ந்து காரியம் பார்க்கத் துவக்கின பிற்பாடு ராச்சியங்கள் வந்ததும் சகல சத்துருக் களேயும் செயிச்ச சமமதிகளும் யென்னே பிரமபு பண்ணி துரை பெண்சாதி தானே காரியம் பார்க்கத் துவக்கின பிர்ப்பாடு காரியங்கள் கெட்டுபபோச்சென்கிறதும் கோந்திரோலர் செனருல் தெ–ஒபிஞசென்கிறவர் முதலாய் கும்பினியார் பின்னேயும் பாரீசு பட்டணத்திலுண்டான பேர்கள் தொரைமுகமாகிய வேரியாமிலே கூட அறிஞ்சு பிறபலமாய்ப் பேசிக்கொள்ளுகிருர்களே அந்த ராச்சிய மெல்லாம் வந்தாப்போலே ஆச்சுதென்று யெண்ணிக்கொண்டேன் லோகத்துக்குள்ளே செய்த காரியம் யெசமான்களாயிருக்கிற கும்பினியாரும் அவர்களுக்கு யெசமான்களாயிருக்கிற மினிஸ்தரு, களும் அறிந்திருந்தார்களே ஆனுல் அதைவிட சந்தோஷமென்ன யிருக்குது யிதுவரைக்கும் நானெண்ணிக்கொண்டிருந்தது நாமிந்த உத்தியோகத்துக்கு வந்த உடனே இங்கிலீசுக்காறர் கலகம் துடந்து கொண்டிருந்து அப்பால் சென்னப்பட்டணம் வாங்கி யிங்கிலீசுக்காறர்களே செயிச்சு அப்பால் மொகலாய ஆற்காடு சுபா அன்வறதிகானே செயித்து அப்பால் நாசறு சங்குவை தக்கண பாதுசாவாக வந்தவனே செயித்து யிதாயித்து மொசுதின்கானேப் பட்டங்கட்டி அப்பால் சலாபத்து சங்குவை பட்டங்கட்டி சமஸ்த ராச்சியமும் கைவசம் பண்ணிக்கொண்டு தொரைக்கி சந்தோஷம் பண்ணிவிச்சு உடனே சாப்பிடுறதுக்கு முசே திலார்ஷசு பிறப்பட்டு சாப்பிட்டார். அப்பால் அவரைத் தள்ளி மதாம் துப்பிளேயிக்சு பிறப்பட்டாள் உத்தாரத்தில் தோட்டி சக்கிலிகூட பிறபுத்வம் பண்ணத் தலேப்பட்டு சமஸ் தானத்தை பாழாக்கடிச்சு அபகிறத்திக் கொண்டுவந்து விட்டதை சிமையிலே ஆருயிரக் காதவழியிலே ஆர்சொல்லப் போருர்க ளென்று யெண்ணிக் கொண்டிருந்ததுக்கு நாம் அரியாத பேச்சு கூட சிமையிலே அறிந்து அங்கே பிறசங்கமாய் நடக்குதென்றுல் யிதைவிட சந்தோஷமென்ன யிருக்குது. யின்னம் அந்தபாதிரி யேன் பிறஸ்தாபம் ராசாவண்டையிலே கூட ஆச்சுதென்றும் மூசே துவல்ரு (Mr. Duveleau) கோந்து ரோலர் செனருலாகிய முசே மஷேவு அவருக்கு ரெண்டாவது முசே மோந்தார்மு (Mr. Mond r n) டைய சபையிலே ஆறேழு பத்துதரம் பிரஸ்தாபம் பண்ணினு ரென்று சொன்னதுவும் நான் விஸ்தாரமாய் யெழுதயில்லே. யென் காரியத்தை நான் தானே விஸ்தரிச்சு யெழுதுகிறதல்ல வென்று சூட்சமமாய் யெழுதிவைத்தேன் ·— — — —

## 1753௵ நொவம்பர்மீ 10௳ ஸ்ரீமுகவருஷம் அற்பிசிமீ 29௳ சனிக்கிழமை

இதல்லாமல் சாவுக்காறர்கள் துக்காணங்களுக்கு யெழுதிவந்த சேதி நான் கேழ்விப்பட்ட தென்னவென்றால்—பாசிராயனுக்கும் தாராபாயிக்கும் அனுகூலிச்சு யிருந்தது. மறுபடி பிகாடிச்சு அதன் பேரிலே தாராபாயி சலபத்து சங்குவுக்கு அஞ்சுலட்சம் ரூபாய்க்கு உண்டிக்கை வாங்கி அனுப்பி ராசிராயன் பிறபலமாய் யெங்கள் சமஸ்தானம் ஆக்கிரமிச்சுக் கொண்டு உங்கள் துலுக்க சமஸ்தானத்தையும் ஆக்கிறமிச்சுக்கொண்டு சகல ராச்சியாதிபத்தியமும் தான் பண்ணவேணுமென்று பிறபலமாயிருக்கிறான் ஆனபடியினாலே நீரும் நானும் யேகோபவிச்சு யிருந்து பாசிராயனை அடிக்க வேணும் அதுக்காக உமக்கு சிலவுக்கு அஞ்சு லட்சம் ரூபாய் அனுப்பிவிச்சுப் போட்டோம். யிதைச் சிலவு பண்ணிக்கொண்டு தோப்புக் காறுவகை பிரா பவுன்சை சபுறு தஸ்து பண்ணிக் கொண்டு வந்தால் யெங்களண்டையிலேயும் யிருபது யிருபத்தையாயிரம் குதிரை யிருக்குது. யிதையும் அனுப்பிவிக்குறோம் யிந்த பவுன்சையும் கூட்டிக்கொண்டு நீர்போய் பாசிராயனை சங்கரிச்சுப் போடவேணுமென்று யிந்தப்படிக்கு யெழுதி அனுப்பிவிச்சதாயும் இதுக்கு சானேசி நிம்பளக்கார் பாசிராயனுக்குப் பிறத்தி கட்சியாயிருந்து சலாபத்து சங்கு வுடனே தாராபாய் யெழுதி அனுப்பிவிச்சு படிக்கி நீர் நடப்பிச்சிரானால் நானும் கூடயிருந்து யின்னம் சிறிது பவுன்சு சேகரிச்குறேன். யேகத்துக்கு பவுன்சை கூட்டிக் கொண்டுபோய் பாசிராயனை வெட்டிப்போடுவோமென்று சொன்னதாவும் அந்தப்படிக்கி சலாபத்துசங்கு அந்த அஞ்சுலட்சம் ரூபாயும் வாங்கிக்கொண்டு தோப்புக்காறு வகையிரா பவுன்சை கூட்டிக் கொண்டு பாசிராயன் பேரிலே சண்டைக்கிப் போறதாய் சேதி கேழ்க்கப்பட்டது.

பாசிராயன் தாராபாயிக்கி சொல்லி அனுப்பிச்ச உத்திரம் நீயானால் சத்துருவுக்கு யிடம் குடுத்து உன் விட்டை நீ போக்கடிச்சுக் கொள்ளுகிறாய் நான் ஏதாகிலும் சுவாமி துரோகம் பண்ணயில்லை. நான் உங்களுடைய பிரகானி எண்பிச்சுக்கொண்டு உங்களுக்கு சகல கீற்த்தியும் வரும்படியாய் யெதிரியாளாயிருக்கிற துலுக்கருடைய ராச்சியங் கட்டுகிறதும் அவர்களுக்கு பெலகீனம் பண்ணிக்கொண்டு வருகிறேனே யல்லாமல் உங்கள் ராச்சியம் கட்டயில்லை பூமி கட்டயில்லை நான் அப்படி உங்களுக்கு பிறதிஷ்ட்ட வருங் காரியத்திலே யிருந்தால் அந்த யோசனை நீ மனதிலே யெண்ணாமல் யெதிரிகளுக்கு யிடங்குடுத்து தாரம் விசாரியாமல் உன் வீட்டை நீ போக்கடிச்சுக்கொண்டு போனாய் யென்லலாடத்திலே யெப்படி யெழுதி யிருக்குதோ அந்த விதிதப் படிக்கி எனக்கு சகல காரியங்களும் நடந்தேறிப்போமே அல்லாமல் ஒருத்தராலே ஆகவேண்டிய தென்ன இந்த சலாபத்து சங்குவினாலே யும் பாதுசாவினாலேயும் உங்களாலேயும் பின்னையாதா மொருவரானாலேயும் செய்ய வேண்டியதென்ன யிருக்குது. ஆனால் நீயென் பெண்சாதியானபடியினாலேயும் தாரம் விசாரியாமல் காரியம்

நடந்துகிறபடியினாலேயும் யெழுதியனுப்பிவிச்சோம் அப்பால் உனக்கு சரிப் போனபடி ஆனால் யெந்த காரியமும் தூரம் விசாரிச்சு நடந்துகொள்ளச் சொல்லி காகிதமும் யெழுதி அதுக்கேத்த பெரிய மனுஷரையும் கூட்டி தாருபாயண்டைக்கி அனுப்பிச்சதாய் சாவுக்காறர்களுக்கு யெழுதிவந்த சேதியை எழுதிவைத்தேன்.

## 1753௵ நொவம்பர்மீ 23௳ ஸ்ரீமுக௵ கார்த்திகைமீ 10௳ புதவாரம்

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதியென்னவென்றால் உத்திர மல்லூருக்கு யிவ்விடத்திலிருந்து பவுன்சு கூட்டிப்போன சினயோர் கிறெசு என்கிற (Senhor de Gruz) புடுதிக்கிசு ஒபிசியாலுப பணிரெண்டு பேர் சொலுதாதுகளும் ராமலிங்கய்யன் என்கிற பாறுக்காறர்களும் மணியக்காரனும் போனவிடத்திலே இங்கிலீசுக்காறா அவ்விடத்திலிருந்தவர்கள் யிவர்கள் பவுன்சும் பேரிலே வந்து விழுந்து அடிச்ச மாத்திரத்திலே யிவர்கள் முறிஞ்சபடியினாலே அவர்கள் யிந்த பவுஞ்சுக்கு யெசமானாகப்போன கிறைசுப் பென்கிறவன் தலையைவெட்டிப் போட்டு பனிரெண்டுபேர் சொலுதாதுகளையும் கொன்றுப்போட்டு அப்பால் பாறுக்காறர்கள் செத்தவர்களும் காயப் பட்டவர்களும் அவர்கள் கையிலிருக்கப்பட்டவர்களும் போக மத்தபேர் அந்த நாலூறு துப்பாக்கி வகையரா சாமான் அவர்கள் கையில் ஒப்பிச்சுப் போட்டு ராமலிங்கய்யனென்கிறவன் கூட ஓடிவந்து விட்டதாகவும் யிந்த சேதி துரையவர்களுக்கு யெப்படி சொல்லுகிறதென்று ஆலோசனை அவர்களை அவ்விடத்துக்கு சண்டைக்கி அனுப்பி விச்ச சேதியே சொல்லாமல் மதாமுடனே மாத்திரம் சொல்லியிருந்த படியினாலே யிந்த சேதி வந்ததுக்கு ரெண்டு மூணு நாளாய் மதாமுடனே சொல்லுகிறதுக்கு மிலலாமல் யிந்த நாள் சாயங்காலம் வரைக்கும் துரையவர்களுடனே சொல்லயில்லை யென்று சேதி கேழ்க்கப்பட்டது.

## 1753 ௵ நொவம்பர்மீ 24௳ ஸ்ரீமுக௵ கார்த்திகைமீ 13௳ சுக்கிரவாரம்

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி திரிச்சிராப்பள்ளி மமுதல்லிக்கானும் மத்தத்தாக பதினாயிரம் குதிரை சுவார்களை அனுப்பிவிச்சதாகவும் அந்த சுவார்கள் வந்து கருஷ்ணகிரத்திலிருந்தாப்போலே மயிசூர் சீர்மை கொள்ளையிட்டுக் கொண்டு திரிச்சிராப்பள்ளிக்கி மமுதல்லிக்கானண்டைக்கிப்போய் சேருகிறதாயும் அந்த கபுறு அறிக்கைப் பண்ணுகிற நிமித்தியம் ஒரு வைக்க லொருத்தன் ஆற்காட்டுக்கு அப்துல்வகபுக்கான் அண்டைக்கி வந்து சேர்ந்து கண்டு பேசியிருக்கிறான் யென்றும் அவன் பிறகேயிருந்துவந்த பிராமணன்-யிவ்விடத்திலே வந்து சொன்னான். யென்று சிறிது அவனைக்கண்டு பேசினவர்கள் யென்னுடனே வந்துசொன்னார்கள்.

## 1753௵ நொவம்பர்மீ 30௳ ஸ்ரீமுக௵ கார்த்திகைமீ 16௳ சுக்கிரவாரம்

இத்தனாள் துரையவர்களுக்கு முசே புசி (Mr. Bussy) காகிதம் கொண்டு கொண்டு சோடாவந்ததாயும் அந்த சேதி சலாபத்துசங்கு முசே புசியையும் நம்முடைய பிருன்சு பவுன்சையும் அயிதராபாத்திலே யிருந்தவர்களை பிறப்பட்டு மச்சிலிபந்தருக்குப் போகச்சொல்லியும் நாங்க மச்சிலிபந்தருக்கு — உங்களுக்கு யெழுதி யனுப்பிவிச்சும் மயிசூரந்தப் பிராந்தியங்களுக்கு வருகிறோம் அப்போ வேணுமென்றால் உங்களையும் அழைச்சுக் கொள்ளுகிறோம் யென்று யெழுதி அஞ்சுலட்சம் ரூபாயிக்கி அயிதராபாத்தின் பேரிலே தனக்கா யெழுதி அனுப்பிவிச்சதாயும் அந்த ரூபாயை வாங்கிக் கொண்டு வரச்சொல்லி — சிறிது சொலுதாதுகளையும் பாறுக்ககாறர்களையும் வைத்துப் போட்டு யிறநூறுபேர் வெள்ளைக் காரர்களுடனே பிறப்பட்டு முசே புசி மச்சிலிபந்தருக்கு வரத்தக்கதாக அயிதராபாத்து விட்டு பிறப்பட்டு நாலும் மச்சிலி பந்தருக்கு யிப்பறம் வந்ததாய் சொன்னார்கள்.

## 1753௵ தெசம்புறுமீ 1௳ ஸ்ரீமுக௵ கார்த்திகைமீ 20௳ சனிவாரம்

இத்தநாள் மத்தியானம் மூணு மணிக்கு கேழ்விப்பட்ட சேதி யென்ன யென்றால் திருச்சிராப்பள்ளி தண்டுக்கு கொம்மாந்தா மாயியிருந்த முசே அஸ்துருக்கு (Mr. Astruc) வை முன் பிறட்டாசி மீ 8து சண்டையிலே யிங்கிறேசுக்காறர் மமுதல்லிக்கான் மனுஷர் பிடிச்சுக் கொண்டு போய் திருச்சிராப்பள்ளிக் கோட்டை யிலே போட்டுக் கொண்டிருந்தார்களே அந்த முசே அஸ்துருக்கு திரிச்சிராப்பள்ளி கோட்டை வாசற்படியிலே யிருக்கிற யிங்கிறேசுக்காறர் மனுஷர் மமுதல்லிக்கான் மனுஷருடனேயும் அவர்களுக்கு அன்பதினாயிரம் ரூபாய் கொடுக்கவும் வெளியிலே யிருந்து நம்முடைய பிருன்சுக்காறர் பவுன்சும் முசே மென்வேல் (Mr. Manville) யென்கிற - கொம்மாந்தாமும் வந்தால் சண்டை பண்ணுகிற சாடையாய்ச் சண்டைபண்ணி அப்பால் பின்வாங்கி கோட்டை வாசற்படி திறந்து விடத்தக்கதாகவும் அப்படி பெசிக் கொண்டும் அப்பால் வந்த சேதிக்கி முசே அஸ்துருக்கு முசே மென்வீலுக்கு எழுதிக் கோட்டை வோரத்துக்கு வரச்சொல்லி யும் யிந்தச்சேதிக்கி முராரிராயன் — நந்திராசா வகையிருக்களுடனே சொல்ல வாண்டாம் யென்றும் யெழுதியனுப்பி விச்சதாகவும் அந்தப்படிக்கி முசே மென்வீல் தன் சொலுதாது பவுன்சும் பாறுக்காறர் வகையிராக்களை முஸ்தீத்து பண்ணிக்கொண்டு நந்திராசா முராரிராயனுடனேயும் சொல்லாமல் யின்று நாலாம்நாள் ராத்திரி போய் கோட்டையோரஞ் சேர்ந்தவுடனே கோட்டை வாசற் படியிலே யிருக்கிற மமுதல்லிக்கான் தாலுக்கு மனுஷர் பிறப்பட்டு சண்டைபண்ணி அப்பால் பின்வாங்கி — கோட்டை வாசற்படியே திறந்து விட்டதாகவும் அப்பாலிவர்கள் கோட்டை வாசற்படி யுள்ளே நுழைந்து அந்த சேதிக்கி நந்தி ராசாவுக்கும் முராரிராய னுக்கும் முசே மென்வீல் யெழுதி அனுப்பினதாகவும் அப்பாலிவர் களும் பவுன்சுடனே பிறப்பட்டு சிந்தாமணியே போய் சேர்ந்த

சேதிக்கி பாப்பையப்பிள்ளை வக்கீலாக அவ்விடத்திலிருக்கிற பாளாசி பண்டிதன் பாப்பையப்பிள்ளைக்கி — எழுதி ரெண்டு பேர் சேவுகர் கையிலே குடுத்தனுப்பிவிச்சதாகவும் அந்தக் காகிதம் வந்து சேர்ந்து பாப்பய்யபிள்ளை துரையவர்களண்டைக்கிப் போய்ச் சொன்ன துக்கு துரையவர்கள் சந்தோஷப்பட்டு சேதிகொண்டு வந்த சேவுகருக்கு ரெண்டுபேருக்கும் ரூபாய் நூறும் குடுத்து யெழுத்துப் பாகையும் இனும் கொடுத்ததாகவும் அப்பால் பீரங்கி மேஸ்திரியை அழைப்பிச்சு பீரங்கி வேட்டு சுடுகிறதுக்கு பீரங்கிகளிலே மருந்து போட்டு கெடிச்சு முஸ்தீது பண்ணி விக்கச் சொல்லியும் கொடி போடச் சொல்லியும் உத்தாரங் கொடுத்து கோன்சேல்காறர்— பாதிரிமார்கள் முதலான பெரிய மனுஷருக்கும் சொல்லி அனுப்பி விச்சு அப்பால் சலாபத்துசங்குவுக்கும் முசே புசிக்கும் மச்சிலிபந்த ருக்கும் மயே முதலான றேவுகளுக்கும் யெழுதி அனுப்பிவிச்சார்கள் என்று சொன்னார்கள்.

மேலே யெழுதப்பட்ட சேதிக்கி சாயங்காலம் வரைக்கும் கொமாந்தாமாகிய முசே மென்வில் காகிதம் வராதபடியினாலே வந்த பிறகு ஆகுதென்று கொடிபோடுறதும் பீறங்கி போடுறதும் மோகப்பு பண்ணுகிறார்கள். அப்பால் துரையவர்கள் சீமையிலி ருந்து வந்த புதுச்சேரி சங்கீதக்காறர்களை அழைப்பிச்சு 'சாயங் காலம் துவக்கி சங்கீதம் யெட்டுமணி மட்டுக்கும் சங்கீத வாய்த் தியங்களை வாசிப்பிச்சு ஆன பிறப்பாடு சாப்பாட்டுக்கு யெத் தனம் பண்ணி சாப்பிட்டான பிற்ப்பாடு அவரவர் அனுப்பிவிச்சுக் கொண்டு போனார்கள். துரையவர்களும் படுத்துக்கொள்ளப் போன பிற்பாடு ஒன்பதரைமணிவேளைக்கி திருச்சிராப்பள்ளி யிலேயிருந்து பாப்பய்யபிள்ளைக்கி காகிதம் வந்தது அந்தக் காகிதம் கொண்டுபோய் ராத்திரி பத்துமணிக்கி படிச்சுக்காண்பிச்சுக் கொண்டிருக்கச்சே அதிலே இங்கிறேசுக்காறர் வஞ்சனைபண்ணி உள்ளே அழைப்பிச்சு சதிபண்ணதாய் சிறிது பேர்கள் தப்பி மறுபடி ஸ்ரீரங்கம் வந்ததாகவும் வெழுதிவந்ததென்றும் அதைக் கேட்ட மாத்திரத்திலே தொரையவர்கள் துக்க சாகரத்திலே முழுகி பசல் பத்தே ஆச்சுதென்று-தப்பு—கபுறு கொண்டுவந்த ரெண்டுசேவுகருக்கும் குடுத்த நூறுரூபாய்யையும் வாங்கிக் கொள்ளச்சொல்லி அவர்களையும் காவல் வைத்து-பாப்பய்ய பிள்ளையையும் ரொம்பவும் உதாசின பாதபிரகரம் முதலான வாடிக்கை வெகுமானம் பண்ணி அனுப்பினதாய் பனிரெண்டு மணிக்கு சேதி சொன்னாகள்.

### 1753௵ தெசம்பர்மீ 2உ ஸ்ரீமுக௵ கார்த்திகைமீ 2உ ஆதிவாரம்

இத்தனை் காலத்தாலே யெட்டரைமணிக்கி கோட்டைக்கிப் போய அங்கே பிடவை பார்க்கிற சாலையிலே உட்கார்ந்திருக்கச்சே முசே திலார்ஷசு—முசே புறக்கூனு—(Mr. Delarche—Mr. Bourquenoud) Mr. Cornel—(முசே—கொற்னே—முசே மீரான் வகையிரா வெள்ளைக் காறர்கள்—(Mr. Miran) யிருபத்தஞ்சு முப்பது பேர்கள் ஒலாத்திக் கொண்டு யிருக்கச்சே பேசிக்கொண்டிருந்தபோது—கூடலூரிலே

போடுகிற-பீறங்கிசத்தம் கேட்டுக்கொண்டு அவரவர் வெள்ளைக்காறர் யிந்த பீறங்கி போடுறசபுத்தம் கேழ்க்குறது யிது நேத்து யிங்கே நடந்த காரியத்துக்கு விரோதம் போலே காணுதென்று சொல்லிக்கொண்டு அறுபத்திமூணு பீறங்கி மூணுதணைடைக்கு சுட்டார்கள் என்று பேசிக்கொண்டு நம்முடைய பவுன்சு கோட்டை பிடிக்கப்போனவிடத்திலே யிங்கிறேசுக்காறர்களும் மமுதல்லிக்கானும் மோசம்பண்ணினார்களானபடியினாலே மோசம் வந்திருக்கிறது யிதல்லாமல் இவைகளெல்லாம் பார்த்தால் அங்கே கோட்டை பிடிக்கப்போன—நம்முடைய பவுன்சுக்கு மோசம் வந்துதென்று பாப்பய்யபிள்ளை யிப்படிப்பட்ட கபுறு நடந்தருக்க நேத்து பகலைக்கிமேலாக கோட்டைபிடிச்சார்களென்று தப்பிதமாய் வந்து சொல்லி துரையவர்களும் வெள்ளைக்காறர் காகிதம் வரட்டும் என்றும் பராமல் அவன் பேச்சை மெய்யென்று சகலமானபேருக்கும் கோட்டை அகப்பட்டுதென்று சொல்லி சகலசம்பிறமும் கொண்டாடி ராத்திரி சாமத்துக்குமேல் உடனே பொய்யென்று சேதிவந்து சொல்லி அதிலே துக்கம் அனுப்பிவிக்கச்சே யிதானிப்படித்தான் நாளது வரைக்கும் தப்பு கபுறுசொல்லி சமஸ்த்தகிறித்தியம் ராச்சியம் அயிசுவரியம் யெல்லாத்தையும் போக்கடிச்சுப் போட்டதுமல்லாமல் யின்னம் யென்ன யென்ன காரியத்துக்கு யேதுகரமாயிருக்கிறானோ தெரியுதென்றும் யிவன் மூணு வருஷத்துக்கு முன்னே சகல கஷ்ட்டமும்பட்டு யினியில்லாத தரித்திரத்தை அனுபவித்து வந்தவனுக்கு பிட்சைக்காரனை சேர்த்தால் யிதுவா செய்வான் யின்னமும் செய்வான் யின்னம் யென்ன யென்ன செய்ய விருக்கிறானோ வென்றும் யிப்படி பல விதமாய்ச் சொல்லிக் கொண்டு பேசிக்கொண்டு ஒலாத்திக் கொண்டு யிருந்தார்கள்.

ஒன்பது மணிக்கி தொரையவர்கள் வகையிரா கோயிலுக்குப் போய் பூசை கேட்டு வந்து தே-குடிச்சான உடனே நான் கும்பனீர் வற்த்தகர் வகையிரா யின்றோம் அங்கே துரையவர்கள் வந்து நின்றார்கள். நான் ஆசாரம் பண்ணி கபுறு சொன்ன வுடனே சரேலென்று மேல் வீட்டின் பேரிலேயேறிப் போனார்கள். நேத்து சாயங்காலம் யிருந்த முகவிலாசத்தைப் போலே ஒருவருஷம் யிரண்டு வருஷமாய் கண்டதுமில்லை பின்னையும் அங்கே நின்ற பேர்கள் வெள்ளைக்காறர்கள் தமிழர்களும் அந்த சாடையாய்ப் பேசிக்கொண்டார்கள்.

அஞ்சாறு நாளாய் பிடிச்சுப் பட்டணம் பாப்பய்யபிள்ளை யினாலே காயிரூபட்டு கிலேசத்தை அடைந்திருக்கிறதுக்கு யிந்த சேதி பின்னையும் அப்பிரகாசத்தைக் கொடுத்தது புழுத்தப்பியின் பேரிலே நாய் விஷ்ட்டிச்சாப் போலேயென்றும் லோகசாமித்தைதை சொல்லுகிறாப் போலே அது அல்ல பிறத்தியட்சமாய்ப் பட்டணம் பெருசுரூபம் தப்பி அலைஞ்சு யிருள்மூடி யிருக்குது. யின்னம் யென்ன நடக்குமோ தெரியாது. சுவாமி ரெட்சிக்கவேணும்.

இன்று மத்தியானத்துக்குமேல் ரெண்டுமணிக்கி தேவனாம் பட்டணம் போய் கோவற்னதோர் மேஸ்தர் யிஸ்ட்டார்கு (Mr. Stark) வினுடைய சோபுதாரன் காகிதங்கொண்டுவந்து

கொடுத்து றுக்கெ காகிதம் வாங்கிக் கொண்டு பத்து ரூபாய் இரு கொடுத்து வாங்கிக்கொண்டு போனுனென்றும் அவன் சொன்னது திரிச்சிராப்பள்ளியிலே முன் 17-உ சண்டை படாவிலே அகப் பட்டவர்கள் யித்தனை பேர் என்றும் அவர்களுக்கு காயங்கட்டு இருர்கவென்றும் யெழுதிவந்ததாய்ச் சொன்னுன் யென்றும் சொன்னுர்கள.

## 1753ஹு தெசம்பர்மீ 12உ ஸ்ரீமுகஹு கார்த்திகைமீ 21உ ஆதிவாரம்

இத்தநாள் ராத்திரி கேழ்விப்பட்ட சேதி சேத்துப்பேட்டு இல்லேதாரன் இசற்மகம்மதுகான் தகப்பன் யிங்கே யிருந்தவன் ஓடிப்போய்விட்டபடியினுலே அவனும் போயிருப்பான் யென்றும் சொன்னுர்கள்.

## 1753ஹு தெசம்பர்மீ 3உ ஸ்ரீமுகஹு கார்த்திகைமீ 22உ சோமவாரம்

இத்தனுள் மத்தியான் நான் யென் கச்சேரியிலிருக்கச்சே பதினெரு மணி வேளைக்கி பெரியண்ணநயினுர் வந்து என்னுடனே சொன்னது. பெரியதுரை அழைப்பிச்சு சேத்துப்பேட்டு இல்லேதாரன் தகப்பனிங்கே யிருந்தவன் ஓடிப்போய் விட்டானும் நீ உத்திரவாதம் பண்ணவேணுமென்று துரை சொன்னுர். அதுக்கு நான் சொன்னது. சீட்டுக்கொடுத்து அவன் ஓடிப்போனுர். நான் உத்திரவாதம் பண்ண வேண்டியதென்றும் அவன் சந்தா சாயபு மகன் வெளியே சாரிப்போய் உள்ளே வருவான் அந்தப் படிக்கிப் போறுனென்று யிருந்தார்கள் அவன் பிறகே போனுப் போலே ஓடிப்போய் விட்டான் அதுக்கு நான் செய்யவேண்டிய தென்னவென்று சொன்னதுக்கு துரை சொன்னது பாப்பய்ய பின்னை தாலூக்கு மனுஷரெல்லாம் பத்திரம் பார்த்துக்கொள்ளச் சொல்லி உன்னுடனே யெத்தனைதரம் சான்னேன். அப்படி சொல்லியிருக்கச்சே அவன் போனபடியினுலே—நீ—உத்திரவாதம் பண்ணவேணுமென்று சொன்னதுக்கு நான் சீட்டுக் கொடுத்துப் போகச் சொல்லியிருந்து போயிருந்தால் அவன் போய்விட்டால் நான் உத்திரவாதம் பண்ணுவேன் யில்லாவிட்டால் யெனக் கென்ன கவையென்று சொல்லிப்போட்டு வந்தேன். வரச்சே ஆளனுப்பி ஒழுகரையாலே யிருக்கிறுனே விசாரியென்று சொன்னுர் நல்லதென்று வந்துவிட்டேனென்று பேபாவாயாய்ச் சொன்னுன். அவர் கேட்ட சாடைக்கி நீ சொல்லவேண்டியது.. உத்திரந்தான் என்று சொன்னேன் அப்பால் தனக்கும் மஞ்சள் காமாலை வந்து யிருக்கிறதும் கிழாா நெல்லிச்செடி அவிழுதஞ் சாப்பிட்டு பத்தியம் யிருக்கிறதும் சொல்லிப் போட்டு அனுப்பிவிச்சுக் கொண்டு போனுன் துரையவர்கள் சாசனங்களிப்படி யிருக்கிறபடியினுலே பட்டணத்திலே வீட்டுக்குவீடு கொரைத் தனங்களேற்பட்டு அவனவன் ஊரிலே பண்ணுகிற அநியாயங்களுக்கு கேழ்விமுறை

யில்லாமல் அத்துதப்பி நடக்கிறதுக்து ஆச்சரியப்பட வேண்டிய தில்லை யென்று அவரவர் அங்கே யிருந்தவர்கள் சொல்லி பெண்டுகளை பிடிச்சுப் போகாதது ஒன்று தவிர மற்றதுகளெல் லாம் நடக்குறதென்று சொன்னார்கள். அதுவும் பத்துவிட்டத்திலே நடந்த தாய் நடந்த காரியத்தை வயணமாய்ச் சொன்னார்கள். காலத்தை யெண்ண வேண்டியதென்று சொன்னேனென்.

1953௵ தெசம்பருமீ 5௳ ஸ்ரீமுக௵ கார்த்திகைமீ 24௳ புதவாரம்

இத்தனாள் காலத்தாலே ஒன்பது பணிக்கு திரிச்சிராப்பள்ளிக்கி அன்பது பேர் சொலுதாதுகளும் அறுபதுபேர் சிப்பாயிகளும் மூணு ஒசியால்மார்களும் தோஸ்துமகம்மதும் போனார்கள்.

1753௵ தெசம்பர்மீ 6௳ ஸ்ரீமுக௵ கார்த்திகைமீ 25௳ குருவாரம்

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி நேத்தயதினமும் யின்றைய தினமும் பாப்பய்யபிள்ளை கோமுட்டிகள் வெள்ளாழர்கள் அகமுடையர் வகையரா வெள்ளைத்துணிமேலே போட்டுக்கொண்டு திரியுறவன் எல்லாரையும் பிடிச்சுவரச்சொல்லி யிறுநூறு முன்னூறு அன்னூறு ஆயிரம் ரெண்டாயிரம் கடன்குடென்று சொலலி அண்ணாந்தாள்போட்டு முதுகிலே கல்லெடுத்துவைத்து அடிக்கிறபேர்களையும் ஒததை கையைக் கட்டி மரத்திலே கட்டி யடிக்கிறதும் கிட்டிக்கோல் முதலான .யெமதண்டனை யென்ன உண்டோ அத்தனை நடத்துகிற விடத்திலே ஊரிலே அனேகம் பேர் வர்த்தகர் வெளியே ஓடிப்போய் விட்டார்கள். சலத்து வெங்கடாசலசெட்டி மத்து திருப்பள்ளிசெட்டி இருசப்ப செட்டி வகையிரா பின்னையும் அனேகம்பேர் வர்த்தகர்கள் பட்டணத்தையே போய்விட்டார்கள். யிப்படி அநியாயம் கதையிலே கேட்டதில்லை. ராசாக்களுடைய கதைகள் யெழுதியிருக்கிற பொஸ்தகங்களிலே கூட கேழ்விப்படயில்லை யென்றால் பாத்துதான்யில்லையேயென்று பெருசனங்கள் சொல்லிக்கொண்டார்கள்.

1753௵ தெசம்பர்மீ 7௳ ஸ்ரீமுக௵ கார்த்திகைமீ 26௳ சுக்கிறவாரம்

நாளதுமீ 16௳ அங்காரக வாரம் ராத்திரி 17௳ புதவாரம் திரிச்சிராபபள்ளிக் கோட்டையிலே முசே அரிக்கு வென்கிற (Mr Astruc)வன் திரிச்சிராப்பள்ளி கோட்டை வாசற்படியிலே யிருக்கிற வெள்ளைக்காறர்களும் துலுக்கனொருத்தன் யிருக்கிறவனை யும் உளவாக்கிக் கொண்டு அன்பதினாயிரம் ரூபாயி கொடுத்து பத்திரம் பண்ணி முசே மென்வீலுக்கு (Mr. Mainville) சொல்லி யனுப்பிவிச்ச விடத்திலே அவனுமிங்கே துரைக்கு யெழுதி

யனுப்பிவிச்சு தொரை உத்தரவின்பேரிலே பணம் அழைப்பிச்சுக் கொடுத்து 16உ அங்காரகவாரம் நாள் ரூத்திரிபோன விடத்திலே அவர்களும் கோட்டை வாசல் திறந்து கொடுத்து அவர்களும் உளவாயிருந்து உள்ளே போனவிடத்திலே கோட்டை வாசலிலே சிறுது பேர்களை வைக்காமல் மேல் அலங்கம் கொத்தளங்கள் பேரிலே யேறிக்கொண்டிருக்கிற பீறங்கிகளை அகறுத்தையிலே தள்ளினார்களாம் யிவர்கள் அபிப்பிறயம் கோணப்பறங்கியென்கிற வொலேந்தேனும் முசே லம்பேரும் அவரவர் பவுன்சுடனே வருகிறவர்களை கோட்டை வாசலை கட்டிக்கொண்டு பத்திரமாய் யிருக்கச்சொல்லி யிவர்கள் கொண்டுபோன மருந்து குண்டு சாமான்களையும் கோட்டை வாசலிலேதானே வைத்துப்போட்டு பத்துப்பேரையும் வைத்துப்போட்டுப் போனார்கள் கோணப் பறங்கி—லம்பேர் வகையிராக்கள் வராதே போனார்கள் அதுக் குள்ளே கோட்டையிலே யிருந்த மேஸ்தர் லாரென்சு யென்கிற மேசர் தன் பவுன்சை கோட்டை வாசலுக்கு அனுப்பிவிச்சு கோட்டை வாசலை சாத்திப்போட்டு வருகிறவர்களையும் வராமல் பண்ணிக்கொண்டு மருந்துக்குண்டு சாமான்களையும் ஆக்கிற மிச்சுக்கொண்டிருந்தார்கள்.

மேசர் சிறிது பவுன்சை கூட்டிக்கொண்டு நறனுலும் நிமிஷப் பீறங்கியினாலேயும் அலங்கத்தின்பேரிலே யிருக்கிறவர்களை சுடங் காட்டிலும் யிவர்களுக்கு பீறங்கியில்லாத்தினாலேயும் துப்பாக்கி குண்டு அத்தனை தூரம் ஓடாததைத் தொட்டும் யிவர்களுக்கு நிறுவாகமில்லாமல் அகறத்தையிலே குதிச்சு ஓடிப்போனவர்கள் போக மைத்தவர்கள் நானூறுபேர்கள் மட்டுக்கும் அவர்கள் கையில் கைப்பிடியாக்கப்பட்டார்கள் யென்றும் ஒன்பது ஞாசியல்மார்கள் அகப்பட்டவர்களென்றும் முசே மென்வீல் கொமாந்தமாயிருந்தவன் தப்பி ஓடிவந்து பாளையஞ்சேர்ந்தானென் றும் எழுதின காகிதம் முந்தாம்நாள் வந்து சேர்ந்தவுடனே அவன் ரொம்ப பிறயாசப்பட்டானென்று முந்தாம்நாள் ராத்திரிதானே அவன் மகனுக்கு ஒபீசியால் உத்தியோகமும் குடுத்து மறுக்கி காகிதமும் எழுதி நேத்து காலமே அன்பதுபேர் வெள்ளைக்காறர் கள் மூனுபேர் ஒபீசியால் மார்களும் தோஸ்து முகம்மது வகை யிரா பாறுக்காறர்கள் அறுபது எழுபது பேர்களையும் அனுப் பினதாய்ச் சொன்னார்கள்—அஞ்சாறுநாளாய் விசிதமாய்கேழ்விப் பட்ட பிற்பாடு யின்றையதினம் யெழுதிவைத்தேன் மனுஷர் யெத்தனத்திலே தாழ்த்தியில்லாமல் பிறயத்தனம் பண்ணுகிறதும் அப்படித்தான். கோட்டைகைவசமானதும் அப்படித்தான் தெய்வ யெத்தனமும் சகாயமுமில்லாலததைத் தொட்டு அதிலே வெகுசனசேதமும்வந்து கோட்டையையுங்கைக்கு வராமல் அபசெய்மும் வந்து நின்றது. மறுபடி பழைய நிலையிலே நிற்கிறதே பிறயாசையாய் வந்து நின்றது. பிறபுவினிடத்திலே நியாயமில்லாமல் அநியாயம் பரம்பரமாய் நடக்கிறபடியினாலே செய்ம் எப்படி வரும் பிரபு நியாயமாய் நடத்தயெப்போ புத்தி வருதோ அப்போ செயகாலமும் வருமென்று நன்றாய்த்தெரியும் செய்மும்வரும் சந்தேகமில்லை.

## 1753ஞ் செப்தம்பர்மீ 8உ ஸ்ரீமுகஞு கார்த்திகைமீ 17உ சனிவாரம்

இத்தனாள் காலத்தாலே யெட்டு மணிக்கு கோட்டைக்கிப் போனவிடத்திலே வெள்ளைக்காறருக்கு பண்டிகை தினமானபடியினாலே தொரைகோயிலுக்குப் போய் பூசைகேட்டு வொன்பது மணிக்கு வந்து தேகுடுச்சவுடனே பெண்சாதியை அழைத்துக் கொண்டு ஆலோசனை பண்ணிக்கொள்ள மேல்மெத்தை விட்டின் பேரிலேயேறிப்போனார்.

பாப்பய்யபிள்ளை கோயிலுக்குப் போறதுக்கு சத்துமுன்னே போய் முராரிராயன் ஞாதி சிவோசி கோறபடாவென்கிறவன்-யிங்கே யிருக்க- விஷ்கருஷைபண்ணியிருந்த" சம்மதியாமே அவனுடனே கூடமுகுந்தராயனென்ற பிறுமணனொருத்தனிருந்தவனை முராரிராயனுக்கு கொடுக்க வேண்டிய நாலு லட்சம் ரூபாய்க்கி யிப்போ சத்தியாய் லட்சம் ரூபாய் கொடுக்கவும் மைத்த மூனு லட்சம் ரூபாயிக்கு-நந்திராசா அனுப்பின உடமையை அவரண்டைக்கி அனுப்பி அவரை மூனு லட்சம் ரூபாய் முராரிராயனுக்கு குடுக்கச் சொல்லி உண்டிக்கை காகிதமெழுதிக்குடுக்கவும் யந்தப்படி யோசனை பண்ணி தீர்த்துப் பணம் அறுவாகிற நிமித்தியம் பட்டணத்திலே உள்ள கும்பினீர் புதுவர்த்தகர் பழய வர்த்தகர்கள் சில்லரைவர்த்தகர் சவுளிக்கடைக்காறர் பலசறக்குக் கடைக்காறர் காசுக்கடைக்காறர் வகையிரா வெள்ளைத்துணி மேலே போட்டவனையெல்லாம் பிடிச்சு யெமதண்டனையிலே யிறக்கிக்கொண்டு அடிகள் அண்ணாந்தாள்கள் ஓதைகள் கைகுத்து அடிக்கிறது ஒத்தைவிரலிலே நிறுத்தி முதுகிலே கல்வைக்கிறது கிட்டிக்கோல்கள் முதலான தெண்டனைகளெல்லாம் செய்து பணம்வாங்கிறதினாலே எழுபதாயிரம் ரூபாய் என்பதினாயிரம் ரூபா சேருகிறதுக்குள்ளே பட்டணத்து பாத்தகர்கள் ஊரைவிட்டு ஓடிப்போன பேர்களும் யிப்படி பதினைந்து நாள் நடக்கங்காட்டிலும் யிருந்தப் பணம் வருகிற மட்டுக்கும் அரும்பாத்தபிள்ளை சாவடியிலே பரஸ்தானம் பண்ணிக்கொண்டு யிருக்கிறேனென்று முகுந்தராயன் யிருந்து பாப்பய்யபிள்ளை கையிலே லட்சம் ரூபா மட்டுக்கும் வாங்கிக்கொண்டு யினிமேலிவர்களுக்கு ஆலில்லாமலிருக்கிற அடியும் யிதுக்குத் தானே பட்டணத்தைப் பண்ணின அயினாருனுகள் முதலானதுகளெல்லாம் அறிந்துகொண்டு யினிமேலிவர்கள் கையில் பணம் பிறப்படமாட்டாதென்று தீர்த்துக்கொண்டு முராரிராயனுக்கு யிவ்விடத்து சம்மதியெல்லாம் யெழுதியனுப்பி உத்தரம் அழைச்சுக் கொண்டு சிவோசி கோறபடா யென்கிறவனிடத்திலே அடகுயிருக்கிறவனைச்சே அவனையும் சேத்து ராத்திரி யெட்டுமணிக்கு அரும்பாத்தபிள்ளைசாவடிக்கி ரெண்டாம்பேர் அறியாமல் திருட்டுத் தனமாயனுப்பிச்சு கசானா கொண்டு போனதுக்கு வந்ததென்று எண்பிச்சு அன்னூறு குதிரைகளை அழைப்பிச்சு திருவீதி அந்த வட்டாரங்களிலே யிறநூறு குதிரையும் அப்பால் திருவண்ணை நல்லூர் அந்த வட்டங்களிலே முன்னூறு குதிரையும் வைத்து யிந்தப் பணங்கள் தட்டு முட்டு சாமானுகளெல்லாம் கிறமேனா

திருவண்ணெல்லூர் அண்டையிலே அனுப்பிப்போட்டு சறூரா யிருந்து நேத்துருத்திரி விநாயகப்பிள்ளை சுக்கிறவாரத்துக்குப் போயப் பிள்ளையாரை யெழுந்தருளப்பண்ணி சம்பிறமம் பண்ணி னதுக்கு கூடவந்திருந்து பலிரெண்டு மணிக்கு விநாயகப்பிள்ளை ம்பாய் படுத்துக்கொண்டார். அதன் பிற்பாடு திருவிதியண்டை யிலிருந்த யிறநூறு குதிரைக் காறரகளும் வந்து அரும்பாத்தபிள்ளை சாவடிக்கி ஒருநாழிகை வழி மின்று சொல்லி அனுப்பி யிவர்களிவ் விடம் விட்டுப்பிறப்பட்டுப்போய் அந்த யிறநூறு குதிரைக்காற ருடனே கூட்டிக்கொண்டு அப்பால் ரும்பாக்கத் தண்டையிலே பெண்ணையாத்தங்கரையோரத்திலே போகச்சே முன்னூறு குதிரைக் காறரகளும் வந்தார்கள் ஆக அன்னூறு குதிரைக்காறரை களையும் கூட்டிக்கொண்டு ராம்பாக்கம் வகையிரா கும்பினீர் கிராமங்கள் மாடுகளையும் ஒட்டிக்கொண்டுபோய் பாப்பய்ய பிள்ளைக்கும் அப்புராதலிக்கும் திட்டக்குடி பெண்ணுடகதிலிருந்தும் வந்த சமுக்காளத்தையும் கூட கொண்டு கொண்டு நடத்துவிட் டார்கள் யென்று சேதி வந்தது.

பாப்பய்யபிள்ளைக்கி முன்னே விநாயகப்பிள்ளைசாவடியிலிருந்து வந்து சொல்லி அப்பால் பாப்பய்யபிள்ளை போய் சொன்னதின் பேரிலே பெண்டாட்டியை அழைத்துக்கொண்டு யோசனை பண்ணப் போனதாய்ச் சொன்னார்கள். முருசிருயன் வெகுபணம் லக்ஷலக்ஷக் கணக்காய் கிறகிச்சு சுவாரசியம் யினிமேல் யில்லை யென்று பாய்விரித்தானென்று சொல்லிக்கொண்டார்கள்.

